உ

# இந்தியத் தாய் நிலை.



கவிராஜ பண்டிதர்
**ஜெகவீரபாண்டியனார்**
இயற்றியது.

மதராஸ், சி. வரதராஜுலு நாயுடு பிரஸில்
பதிப்பிக்கப் பெற்றது.

மன்மத ௵ ஆவணி ௴.

**1955.**

# இதில் அடங்கி யுள்ளவை.

---

## உற்ற கடமை.

பெற்ற தாயெனப் பிறந்தநன் னாட்டினைப் பேணி
உற்ற நீதியின் உயர்நலம் உடையராய் ஒழுகி
மற்ற நாடுகள் மாண்புடன் மதித்திட நடந்து
கற்ற ஆற்றலை நாட்டினுக்கு ஆற்றுதல் கடனே.

---

## பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 47 | 17 | அன்ன | அன்னை |
| 120 | 15 | விசிஞ்ய | விஞ்சிய |
| 182 | 2 | மள்ளவர் | மன்னவர் |

உ

# முகவுரை.

இமயம் முதல் குமரிவரை விரிந்து பரந்துள்ள இந்நில மண்டலம் பரதகண்டம் என முன்பு பெயர் பெற்றிருந்தது. இந்தியா என இடையே ஒரு பெயர் வந்து புகுந்தது. பண்டைக் காலத்தில் இது இங்கு வழங்கவில்லை. இந் நாட்டில் இருந்த நம் முன்னோர்கள் இப்படி ஒரு பெயரைத் தம்காதில் கேட்டிரார். பழமையில் இல்லாத ஒரு பேர் கிழமையாய் வந்து வளமை தோய்ந்து வழங்கப்படுகிறது. இது இங்கே எப்படி நேர்ந்தது? எப்பொழுது சேர்ந்தது? இப் பேர் இட்டவர் யார்? என இன்னவாறு வருகிற இந்தக் கேள்விகளுக்கு யாரும் தெளிவாக எளிதில் பதில் சொல்லமுடியாது.

இந்த நிலமண்டலத்தை ஹிந்து எனப் பாரசீகரும், இந்தஸ் எனக் கிரேக்கரும் கூறிவந்துள்ளனர். சிந்து நதியின் தென்பால் வாழ்ந்தவர்களை வடக்கே இருந்தவர் சிந்துக்கள் என வழங்கினர். அவ்வழக்கம் இந்துக்கள் என மாறியது; பின்பு அவர் உள்ள நாடு இந்தியா என வந்தது என்று இந்தத் தேச சரித்திரங்களை எழுத நேர்ந்த ஆங்கிலேயர்கள் இவ்வாறு பாங்கோடு இசைத்து வைத்துள்ளனர். இன்னும் சிலர் வேறு பல காரணங்களைக் கூறுகின்றனர். அவை யாவும் வெறும் யூகங்களாகவே காணப்படுகின்றன.

கால வேற்றுமையாலும், இடபேதங்களாலும், வேறு வேறு வகையாய்ப் பிரிந்து வாழுகின்ற மக்கள் வரைந்து கூறி வருகிற மொழிகளின் மாறுதல்களாலும் எத்தனையோ பெயர்கள் இடையே வந்து நுழைந்து விடுகின்றன. விடவே அதன்படி பழகிப் பேசிப் பாராட்டி வருகிறோம். பரம்பரை

வழக்கில் வந்தது உரம்பெற்று நிற்கின்றது; நிற்பினும் உற்ற பழமை உரிய கிழமையாய் ஒளி பெற்றுள்ளது.

## பரத கண்டம்.

ஆதியில் இந்நாட்டுக்கு அமைந்திருந்த பேர் பரதகண்டம் என்பதே. இப்பொழுதுள்ள குமரி முனையின் எல்லையைக் கடந்து நெடுந்தூரம் விரிந்து பரந்து இது சிறந்திருந்தது. வளமான பல நாடுகளை யுடையதாய்த் தென்பால் யாண்டும் நெடிது நீண்டு நிலவியிருந்த பெரிய நிலப் பரப்பைக் கடல் கவர்ந்து கொண்டது. கொள்ளவே குமரி தென் எல்லையாய் நின்றது. வடக்கே இமயமலை தெற்கே குமரி நிலை கிழக்கும் மேற்கும் கடல்கள் ஆகிய இந்த எல்லையுள் அடங்கியுள்ள நிலமண்டலமே இதுபொழுது நமது தேசமா யுள்ளது.

இந்தியா என்று புதிய பெயராலும், பரதகண்டம் எனப் பழைய பேராலும் இத்தேசத்தை நேசமாய் நாம் அழைத்து வருகிறோம். நாவலந்தீவு என இப்பூவலயத்தைப் புராணங்கள் புகழ்ந்துள்ளன. பாரதம் என்னும் பெயர் உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் நிலவிவருகின்றது.

பரதன் என்று பண்டு ஒரு அரசன் இருந்தான். அவன் சிறந்த நீதிமான். அரிய பல இனிய நீர்மைகள் அவனிடம் மருவி யிருந்தன. அறிவு அடக்கம் அமைதி அருள் ஆண்மை ஈகை வீரம் ஞானம் முதலிய உயர்நலங்கள் யாவும் ஒருங்கே வாய்ந்து பெருங்குணக் குரிசிலாய் அவன் விளங்கியிருந்தான். அவனுடைய நீர்மைகள் சீர்மை நிறைந்திருந்தன.

அந்த மன்னவன் ஆணைவழி இந்த நிலம் முழுவதும் உரிமையுடன் மருவி யிருந்தது ஆதலால் அவன் பெயரால்

பரதகண்டமென இது உறவுகொண்டு வந்தது. அவனுடைய வழியிலிருந்து பின்பு விழுமிய அரசர் பலர் தோன்றினர்.

விரிந்து பரந்திருந்த இந்த நிலமண்டலம் காலகதியில் பலவாறு பிரிந்து வர நேர்ந்தது. அந்தப் பாகங்களைத் தனித் தனியே அரசர்கள் ஆள அமைந்தனர். நாளடைவில் ஐம்பத்தாறு தேசங்கள் ஆயின. அயலே வருவன காண்க.

1. அங்கம்
2. அருணம்
3. அவந்தி
4. ஆந்திரம்
5. இலாடம்
6. யவனம்
7. ஒட்டியம்
8. கருசம்
9. கலிங்கம்
10. கருநடம்
11. கன்னடம்
12. காசம்
13. காசிமீரம்
14. காந்தாரம்
15. காம்போசம்
16. கிராதம்
17. குடகம்
18. குந்தளம்
19. குரு
20. குலிந்தம்
21. கூர்ச்சரம்
22. கேகயம்
23. கேரளம்
24. கொங்கணம்
25. கொல்லம்
26. கோசலம்
27. சகம்
28. சவ்வீரம்
29. சாலவம்
30. சிங்களம்
31. சிந்து
32. சீனம்
33. சூரசேனம்
34. சோழம்
35. சோனகம்
36. திராவிடம்
37. துளுவம்
38. தெங்கணம்
39. நிடதம்
40. நேபாளம்
41. பாஞ்சாலம்
42. பப்பரம்

| | | | |
|---|---|---|---|
| 43. | பல்லவம் | 50. | மலையாளம் |
| 44. | பாண்டியம் | 51. | மாளவம் |
| 45. | புலிந்தம் | 52. | யூகந்தரம் |
| 46. | போடம் | 53. | வங்கம் |
| 47. | மகதம் | 54. | விராடம் |
| 48. | மச்சம் | 55. | விதர்ப்பம் |
| 49. | மராடம் | 56. | விதேகம் |

என இந்த நிலமண்டலம் இவ்வாறு பிரிவு கொண்டிருந்தது. இருந்தாலும் யாண்டும் உறவு கொண்டு ஒரு முகமாய் ஒளி புரிந்து வந்தது. செல்வ வளங்கள் எங்கும் செழித்திருந்தன.

இத்தேச மக்களிடம் சிறந்த பண்பாடுகள் நிறைந்திருந்தன. தெய்வ சிந்தனை தேச பத்தி தருமநீதி கருணைப் பண்பு முதலிய புனித நீர்மைகளையுடையராய் யாவரும் இனிது வாழ்ந்து வந்தனர். நித்திய அநித்தியங்களை உய்த்துணர்ந்து தத்துவ நோக்கங்களில் பலர் தலை சிறந்து நின்றனர்.

தன்னை அறி; தலைவனை உணர்! என்னும் ஆன்ம விவேகங்கள் மேன்மையாய் மேவிப் பான்மை சுரந்து வந்தன.

இம்மை வாழ்வு எவ்வளவு உயர்ந்திருந்தாலும், எத்தனை வளங்கள்நிறைந்ததாயினும்நிலையில்லாதது; விரைந்து அழிந்து போவது என உலக நிலைகளை ஊன்றியுணர்ந்து என்றும் குன்றுத பேரின்பப் பேற்றையே யாவரும் அடைய வேண்டும் என ஆன்றோர் பலர் ஈண்டு அறிவுறுத்தி வந்துள்ளனர்.

நெருநல் உளன் ஒருவன் இன்று இல்லை. (திருவள்ளுவர்)

இன்றுளார் நாளை இல்லை. (திருநாவுக்கரசர்)

நேற்றிருந்தாள் இன்றுவெந்து நீருனாள். (பட்டினத்தார்)

நேற்றுளார் இன்று மாளா நின்றனர். (தாயுமானவர்)

என்று இன்னவாறு வருவன எல்லாம் உண்மை நிலையை உணர்த்தி உறுதி நலம் காண வந்தன. சாகு முன் விவேக மாய் என்றும் சாகாத விழுமிய நிலையை அடைந்து கொள்க என்னும் தெளிவுகள் எவ்வழியும் விழி தெரிய நின்றன.

இன்றைக்குச் செத்தால் நாளைக்கு இரண்டு நாள் என்னும் இவ்வார்த்தை இன்றும் இந்நாட்டுப் பாட்டிகள் வாயிலி ருந்து வெளிவருகின்றது. இவ்வுலக வாழ்வு எவ்வகையிலும் வெவ்விய துயரங்களை யுடையது; நிலையற்றது; புலையாட் டமானது; நிலையில்லாத இதை நிலை என்று நம்பி வீணே இழிந்து அழிந்து போகாதீர்! காலம் உள்ள பொழுதே உயிர்க்கு ஊதியத்தைக் கருதிக் கொள்ளுங்கள் என உறுதி நலங்களை நூல்கள் பெரிதும் குறிக்கோளுடன் கூறியிருக் கின்றன. வாழ்வைப் புனிதமாக்கிப் பெற்ற பிறவியைப் பெரும் பயனுடையதாய்ச் செய்ய வேண்டும் என்றே மேலோர் யாண்டும் வேண்டியிருக்கின்றார். அறிவும் திருவும் மருவி இருமையும் இன்பம் பெருகி வரவே வாழ்வைப் பேணி ஞான சீலங்களுடன் நன்கு வாழ்ந்து வந்துள்ளனர்.

புத்தர் முதலிய உத்தம ஞானிகள் இத்தேசத்தில் தோன்றி எத்தேசங்களும் தேசுபெறச் செய்துள்ளனர். இவரது ஞான ஒளிகள் ஞாலம் எங்கணும் பரவியுள்ளன. சிலோன், பர்மா, சையாம், திபேத், கம்போடியா, அசாம், ஜாவா, சைனு, ஜப்பான் முதலிய தேசங்கள் எல்லாம் புத் தருக்குக் கோயில்கள் அமைத்து வைத்து இவரைத் தெய்வ மாகப் போற்றி வழிபாடுகள் செய்து வருகின்றன.

ஆசிய சோதி என்று (Light of Asia) பேரிட்டு இவ

ரது ஜீவிய சரித்திரத்தை எட்வின் அர்னால்டு (Edwin Arnold) என்னும் ஆங்கில அறிஞர் ஒரு காவியமாப் பாடியிருக்கிறார்.

சிறந்த கலைஞானங்களையும் உயர்ந்த தரும நீதிகளையும் நிறைந்த பண்பாடுகளையும் அரிய ஆத்தும போதனைகளையும் பண்டு தொட்டே எந்நாடுகளுக்கும் இந்நாடு வழங்கி வந்துள்ளமையால் புண்ணிய பூமி, ஞானவுலகம் என இந்நாட்டை மேல்நாட்டார் யாவரும் வியந்து புகழ்ந்துள்ளனர்.

"Europe has always owed to Oriental genius its divine impulses" (Emerson)

"கீழ் நாட்டு ஞானிகளிடமிருந்து தெய்வீக உணர்ச்சிகளைப் பெற்றிருத்தலால் ஐரோப்பா என்றும் அதற்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளது" என அமெரிக்க மேதையான எமர்சன் இவ்வாறு கூறியிருக்கிறார். ஆதிமுதல் நீதி நெறிகளைத் தழுவித் தரும சீலங்களில் பழகி மறுமை நோக்கோடு ஒழுகி வந்திருத்தலால் இத் தேச மக்களுக்கு இயல்பாகவே அரிய பல பெரிய நீர்மைகள் தனியே அமைந்திருக்கின்றன. உழவுத் தொழிலைச் செய்து வருகிற சாதாரணக் குடியானவரிடமும் மேலான பண்பும் தெய்வ விசுவாசமும் மேவி நிற்கின்றன. இந் நிலைகளை அயல் நாடுகளும் விழைந்து புகழ்ந்து வியந்து வந்துள்ளன.

"Lo, the poor Indian! whose untutored mind
Sees God in clouds, or hears him in the wind." (Pope)

"இதோ பார் கல்லாத ஏழை இந்தியன் மேகங்களில் கடவுளைக் காண்கிறான்; காற்றில் அவரது ஒலியைக் கேட்கிறான்" என போப்பு என்னும் ஆங்கிலக் கவிஞர் இங்ஙனம் பாடியிருக்கிறார். இதனை இங்கே நன்கு சிந்திக்க வேண்டும்.

தெய்வீக நிலைகளில் இத் தேச மக்கள் பழகி வந்துள்ள பான்மைகள் அதிசய மேன்மைகளாய் விளங்கி நிற்கின்றன. பாரத மக்கள் சிறந்த பண்பாடுகளுடையவர் என உலகம் புகழ்ந்து போற்ற உயர்ந்து வந்துள்ளனர்.

இவ்வாறு உயர்ந்த நிலையில் ஒளி புரிந்து வந்த தேசம் இதுபொழுது பரிதாப நிலையில் பழி படர்ந்துள்ளது. பழைய காலத்திலிருந்த சீர்மை சீர்மைகளைக் கருதியுணருந்தோறும் உள்ளம் உவகை யுறுகிறது; இன்றுள்ள நிலைமைகளை எண்ணிக் காணுந்தோறும் கண்ணீர் வருகிறது. பெண்களுக்குத் துன்பம் நேர்ந்தால் ஒப்பாரி வைத்து அழுகின்றனர்; அதனால் நெஞ்சத் துயரம் கொஞ்சம் குறைகின்றது. "சொல்லி அழுதால் துயரம் எல்லாம் தீருமடி" என்று சொல்லிக் கொண்டே அழுகணிச் சித்தர் பல ஞானப் பாடல்களைப் பாடி மானச நிலைகளை விளக்கியிருக்கிறார்.

தேசத்தின் மேலுள்ள நேசத்தால் நெஞ்சம் இரங்கி இந்நூல் பாட நேர்ந்தது. நல்ல தன்மைகளை இழந்து பொல்லாத புன்மைகளில் இழிந்து உழலுதலால் மனித சமுதாயம் எவ்வழியும் அல்லல்களில் அழுந்தி அலமருகின்றது. அறிவும் திருவும் அமைதியும் செழித்துத் தழைத்து வந்த நாட்டிலே அறியாமையும் வறுமையும் அவலமும் கிளைத்துக் கலித்து ஓங்கி நிற்கின்றன. உலக வாழ்வு புலையாயிழிந்திருக்கிறது; உயிரின் கதி துயரமாய்த் தொலைந்து போயுள்ளது. இம்மையும் இழந்து மறுமையும் ஒழிந்து வெம்மை நெறிகளில் உழந்து மக்கள் எங்கணும்மறுகியுழலுகின்றனர்.

எம்மையுயர் நலங்களையும் எளிதாக
இனிதெய்தி இசைகள் தோய்ந்து

வெம்மைநிலை யாதுமே எவ்வழியும்
மேவாமல் மேன்மை வாய்ந்து
செம்மையாய் வாழ்ந்துவந்த சீரியவாழ்வு
அத்தனையும் சிந்தி அந்தோ
இம்மையின்றி மறுமையின்றி இந்தியா
இழிந்துளதே என்னே அம்மா!

என்று பாரதமாதாவை நோக்கிப் பரிந்து முறையிடும் படி பரிதாபங்கள் நிறைந்திருக்கின்றன. நாடு என்ப நாடா வளத்தன என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பாடும்படி பல வளங்களும் பெருகி ஒளி மிகுந்து உயர்ந்திருந்த நாடு இளிவாய்ப் பொலிவிழந்துள்ளது.

ஒரு குடி பெருமை யுறுவதும் சிறுமை அடைவதும் அதில் தோன்றினவர்களுடைய நிலைமைகளால் நேருகிறது. ஒரு தேசமும் அவ்வாறே அதில் வாழ்ந்து வருகிற மக்களு டைய நிலைமை நீர்மைகளின் உயர்விழிவுகளுக்குத் தக்க படியே தலைமையும் தாழ்வும் முறையே பெற்று நிற்கிறது.

அறிவு ஆற்றல் உறுதி ஊக்கம் நேர்மை முதலிய நிலை களில் தலைசிறந்துள்ள மக்களைப் பெற்றுள்ள நாடு உலகில் உயர்ந்து ஒளி மிகுந்து விளங்குகிறது. நல்ல பண்பாடுகள் நன்கு அமையாத மாந்தரை மருவியிருக்கும் நாடு புண்பாடு கள் பெருகிப் பொலிவிழந்துள்ளது. நாடு உடல் போல்வது; அதில் வாழும் மக்கள் உயிர்போல் உள்ளனர். உயிர் இனிய சீர்மைகள் மருவி யிருப்பின் அவ் வுருவம் எல்லாராலும் மதித்துப் போற்றப் படுகிறது. அங்ஙனம் இல்லையாயின் அது எள்ளி இகழ்ந்து தள்ளப் படுகிறது.

தீய நிலமாயிருப்பினும் அங்கே நல்லோர் உறையின் அது நல்ல நாடாய் விளங்குகிறது; நல்ல நிலனே ஆயினும்

அங்கே தீய மக்கள் இருப்பின் அது தீய நாடாய் வை
வுறுகிறது. இதனால் உலகநிலையை உணர்ந்து கொள்கிறோம்.

இராமர் போன இடம் அயோத்தி என்பது பழமொழி. இது அரிய பல மதிநலங்களை உணர்த்தியுள்ளது. நல்ல பண் பாடுகள் அமைந்த உத்தமர்களைப் பெற்றிருப்பின் அந்த இடம் காடாயிருந்தாலும் வீடும் பெருமையும் நிறைந்து ஒரு புண்ணிய நிலையமாய்ப் பொலிந்து விளங்கும் என்பது தெளிந்துகொள்ளவந்தது. புனிதரால்நாடு இனிமையாகிறது.

தேவர்கள் வாழுகிற இடத்தைச் சுவர்க்கம் என்று சொல்லுகிறோம். சுவர்க்கம் என்னும் சொல்லுக்கு நல்ல இனம் வாழும் நிலம் என்பது பொருள். சு=நன்மை. வர்க்கம்=இனம். நல்ல அறிவுகள் வாய்ந்து புண்ணியசீல ராய் உயர்ந்துள்ளமையால் அவர் வாழும் நிலம் பொன்னுல கம் எனப் புகழ் மிகப் பெற்றது.

சத்தியம் தருமம் நீதி முதலிய உத்தம நிலைகளில் இந் நாட்டு மக்கள் முன்னாள் உயர்ந்து வாழ்ந்து வந்துள்ளனர். இந்நாள் அவற்றை இழந்து நிற்கின்றனர். பொறாமை குரோதம் பொய் முதலிய நீசப் புலைகளே யாண்டும் நெடிது பரவி எவ்வழியும் விரிந்து நிற்கின்றன. நல்ல மன நிலைகளை இழந்து போனதால் மக்கள் மாக்களாய் இழிந்து உழலுகின்றனர். இழிவுகள் அழிவுகளாய் அடர்ந்துள்ளன.

நேர்மை வாய்மை முதலிய சீர்மைகளை எவரிடமும் காண முடியவில்லை. நல்ல உண்மையாளர்கள் தோய்ந்து புண்ணிய பூமி என்று புகழ் மிகப் பெற்றிருந்த நாடு பல வழிகளிலும் இழிந்து புலைகள் படிந்து நிலை குலைந்துள்ளது.

"பாரதமே! நீ இந்தப் பாரதனில் சீர்மிகுந்து பலரும்

போற்றப், பேரடைந்து நின்ற நிலை பிழையடைந்தின் றுள்ளதே பீழை என்னே!"

என்று நாளும் பரிந்து புலம்பும்படி பழி நிலைகள் படர்ந்து அடர்ந்திருக்கின்றன. வீரம் குன்றி, ஞானம் பொன்றி, மானம் இன்றி, ஈனமாயிழிந்து ஊனமாயுழலும் காட்சிகளே எவ்வழியும் நீட்சியடைந்து நிலவுகின்றன.

அறிவுநலம் கனிந்த உயர்ந்த குறிக்கோள்கள் ஒழிந்து போயின; பொறி வெறிகளே எங்கும் பொங்கி நிற்கின்றன. ஞானசீலங்களால் தழைத்துச் செழித்திருந்த நாடு ஈனச் சூழல்களால் இழிந்து கழிந்து கிடப்பது மிகுந்த பரிதாபமாயுள்ளது. பழைய காலத்தில் பாரத தேசம் விழுமிய நிலையில் விளங்கி யிருந்தமையால் சீனம் யவனம் முதலிய வெளிநாட்டவரும் ஈண்டு விழைந்து வந்து பல இடங்களையும் உவந்து கண்டு அறிவு நலங்களை அடைந்து போயினர்.

அன்று பொன் கொழிக்கும் பூமியாய்ப் பொலிந்திருந்தது; இன்று மண் கொழித்துப் பசியும் பட்டினியுமாய் மறுகிக் கிடக்கிறது. மனம் போல வாழ்வு என்ற பழமொழிப்படி இன்றைய மக்களின் மன நிலைகளுக்குத் தக்கபடி நிலமும் மாறி நிற்க நேர்ந்தது. உள்ளம் நீர்மையாய் உயர எல்லாம் சீர்மையா யுயர்ந்திருந்தன; அது தாழ யாவும் கீழ்மையாய்த் தாழ்ந்து போயின.

"India was once a golden land, because Indians then had a heart of gold. The land is still the same but is a desert because we are corrupt." (M. K. G.)

"இந்தியா ஒரு காலத்தில் பொன் உலகமாய்ப் பொலிந்திருந்தது; அதற்குக் காரணம் அப்பொழுதிருந்த

மக்கள் மனம் பொன் போல் உயர்ந்திருந்தது; அதே நிலம் தான் இப்பொழுதும் இருக்கிறது; ஆனால் பாலைவனம் போல் பாழ்பட்டு உள்ளது; நாம் பிழை வழிகளில் இழிந்து பழி படிந்திருத்தலே இத் தாழ்வுக்குக் காரணம்'' எனக் காந்தியடிகள் இவ்வாறு இந்த நாட்டின் அவல நிலையைக் கவலையோடு சுட்டிக் காட்டியிருக்கிறார். கரப்ட் (corrupt) என்னும் ஆங்கிலச் சொல் இழிவு பழுது கேடு என்னும் பொருள்களை உணர்த்தி வருதலால் நம்மிடம் படிந்துள்ள மாசுகளையும் நீசங்களையும் யோசனையோடு அறிந்து கொள்ளலாம். மக்கள் மாசு நீங்கி நல்லவர்களாய் உயர்ந்தால் தேசமும் உயர்வாய்ச் சிறந்து விளங்கும். நாட்டின் மேன்மையெல்லாம் நாட்டுள் வாழும் மக்களுடைய மேன்மைக் குணங்களால் மேவி வருதலால்பான்மைகள்தெரிய வந்தன.

தரும நீதிகளில் உயர்ந்திருந்த சிறந்த அரசர்களால் இந்த நாடு முன்பு நன்கு பாதுகாக்கப்பட்டு வந்தது. உரிய வேந்தர்கள் ஒருங்கே ஒழிந்து போனமையால் அந்நியர் கைகளில் சிக்கி இந்நாடு அவலம் அடைய நேர்ந்தது. ஆவலாய் வாழ நாடி வந்தவர் காவலராய்க் காலூன்ற நேர்ந்தனர்.

இறுதியில் மேல் நாட்டார் இந்நாட்டின்மேல் நாட்டம் கொண்டார். அவருள் ஆங்கிலேயர் தலைமையாய் ஈங்கு அமைந்து நின்றனர். நாடு அடிமையாய் அடங்கியிருந்தது. ஆட்சிமுறையில் ஓரளவு அவர் இங்கே மாட்சி புரிந்துள்ளனர். கால வேகத்தால் அவரும் குடிவாங்கிப் போயினர். அடிமை நாடு என்ற பழி நீங்கியது; தலைமை நாடு என்னும் புகழ் ஓங்கியுள்ளது. வெள்ளைக்காரன் போட்டுப் போன வெளிச்சத்திலேயே ஆட்சி இது பொழுது ஒரு வகையாய் நடந்து வருகிறது. இந்நாட்டுக்குத் தனி உரிமை

யாயிருந்த பழைய ஆட்சி முறைகளை விழுமிய நிலையில் அடையவில்லை. நல்ல நீர்மைகள் தோய்ந்து உள்ளமே சான்ருக எல்லாரும் சீர்மையாய் வாழச் செய்வதே சிறந்த ஆட்சியாம். மனிதன் பழகிய அளவே எதையும் செய்ய நேர்கிருன்; அதையே பெரிதாக் கருதிக் கொள்ளுகின்ருன்.

வெள்ளையரிடமிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டிய நல்லதன்மைகள் பல. மன நேர்மை, மரியாதை முறை, காலம் தவருமல் கருமம் புரிதல், தேச நேசம், தாய்மொழி ஆர்வம், வாய்மொழி வரம்பு, கடமையைக் கருதிச் செய்வது முதலிய இயல்புகளை அவரிடமிருந்து சரியாக நம்மவர் அறிந்து கொள்ளவில்லை. மயலான செயல்களையே மருவிக் கொண்டனர். காலுறை அணிதல், மேலுறைவனைதல், கழுத்துப்பட்டை புனைதல், தலைதறிப்பு, தன்கையால் தன்முகத்தை நாளும் சிரைத்துக் கொள்வது, புகை பிடிப்பது, மதுவகை குடிப்பது, முதலிய இந்த வெளிவகைகளையே வெறிகொண்டு பழகி உயர்ந்த நாகரீகம் அடைந்தவர் போல் உளங்களித்துத் திரிகின்ருர். எள்ளல் இழிவுகளை இறுகப் பற்றிக் கொண்டு உள்ளம் செருக்கித் திரிவது யாண்டும் ஊனப் பெருக்காய் ஓங்கி ஈனக் கிறுக்காயுள்ளது.

வெள்ளையர்பால் உள்ள வினையாண்மை யாதிநலம்
உள்ளி உயர்பயனை உட்கொள்ளார்---துள்ளியவர்
கொள்ளும் உடையும் குடியும் தலைதறிப்பும்
அள்ளுகின்ருர் அந்தோ அவம்.

வெள்ளையரோடு இந்நாட்டவர் பழகிக் கைக் கொண்டுள்ள வகைகளை இது தொகையாக எடுத்துக் காட்டியுள்ளது. அறிய வுரியவைகளைவறிதே இழந்து விட்டு அவல நிலைகளை

விழைந்து பற்றிக் கவலையின்றி இறுமாந்து திரிவது சிறு மாந்தருடைய செயல்களாய்ச் செறிந்து நிற்கிறது.

இழிவான பழிநிலைகள் மொழிகளிலும் செயல்களிலும் களிநடம் புரிகின்றன. பொய்யும் பொறாமையும் இந்நாட்டில் எங்கும் பொங்கி நிற்கின்றன. யாரும் யாதும் கூசாமல் யாண்டும் பொய்யே பேசுகின்றனர். பொய் பேசுவது புலையான நீசம் என்னும் உணர்ச்சி மக்களிடம் என்று தோன்றுமோ அன்று தான் இந்நாடு மெய்யான நல்ல நாடு ஆம்; பொய்யால் இந்த நாடு புலைப்பட்டுள்ளதுபோல் வேறு எந்த நாடும் புலைப்படவில்லை. நீசங்கள் உள்ளே வளர்ந்து வரும் அளவு அந்த மனித சாதி நாசங்களையே அடைந்து வருகிறது. பொய் கொடிய நீசம் ஆதலால் அது பஞ்சமா பாதகங்களுள் தலைமை தாங்கி முதன்மையாய் நின்றது.

உடம்பு நீரால் சுத்தம் ஆதல் போல் உள்ளம் சத்தியத்தால் சுத்தமாகிறது. அந்தப் புனித நிலையை இழந்த அளவு மனிதன் இழிந்தே போகின்றான். இழிவான அந்த அழிவு நேராதபடி மேலோர் வழி கோலி விழி தெரிய வைத்துள்ளார். மெய் மொழி தெய்வ ஒளியாயுள்ளது.

உள்ளத்தால் பொய்யாது ஒழுகு. 1
மனத்தொடு வாய்மை மொழிக. 2
தன் நெஞ்சு அறிவது பொய்யற்க. 3
பொய்யாமை அன்ன புகழ் இல்லை. 4 (குறள்)

மெய்யே பேசி வையமாந்தர் மேன்மை அடைந்து வாழவேண்டும் என்னும் ஆர்வத்தால் தேவர் இவ்வாறு போதித்திருக்கிறார். மாடுகளை நோக்கி இவை கூறவில்லை; மக்களை நோக்கியே உரிமையோடு உரைத்திருக்கிறார். உண்மையான இந்த உறுதி மொழிகள் நான்கையும் காலையில்

எழுந்தவுடனே நான்கு வேதமந்திரங்களாகச் சிந்தித்து ஓதி வரின் அந்த மனிதவாழ்வு புனிதமாய் இனிமைசுரந்து வரும்.

மெய்பேசுவதில் வெள்ளையர் தொகை மிகவும் மேலா யுள்ளது. பொய்மை மிகவும் இழிவாக ஆங்கிலேயர் அருவருத்து வெறுக்கின்றார். ஸத்யம் வத என்ற வேதம் அவர்க்குத் தெரியாது. பொய் பேசாமல் இருந்தால் புண்ணியம் உண்டாம் என்று அவர் எண்ணுவதில்லை. இயல்பாகவே பொய்மை ஒரு நீசப்புலையாக நினைந்து இகழ்ந்து அவர் நடந்து வருகிறார். ஒருவன் கீழான இழிமகன் ஆவதற்குப் பொய்மொழி புலையாய் வழிகோலுகிறது என அவர் தெளிவாக உணர்ந்து அதனை இளிவா வெறுத்திருக்கின்றார்.

பொய் மனிதனைப் பேய் ஆக்கும்; வாழ்வைப் பாழாக்கும்; நாணயத்தை நாசமாக்கி வியாபாரத்தை வீணாக்கும்; இழிமகன், ஈனன், கீழோன், அயோக்கியன், எனவரும் பழிமொழிகள் எல்லாம் பொய் பேசுவதனால் விளைந்த விளைவுகளே; இந்த நீச விளைவுகள் யாதும் அணுகாமல் நேர்மையாய் ஒழுகி வருபவரே சீர்மையாய்ச் சிறந்து வருகின்றார்.

Let your communication be, Yea, yea; Nay, nay: for whatsoever is more than these, cometh of evil. (Bible)

"உங்கள் வாய்மொழி உள்ளது உள்ளதாகவும் இல்லது இல்லதாகவும் இருக்கட்டும்; இதற்கு வேறானது தீமையாகவே வரும்" என ஏசுநாதர் இவ்வாறு கூறியிருக்கிறார். அந்தப் போதகரது இந்தப் போதனையை ஆங்கிலேயர் நன்கு சாதனை செய்து எங்கும் இனிது பேணி வருகின்றார்.

மனிதனுக்கு மனிதன் மரியாதை செலுத்தி இகலோக வாழ்வை அவர் சுகமாய் நடத்துகின்றார். பரலோக வாழ்

யைப் பரக்கப்பேசி இகமும் பரமும் இழந்து இழிபவரினும் அவர் உயர்ந்தவராய் எவ்வழியும் ஒளி பெற்று நிற்கின்றார்.

சத்தியம் உடையவன் சத்து உள்ளவனாய் நித்திய சோதியில் நிலைத்து வருகிறான். பொய்யன் மெய்யனாயிருந் தாலும் உயிரோடு செத்தவனே ஆகின்றான். தன்னை வாயில் வைத்தவனைப் பழியிலும் பாவத்திலும் வைத்து முடிவில் அழிநரகத்தில் உய்த்தலால் போய் போல்லாப் புலை என வந் தது. அந்த நீசப் புலை இந்த நாட்டை நாசப் படுத்துகிறது. நீசராய் நாசம் அடைவதை உணராமல் தாமும் பெரிய மனிதராய் வாசம்செய்து வாழ்ந்து வருவதாக மோசம் போவது முழு மடமையான கொடிய மூடமாம்.

நூறு வெள்ளையரையும், நூறு இந்தியரையும் நேரே நிறுத்தி உங்களில் பொய் பேசாதவர் எவ்வளவினர்? என அளவு காண நேர்ந்தால் அப்பொழுது இந்நாட்டுப் பொய் யின் உளவை ஓரளவு காணலாம். எவ்வழியும் வெவ்விய துயரமாய் இழவு கூட்டி வருவதை விழைந்து கூடி விளிந்து ஒழிவது விசித்திரமாய் வியப்பை விளைத்து வருகிறது. மாய மயக்கமும் மையல் களிப்பும் தீய புலைகளாய் எங்கும் செழித்துத் தேசத்தைச் சீரழித்து நிற்கின்றன.

உயர்ந்த சிந்தனைகளை யுடைய சிறந்த மேதைகள் வளர்ந்து வந்த நாடு இழிந்த பேதைகளை அடைந்து எவ்வழி யும் ஏதங்கள் மிடைந்து யாண்டும் தளர்ந்து தவித்துளது.

பழைய நிலைமைகளை எல்லாம் அறிவுக்கண்ணால் நோக்கி இந் நாட்டின் மகிமைகளை உணர்ந்து உவந்து வருங்கால் புதிய புன்மைகளை எண்ணி இரங்க நேர்ந்தது. பரிதாபமான அந்த இரக்கத்தால் பல கவிகள் உருவாகி வந்தன. சில

பாடல்கள் மறைந்து போயின. நிலையாக இதுவரை உள்ளே உறைந்திருந்தன இதுபொழுது வெளிவர நேர்ந்தன.

பெற்ற தாயிடம் பிள்ளை பேசுவதுபோல் பூமிதேவியை நோக்கிப் பலவகை நிலைகளையும் குறித்துப் பரிவோடு முறையீடு செய்துள்ள இந்நூல் இந்தியத் தாய் நிலை என வந்தது.

உலகப் போக்குகளைப் பல காலமும் பார்த்துச் சலித்துப் பரிந்து பாடிய பாடல்கள் இதில் நிறைந்திருக்கின்றன. பாட்டுகள் யாவும் நாட்டு நலம் கருதி வந்துள்ளன. கல்வி நலம், செல்வவளம், அரசுமுறை, கொடைநிலை, படைவீரம், திருந்திய பண்பு, பெருந்தகைமை, ஞான சீலம் முதலிய நிலைகளில் இந்நாடு பண்டிருந்த தன்மையையும் இன்றுள்ள நிலைமையையும் தெளிவாக அறிந்து கொள்ள இது வழிகோலி வந்துள்ளது. தேசம் தேசுற யோசனைகளை வீசியுள்ளது.

இந்நாட்டில் இஞ்ஞான்று பல துறைகளிலும் பரவியுள்ள சிறுமைகளையும் பிணக்குகளையும் பகட்டுகளையும் கபட வஞ்சனைகளையும் கண்டு கண்டு நெஞ்சம் வருந்தி நெடிது இரங்கி உரைத்துள்ளமையால் இந்நூலின் கவிகள் யாண்டும் உயர்ந்த குறிக்கோளுடன் ஒளி சிறந்து மிளிர்கின்றன.

இனிய நீர்மைகளில் உயர்ந்து எவ்வழியும் செவ்வையாய்ச் சீர்திருந்தி மனித சமுதாயம் புனிதமாய் வாழ வேண்டும் என்னும் ஆவலால் வெளி வந்துள்ள இந் நூல் என்றும் எவர்க்கும் இன்பம் சார்தருளும் என்று நம்பி எம்பெருமானை எண்ணி உவந்து இறைஞ்சி யிருக்கிறேன்.

திருவள்ளுவர் நிலையம்
மதுரை.
(1—9—1955)

இங்ஙனம்
ஜெகவீரபாண்டியன்.

# இந்தியத் தாய் நிலை.

## 1. பழமையின் பான்மை.



### வாய்த்திருந்த வளம்.

க. அந்தணர்கள் அருமறைகள் ஓதிடவும்
ஆக்கள்பால் அதிகம் ஆகச்
சந்தமிழ் ஊட்டிடவும் தாய்மகவுக்கு
அமுதருத்தும் தன்மை போல
வந்தமழை பருவத்தில் பெய்துபயிர்
வளர்ந்திடவும் மகிழ்ந்திருந்த
இந்திய எனுந்தாயே! இப்பொழுதேன்
இப்படிநீ இருக்கின் றாயே! (1)

### தரும நாடு.

உ. குமரிமுதல் இமயமொடு குடவரையும்
குணகடலும் குலவி ஓங்க
அமருலகோர் எனஎவரும் ஆர்வமுடன்
அமர்ந்தவா அயல்நா டெங்கும்
நமதுவிலை பொருளுதவித் தனிக்குடிகள்
தழைத்திருக்கத் தருமநாடு என்று
இமையவரும் வியந்துரைக்க இனிதிருந்தாய்
தனியிருந்தின் றிருப்பது என்னே! (2)

### தேசங்கள்.

௩. வங்கமுயர் மகதமுதல் மண்டலங்கள்
பலவயங்க வாரி சூழத்
தங்கம்என எந்நாடும் தகவுடனே
போற்றிநிற்கச் சமரில் யாண்டும்
சிங்கம்என சிறந்திருந்த தமிழ்வேந்தர்
கோல்ஓச்சச் செழித்து வந்து
பொங்கமுடன் பொலிந்திருந்தாய் இந்நாள்அப்
பொலிவெங்கே போயிற் றம்மா! (3)

### தெய்வ அரசு.

௪. கங்கைநதி காளிந்தி காவிரிகோ
தாவரிகள் கலந்து சூழ
மங்கையொரு பாகம்வைத்த மாதேவன்
பாண்டியனாய் வந்திருந்து
துங்கமுடன் அரசாண்டு தொல்லுயிர்கள்
புரந்துவரத் துதிகள் பொங்கி
மங்கலமாய் மகிழ்ந்துவந்த பாரதத்தாய்
மலர்ச்சியின்றி மறுகல் என்னே! (4)

### நாட்டு வளம்.

௫. எந்நாடும் தன்னுடைய எழில்நோக்கி
இசைநோக்கி இறும்பூது எய்த
மூந்நாடும் மூவேந்தும் முத்தமிழும்
முக்குடையும் முறைசெய்து ஓங்க

அந்நாடும் அதிசயிப்ப அளகைஎன
வளமிகுந்து யாவும் மேவி
இந்நாடு முன்னாளில் இருந்தநிலை
தெரிந்துணரின் எவர்ஏங் காரே. (5)

## சத்தியம் பேணியது.

௬. ஒருபொய்யை உரைத்திடமுன் உளம்கூசி
உரியபேர் அரசை விட்டுத்
திருமலிந்த மனைவியையும் தேசுமிகு
புதல்வனையும் சேர விற்று
வருபுலையன் இடம்விலையாய் மருவிநின்று ஓர்
மன்னன்முனம் வாய்மை காத்தான்
தரும்ஒருகா சுக்கேழு பொய்யுரைக்கும்
மெய்யரின்று தழைத்தார் அம்மா! (6)

## தலைக் கொடை.

௭. இல்லாத நிலைமையிலும் தன்பால்வந்து
இரந்தவருக்கு இல்லை என்று
சொல்லாமல் தலைகொடுத்துத் தலைக்கொடையான்
எனக்குமணன் தோன்றி நின்றான்;
மல்லாரு மலையளவு வளமுறினும்
அரைக்காசும் வழங்காது அந்தோ
கல்லான மனமுடைய பொல்லாதார்
இக்காலம் கலித்தார் அம்மா! (7)

### முல்லைக்குத் தேர்.

அ. ஊர்ந்துசென்ற மணித்தேரை ஒருமுல்லைக்
கொடிக்குதவி உவந்து மீண்டு
சார்ந்துவழி நடந்துவந்தான் தண்பாரி
முன்னுளில் இந்நாள் இங்கே
ஆர்ந்தவுற வினரேனும் அடுத்துவந்து
தன்காரில் அமர்ந்திருக்க
நேர்ந்துவிட மாட்டாத நெடுநிலையர்
படுநிலையில் நிமிர்ந்துள் ளாரே. (8)

### நள்ளியின் தகைமை.

கூ. காட்டிலே எதிர்கண்ட கலைவல்லான்
தன்னிடம்நற் கருணை காட்டிச்
சூட்டிலே பசிநீக்கிச் சூடகம்தந்து
ஒருமொழியும் சொலாது நள்ளி
பாட்டிலே முன்போனுன் பண்டுஇன்று
காசுஒன்று பயந்தார் ஏனும்
ஏட்டிலே தம்பெயரைத் தலைநீட்டிப்
பார்க்கின்ருர் என்னே அம்மா! (9)

### அரச நீதி.

௰. துள்ளிவந்துஓர் பசுங்கன்று சுடராழித்
தேர்நுழைந்து தொலைய அன்றே
உள்ளம்உயிர் பதைத்துருகி உற்றபசு
பெற்றதுயர் உறுவேன் என்று

வள்ளியதன் மைந்தன்மேல் வன்தேரை
மனுஊர்ந்தான் இன்று காரில்
பிள்ளையடி பட்டாலும் பேசாமல்
ஓடுகின்றார் பெருமை என்னே! (10)

பாண்டியன் பான்மை.

கக. கோவலனை மதிமறந்து கொன்றதனைப்
பின்பறிந்து குலைநடுங்கி
ஆவலித்து வீழ்ந்தலறி அரியணைக்கீழ்
அப்பொழுதே ஆவி நீத்துஓர்
காவலன்முன் நீதிமுறை காத்துநின்றான்;
கடுங்கேடு புரிந்து கொண்டு
பூவலயம் புரப்பார்போல் புன்பழிகள்
புரந்தின்று புரள்கின் றாரே. (11)

சுரோசனன்.

க௨. தந்தைதாய் இருவரையும் தன்உயிரின்
மேலாகச் சார்ந்து பேணி
வந்தசுரோ சனன்உயிர்போய் மாய்கின்ற
தருணத்தும் வணங்கி வாழ்த்தி
எந்தையருக் கின்னீர்போய் ஈயும்என
இரந்திறந்தான்; எல்லாம் தங்கை
முந்தவைத்தும் பேணாத மூடமக்கள்
கோடியின்று மொய்த்தார் அம்மா! (12)

## இராமன் நீர்மை.

கங. பெற்றதாய் தந்தையே பெரியமுதல்
தெய்வமெனப் பேணி இராமன்
உற்ருெழுகி வந்தமையால் உயர்ந்தகுல
முகஞெகி ஒளி மிகுந்தான்;
மற்றவனை எண்ணி எண்ணி மகிழ்கின்ரும்
மக்களென மருவி யுள்ள
கற்றைகளைக் கண்டுகண்டு கண்ணீரே
விடுகின்ரும் கருமம் அந்தோ. (13)

## உத்தம நிலைகள்.

கச. சத்தியமும் தண்ணளியும் தருமகுண
நீர்மைகளும் சால்பும் ஓங்கி
நித்தியமும் நியமமா நெறிமுறையே
ஒழுகியருள் நிலையில் நின்ற
உத்தமர்கள் எவ்வழியும் ஒளிபுரிந்த
இந்நாட்டில் ஊன மான
செத்தைகளே பெருகிஎங்கும் தீமைகளே
மேவியுள சிறுமை என்னே! (14)

## பரிதாப நிலை.

கரு. நெஞ்சிலொரு வீரமில்லை; நிலையான
ஆண்மையில்லை; நேர்மை மானம்
அஞ்சாமை முதலாய அருங்குணங்கள்
அருங்குணங்கள் ஆகி எங்கும்

பஞ்சைகளாய் இழிந்துபோய்ப் பரிதாப
நிலையிலுள்ளார் பழி அகன்று
விஞ்சுபுகழ் நிலையேறித் தலைநிமிர்ந்து
வெளிவருநாள் விளம்பாய் அம்மா! (15)

## மடமைக் கொடுமை.

௧௬. தித்திக்கும் அமிர்தான திருக்குறளைப்
படித்தறியார்; தெய்வம் என்றே
எத்திக்கும் போற்றுகின்ற கம்பனுயர்
காவியத்தை எண்ணி நோக்கார்;
பத்திக்கு வித்தான பாரதநாட்
டில்பிறந்தும் பயம்பொய் தம்மைக்
கொத்தித்தின் னக்கொடுத்துக் குனிகின்றார்
ஈதென்ன கொடுமை அம்மா! (16)

## உயர்வின் அயர்வு.

௧௭. நீதியுயர் மன்னர்களால் நெறியுடைய
கவிஞர்களால் நெடியவீரச்
சாதியுறு தன்மைகளால் தத்துவத்தின்
தகைமைகளால் தரணி எங்கும்
ஓதியுயர் கலைகளினல் உறுதியுணர்
நிலைகளினல் ஒளிபெற் றேங்கி
ஆதிமுதல் உயர்ந்திருந்த பாரதத்தாய்
தாழ்ந்திருக்கும் அவலம் என்னே? (17)

### வீரர் நிலை.

க௮. போரென்று வேறொன்றை வழிப்போக்கர்
புகன்றாலும் புயங்கள் வீங்கி
நேர்ஒன்ற வருகின்ற நேரலர்யார்?
எனவிரைந்து நெடுவேல் வாங்கும்
தார்ஒன்று போர்வீரர் தழைத்திருந்த
இந்நாட்டில் சமருக் கான
பேரெங்கே எனத்தேடும் பிழைபெருகி
யுள்ளதே பிழை என்னே! (18)

### பொல்லாத காலம்.

க௯. வில்லாலும் சொல்லாலும் உலகைஎல்லாம்
வெல்லவல்ல வீரர் ஆன
நல்லார்கள் பலர்தோன்றி நண்ணிநின்ற
உன்வயிற்றில் நாங்கள் தோன்றிப்
பல்லாலே இதழதுக்கிப் பயத்தாலே
உடல்நடுங்கிப் பதுங்கு கின்றோம்
பொல்லாத காலமிது போய்த்தொலையும்
காலம்என்றோ புகல்வாய் அம்மா! (19)

### புலை யுணர்வு.

உ௰. கலையுணர்வின் சுவைகனிந்த கம்பனுயர்
காவியமும் கருதுந் தோறும்
தலையுணர்வு தழைத்துவரும் தருமநூல்
முதலாய தகைமை வாய்ந்த

விலைவரம்பில் நூல்களையும் விளைத்துவந்த
தமிழின்று வெறுமை யான
புலையுணர்வின் புகைமண்டிப் பொலிவிழந்து
நின்றுளதே புன்மை என்னே! (20)

### உயர்வின் ஒழிவு.

உக. பண்டிருந்த கொடைஎங்கே? படையிருந்த

கண்டிருந்த அரசுஎங்கே? கலை எங்கே?
கவிஎங்கே? கற்பு வாய்மை
கொண்டிருந்த குலம்எங்கே? குணம்எங்கே?
நலம்எங்கே? கொற்றம் எங்கே?
உண்டிருந்த உயர்வெல்லாம் ஒளிந்தோடிப்
போனவகை உரையாய் அம்மா! (21)

### அருளாளர்.

உஉ. கூரறிவும் குணநலனும் குறையாத
தவநிலையும் குலவ ஓங்கி
ஓரறிவார் கொடிசெடிக்கும் ஊறுசெய்யாது
உலகுயிர்கள் உய்ய வந்த
பேரருளின் வடிவான புத்தர்பிரான்
முதலான பெரியோர் எல்லாம்
பாரறியத் தோன்றியருள் பாலித்துப்
பரநிலையைப் பார்த்தார் அன்றே. (22)

அன்பாளர்.

உ௩. அன்பிலார் எல்லாமே தமக்குரியர்
அன்புடையார் என்பும் ஏந்தி
முன்புடனே ஈவரெனும் மொழிப்படியே
ததீசிதந்து முதன்மை பெற்றார்;
தன்புடைசார் புறவுக்குத் தன்னுயிரைச்
சிபிதந்தான்; சரிதம் கண்டும்
இன்படைய யாதொன்றும் ஈயாத
பேயர்பலர் இருக்கின்றாரே. (23)

மகான்கள்.

உ௪. தன்னுயிர்போல் மன்னுயிரைத் தான்பேணி
வரினதுவே தவமாய் ஓங்கிப்
பொன்னுயிராய் மணியுயிராய்ப் புண்ணியத்தின்
தனியுயிராய்ப் புனித மான
இன்னுயிருக் கிறையுயிராய் இன்பமெலாம்
எய்தும்என எங்கும் உள்ள
மன்னுயிர்கள் உணர்ந்துவர மகான்கள்பலர்
ஒழுகிவந்தார் மகிமை யூர்ந்தே. (24)

மாதவர்.

உ௫. ஆதிமுதல் ஒருவனே அம்முதல்வன்
இடமிருந்தே அகிலம் எல்லாம்
நீதிமுறை யுடன்தோன்றி எங்கணுமே
நிலவியுள நிலையை ஞான

போதனையால் எவ்வுலகும் புனிதவுணர்
வினையடையப் போதிக் கின்ற
மாதவர்கள் வந்துவந்து மதியருளத்
தந்ததிந்த மகிமை நாடே. (25)

## புத்தர் போந்தது.

உசு. புத்தர்பிரான் தனையீன்ற புண்ணியநாடு
எந்நாடு? போதம் வாய்ந்த
சித்தர்குழாம் தமைப்பயந்த திவ்வியநாடு
எந்நாடு? தேவதேவன்
ஒத்தஅர சாகியமர்ந்து உலகாண்டது
எந்நாடு? உயர்ஞானங்கள்
எத்திசையும ஒளிவீசி இருளிரியச்
செய்ததெல்லாம் இந்நாடு அன்றோ. (26)

## சீராமன் சேனித்தது.

உஎ. சீராமன் அவதரித்த திவ்வியநாடு
எந்நாடு? சீதை என்னும்
பேரான கற்பரசி பிறந்திருந்தது
எந்நாடு? பெருமையோடு
பாராண்ட மன்னவர்கள் பலர்பிறந்தது
எந்நாடு? பரதன் என்னும்
பேராளன் ஒருவனுயர் பெயர்பூண்டது
எந்நாடு? பேசு வீரே. (27)

### வள்ளுவர் வந்தது.

உஅ. தெள்ளுதமிழ் அமிழ்தமெனச் சீவரெலாம்
தேவரெனச் சிறந்து வாழ
ஒள்ளிய நுண் கலைகள்பல ஒளிமிகுந்து
தெளிவடைய ஒருநூல் தந்த
வள்ளுவரைத் தந்திந்த வையமொடு
வானுலகும் உய்ய என்றும்
விள்ளுபுகழ் ஒளிவீசி விளங்குகின்றது
எங்நாடு விளம்பு வீரே. (28)

### உள்ளுக உயர்வு.

உகூ. பிறந்துவந்த நாடறிந்து பெற்றிருக்கும்
பேறுணர்ந்து பெருமை யோடு
சிறந்துவந்த முன்னோர்தம் சீர்மைகளின்
செயல்தெளிந்து செம்மை யான
அறந்தருபே ரமைதிகளை அமைதியாய்
ஆய்ந்தொழுகின் அமல ஞானம்
நிறைந்தபே ரானந்தம் நிலவிவரும்
நிகழ்வதனை நினைக நேரே. (29)

### நாட்டு மகிமை.

௩0. எந்நாட்டு வீரர்களும் இணையில்லா
வீரர்களென் றேத்தி நிற்க
இந்நாட்டு வீரர்முனம் ஏற்றமிகப்
பெற்றிருந்தார் இன்றும் உள்ளார்;

தந்நாட்டு மகிமைகளைத் தாமுணர்ந்து
தெளியாமல் தரம ழிந்தே
அந்நாட்டு நிலைமைகளை ஆவலித்துத்
திரிகின்றார் அவலம் ஊர்ந்தே. (30)

சுத்த வீரம்.

௩க. சீறிஎதிர் விழித்தகண்ணைச் சிறிதிமைக்க
நேர்ந்தாலும் செருவில் ஏறி
மீறிஅம ராடிவரும் வீரருக்குப்
பேரிழிவாம் மேன்மை யாகத்
தேறிவரும் ஒருவீரக் குடியினால்
தேசநிலை சிறந்து சீர்த்தி
ஏறிவரும் அவ்வரவில் இந்நாடு
முன்னமிசைந் திருந்த தன்றே. (31)

தோல் வளம்.

௩உ. நாடுகின்ற வளங்களெல்லாம் நாடாமல்
தந்தருளி நயந்து வந்து
கூடுகின்ற பேர்க்கெல்லாம் குறிப்பறிந்து
பலபொருளும் கொடுத்து நாளும்
நீடுகின்ற புகழோடு நிலவிவந்த
இந்தியா இன்று நைந்து
பாடுகின்ற பாட்டெல்லாம் பஞ்சமாயப்
பட்டினியாய்ப் படிந்த அந்தோ! (32)

### மான வாழ்வு.

௩௩. சீனத்தார் திருவடையத் தெண்கடலின்
முத்தளித்தாய், ஜெர்மன் என்னும்
மானத்தார் மாண்படைய மலைவளங்கள்
பலகொடுத்தாய், மற்றை மேலைத்
தானத்தார் உயர்வடையத் தரணிநலம்
பலதந்தாய், தரும மான
வானத்தார் அதிசயிப்ப வாழ்ந்துவந்த
பாரதமே? வருந்தல் என்னே! (33)

### ஊன ஒழிவு

௩௪. உனக்குரிய தனிஅரசொன்று உருமையினால்
உறுகுறைகள் உன்னி உன்னி
மனக்கரிய துயரமொடு மதியுடைய
சிலர்நொந்து மறுபுலத்தே
தனக்குநிகர் தான்என்னத் தழைத்திருப்பா
ரிடம்தளையைத் தவிர்க்க வேண்டிச்
சினக்குறிப்பை உள்ளடக்கிச் சிறுகுறிப்புச்
செய்கின்றார் சீர்மை யாமே. (34)

### கண்டது காட்டியது.

௩௫. பண்டிருந்த நிலைமைகளைத் தலைமையாப்
பாராட்டிப் பரிவு கூர்ந்து
கொண்டுபுகழ்ந் தாடுவதும் நிகழ்கால
நிலைமைகளைக் குறைத்துக் கூறி

மண்டுபழி கூறுவதும் மதியுடையார்
மாண்பாகா; மதித்து நோக்கிக்
கண்டுணர்ந்து கொண்டதையே கருதிநின்று
காட்டுகின்றார் கருணை கூர்ந்தே. (35)

புண்ணிய நாடு.

௩௬. புண்ணியநாடு ஈதென்று புலவர்எலாம்
போற்றிவரப் புனித மான
கண்ணியநாடு ஈதென்று கடல்ஞாலம்
களித்துவரக் கரும வீரம்
பண்ணியநாடு ஈதென்று பாரரசர்
பணிந்துவரப் பரஞா னத்தின்
திண்ணியநாடு ஈதென்று தேசுமிகுந்
திந்நாடு திகழ்ந்த தன்றே. (36)

வான வரவு.

௩௭. ஞானத்தால் சீலத்தால் நல்லருளால்
வெல்விறலால் நன்மை கூர்ந்த
மானத்தால் வீரத்தால் மாதவத்தால்
மாட்சிமையால் மகிழ்ந்து தந்த
தானத்தால் தருமத்தால் தகவான
நீதியினல் தலைமை பூண்டு
வானத்தால் வருசுகத்தை வையத்தில்
இந்தியா வழங்கிற் றன்றே. (37)

# 2. புதுமையின் போக்கு.

## மயல் இயல்.

௰௮. பண்டிருந்த பெரியோர்கள் பாராத
புதுமையெல்லாம் பாரில் எங்கும்
கண்டுவந்து வருவதாக் களிபுரிந்து
வருகின்றோம் காட்சி யாவும்
மண்டுபழி மயலேறி எவ்வழியும்
மதிகேடே மருவி நின்று
கொண்டிழிவு செய்துவரும் குடிகேடு
தெரியாமை கொடுமை யாமே. (1)

## புலை நிலை.

௰௯. பொல்லாத பொய்யுரையும் புலையான
பொறாமைகளும் புன்மை பூண்ட
கல்லாத மடமைகளும் கழிசெருக்கும்
அழிவழக்கும் கலித்து நீண்ட;
நில்லாத நிலைதெரிந்து நீதிமுறை
வழியொழுகி நெறியே வாழும்
நல்லாரை நான்காண நாடெங்கும்
நாடுகின்றேன் நாட்டம் என்னே. (2)

## வீண் பேச்சு.

௨௰. வாயளவில் வளமைமிகப் பேசுவார்
பலர்மலிந்தார் வாய்மை தோய்ந்து
நேயமுடன் நெஞ்சிரங்கி நேர்ந்தவுயிர்க்கு
அருள்வாரை நேரே காணேன்;

பாயளவில் பட்டழுந்திப் பயன்ஒன்றும்
பாராமல் பதைத் திழிந்து
நோயளைந்து மாயளவில் தம்முடனே
வருவதனை நோக்கார் அந்தோ. (3)

வெறி விழைவு.

சக. பெற்றநலம் பெரிதெனினும் சிறிதாக
எண்ணுவதும் பெருத ஒன்று
முற்றவுமே சிறிதெனினும் பெரிதாக
மதித்ததன்மேல் மோகம் மூண்டு
பற்றவுளம் பறப்பதவும் பாரின்வாழ்
மானுடர்தம் பண்பே என்று
கற்றவர்கள் கருதிநின்று காலநிலைக்கு
இரங்குகின்றார் கருணை கூர்ந்தே. (4)

சினிமா நாடகம்.

சஉ. காணாத காட்சியெல்லாம் சினிமாவில்
காணுகின்றார்; கருதி முன்னம்
பூணாத உடையணிகள் புதுமையுடன்
பூணுகின்றார்; புனைந்து பெண்கள்
ஆணாக நடிக்கின்றார்; ஆடவர்கள்
பெண்களாய் அமர்ந்து நின்று
நாணாமல் வருகின்றார்; நம்கால
வரவுநிலை நவிலப் போமோ. (5)

வான் ஒலி.

சங. வானொலியில் பலசெய்தி வந்துவந்து
காதுபுக மகிழ்ந்து கொள்வார்;
மீனொளியின் மதியினம்போல் மின்சார
விளக்கொளியை விழைந்து காண்பார்;
தேனொழுகப் பாடுகின்ற போலொலியைக்
கேட்டுவகை சிறந்து நிற்பார்;
ஊனொழுக உயிரொழுகி ஒழிவதனை
உணர்கில்லார் உறுவ தென்னோ. (6)

புது மது.

சச. கண்டஇடம் எங்கணுமே காப்பிவரு
கடைகளே காண நேர்ந்து
பண்டைமதுக் குடியர்களைப் பரிகாசம்
செய்பவரும் பழி மறந்து
கொண்டபுதுக் குடியராய்க் கொளுங்குடியின்
குடிகேடு குறியா துண்டு
தண்டமிழின் சுவைமறந்து தமைமறந்து
நாச்சுவையில் தழைத்தார் அம்மா. (7)

பால் நீர்.

சரு. படிக்குநேர் படியாகப் பாலிலே
நீர்கலந்து பயம்ஒன் றின்றி
அடிக்குநேர் அடியாக அளவிலுமே
களவாகி ஆர்ந்து நிற்பார்

பிடிக்குநேர் பிடியாக அதைவாங்கிக்
காப்பினனும் மதுவுள் பெய்து
குடிக்குநேர் குடியாகக் குடிக்கின்றார்
குடிகேடு குறியார் கூர்ந்தே. (8)

பாவ நிலை.

சச. பாவம்என்றால் யாதுமே பயமின்றிச்
செய்வதற்கிப் பாரில் உள்ள
சீவர்கட்கு யாவரே தெளிவாகப்
போதித்தார் தெய்வமே! என்று
ஆவலுறும் அதிசயத்தோடு அன்னளில்
ஆவலித்தார்; இந்நாள் இங்கே
தீவினையும் நல்வினையும் தெரியாத
நிலையினவாய்ச் செறிந்த அம்மா! (9)

தேர்தல் நாட்டம்.

சஎ. வந்தவருக்கு அரைக்காசு மனமார
வழங்காத வளமை வாய்ந்த
அந்தநிலை யுடையவரும் ஆயிரம்ஆ
யிரமாக அள்ளி வீசி
இந்தஒரு தேர்தலிலே எனைத்தேற்ற
வேண்டுமென ஏங்கி நிற்பார்
எந்தவிதம் இவர்தரும நெறியறிந்திங்
குய்யுநாள் இயம்பாய் அம்மா! (10)

### கட்சி ஓட்டம்.

சஅ. காலையிலே ஒருகட்சி, கடும்பகலில்
ஒருகட்சி, கதிரோன் சாயும்
மாலையிலே ஒருகட்சி, மறுநாளில்
ஒருகட்சி, மாறி மாறி
ஆலையிலே சுழன்றுவரும் அடல்எருதின்
தொடர்போல அவமா யிந்த
வேலையிலே திரிந்துவரும் வித்தகர்தம்
சித்தநிலை வியப்பே அம்மா. (11)

### பேயினும் பெரியர்.

சகூ. வாயெல்லாம் பொய்யுரைகள் வழியெல்லாம்
அழிசெயல்கள் வஞ்சம் சூது
தீயெல்லாம் இனியவெனத் தீயகொடுஞ்
செயலியல்கள் சேர்ந்து நின்றும்
தாயெல்லாம் போலினிய தயவுடையார்
எனப்பேசித் தானம் காண்பார்
பேயெல்லாம் இவர்போலப் பெருங்கேடு
செய்யுமோ பேசுங் காலே. (12)

### வேடதாரிகள்.

ருо. பத்திநிறைந் துள்ளவர்போல் பரம்பொருளின்
சின்னங்கள் பலவும் தாங்கி
உத்தமர்போல் உலாவுகின்றார்; உபசார
வார்த்தைகளை உடல் குழைந்து

*வித்தகமாய்ப் பேசுகின்றார் வெளியிலே*
*இவ்வாறு விளங்கி னாலும்*
*சித்தமுள்ளே வஞ்சகராய்த் தீமைகளே*
*செய்கின்றார் சிறுமை சேர்ந்தே.* (13)

ஆத்திகர்.

௫௧. *சிவசிவா கோவிந்தா என்றுவாய்*
*பேசுகின்றார்; சிறுமை யாக*
*அவகேடே செய்கின்றார் ஆருயிர்பால்*
*அருள்புரியா தவமே மண்டித்*
*தவவேடம் வெளிகாட்டித் தலைநீட்டி*
*வந்தாலும் தாழ்வே அன்றிச்*
*சிவகாமி நாதனருள் சேராதே*
*சேர்வதனைத் தெளிக தேர்ந்தே.* (14)

நாத்திகர்.

௫௨. *உண்டென்று தெய்வத்தின் உயர்பெயரை*
*வெளிஓதி ஊனம் உள்ளே*
*கொண்டொழுகும் கொடியரினும் இல்லையெனும்*
*நாத்திகரே கோடி நல்லர்;*
*கண்டொருவன் கணவன்எனக் கைக்கொண்டு*
*காணமல் தீமை செய்யும்*
*பெண்டிரினும் பொல்லாத வேசியர்கள்*
*நல்லரன்றோ பேசுங் காலே.* (15)

## போட்டிச் சூது.

௩௩. போட்டிஎன்னும் பொல்லாத புலைச்சூதை
எவ்வழியும் பொறித்து நீட்டிக்
காட்டிலுறு விலங்குகளைக் கவர்கின்ற
வலைகளெனக் கனமா நாட்டி
நீட்டியெழு பொருள்நசையை விசையாக
எவரிடமும் நேரே ஊட்டி
நாட்டிலொரு பகல்கொள்ளை நவமாக
இந்நாளில் நடப்பது என்னே.

## இருளின் ஏற்றம்.

௩௪. அருள்புரிந்த திருவுடைய அறமுடையார்
தமைப்பேணி அருமை காணார்;
மருள்புரிந்து வஞ்சிக்கும் மனமுடையார்க்
கினமாகி மறுகி நின்று
பொருள்புரிந்து தந்திழிந்து புன்பழிகள்
மிகப்புரிந்து போத மின்றி
இருள்புரிந்த நெஞ்சர்பலர் இஞ்ஞான்று
செல்வரென இருக்கின் றாரே.

## பொருளின் போக்கு.

௩௫. ஆங்காலம் மெய்வருந்த வேண்டாமென்று
ஔவைமுனம் அருளிச் செய்த
பாங்கான மொழிப்படியே திருவருங்கால்
எளிதுவரும்; படிந்த பின்பு

போங்காலம் மிகவருந்திப் போற்றினுமே
பொருள்புறத்தே புரண்டு போகும்;
சாங்காலம் வருமுன்னே தருமநலம்
சார்ந்தவரே சாகா ரம்மா. (18)

பணமும் குணமும்.

ருசு. பணம்பணம்என்று அனுதினமும் பதைபதைத்துப்
பறக்கின்றார்; பணம்கை வந்தால்
குணம்கலைந்து கொடுமைமிகுந்து அடுத்தவர்தம்
குடியெல்லாம் குலைத் தொழிப்பார்;
மணம்கலந்த அறநலங்கள் மனத்திலுமே
நினையாமல் மதத்து நிற்பார்;
பிணங்களெனப் படுநாள்இக் கணங்கள்என்ன
துணைகொண்டு பெயரும் அம்மா! (19)

நாகரிகம்.

ருஎ. நாகரிகம் என்னுமிந்த நயமொழிமுன்
அருள்நலத்தை நன்கு காட்டிப்
பாகமுறு பண்பமைந்து பண்டுநின்றது
இன்றதனைப் பழிகள் தோய்ந்த
மோகமுறு செயல்களுக்கும் மயல்களுக்கும்
பொருளாக முனைந்து கூறி
வேகமுடன் பிழைவழியில் வீணாக
விரைந்தோடி விளிகின் றாரே. (20)

## சிரைத்தல்.

௨௧. தங்கையால் தம்முகத்தைத் தாம்சிரைத்து
முகந்துடைத்துச் சலவைச் சாலை
எங்கையா எனத்தேடி இளவெளுப்பை
எடுத்துடுத்தி இணைச்சோடு ஏந்தி
பொங்கியெரி புனைசுருட்டைப் புகையாக்கி
அயல்எங்கும் புகவிடுத்து
மங்கையர்தம் மருங்குவர மருங்கின்றி
வெளிவருவார் மாட்சி என்னே! (21)

## குடித்தல்.

௨௨. பல்விளக்கு முன்னம்ஒரு படிகாப்பி
படுக்கையிலே குடித்தெழுந்து
வல்விரைந்து முகம்கழுவி வகையுணவை
வயிறடைத்து வாய்துடைத்துச்
சொல்விளக்கிச் சட்டத்தின் தொடர்விளக்கிச்
சோரமெல்லாம் சுற்ற வைத்து
வெல்வழக்கீ தென்றுரைத்து வெறுக்கைபெற
வெறுக்கைசெய்வார் வெறுக்க லாமோ? (22)

## நவையிலே சுவை.

௨௩. முகத்தில்எழு மயிரைநிதம் முளைக்காமல்
துடைக்கின்றார் மூண்டு தீதாய்
அகத்தில்எழு செயிர்களையார் ஆசைகளை
மிகவளர்ப்பார் அவமாய் நின்று

சகத்திலிவர் செய்துவரும் சதுராட்டம்
தனைக்கண்டு சான்றோர் எல்லாம்
நகைத்துவரு தலைக்காணார் நவையிலே
சுவைகண்டு நடக்கின்றாரே. (23)

## மயிர் திருத்தல்.

௩௪. வாசமுறு தைலங்கள் வளம்படுத்தி
வகுப்பெடுத்து வகை சுருட்டி
நேசமுடன் மயிரொழுங்கு நேர்செய்ய
நெடும்பொழுது நிதம் கழிப்பார்;
பாசமுறு மயிர்திருத்தப் படித்ததன்றி
உயிர்திருத்தம் படியார் அந்தோ
ஈசனெதிர் பின்பிவர்போய் இன்னுயிருக்கு
என்னபயன் இசைப்பார் அம்மா! (24)

## வம்பு வழக்கு.

௩௨. புகைவண்டி ஊர்ந்தோடிப் புதுவழக்கைத்
தலைசுமந்து பொய் புனைந்து
தொகைவண்டி அளவாகத் தொடுவழக்கை
விரித்துரைப்பார் துணையைப் பெற்று
மிகைமண்டி எழுந்தலவ விருகுமலி
தரகர்புரி வினையால் வெய்ய
பகைமண்டி எங்கணுமே படுதுயர்கள்
பலமண்டிப் படிந்த அம்மா! (25)

### சீப்பும் சோப்பும்.

௨௩. சீப்பிட்டுத் தலைவாரிச் சீமையுறு
தைலங்கள் சிறக்கப் பூசிச்
சோப்பிட்டு முகம்கழுவித் தூருசுகொண்டு
பல்விளக்கிச் சோடணிந்து
சாப்பிட்டுக் காப்பிட்டுச் சட்டையிட்டுத்
தொப்பிவைத்துத் தலைநி மிர்ந்து
கூப்பிட்டு வருங்காரில் கோப்பிட்டு
வரும்பேர்தம் கோலம் என்னே! (26)

### சீர்திருத்தம்.

௨௪. ஊர்த்திருத்தம் புரிகின்றோம் உற்றவரைத்
திருத்துகின்றோம் உறவாய் வந்த
பேர்த்திருத்தம் செய்கின்றோம் பெருந்திருத்தம்
பலவென்று பிதற்றி நின்று
கார்த்திருத்தம் படியவரு கனமுடையார்
தமைத்திருத்தம் காணார் அந்தோ!
நேர்த்திருத்த மாம்உளத்தை நிலைதிருத்தின்
உலகமெலாம் நேராம் அன்றே. (27)

### குடி.

௨௫. குடியினால் இந்நாடு குடிகெட்டது
ஆதலின்அக் குடியை விட்டுப்
படியிலே உயர்மின்என்று பாரறியப்
பிரசங்கம் பகர்வார் அன்னார்

மடியிலே கஞ்சாவும் வயிற்றிலே
மதுக்குடியும் மறைந்திருக்கும்
அடியிலே இவ்வாறு பழுதானால்
அவனியிலே ஆவ துண்டோ? (28)

## திருந்தார் திருத்தல்.

௨௯. தான்திருந்தி நில்லாமல் சதிவஞ்சம்
பலநெஞ்சில் சார வைத்துத்
தேன்திருந்தி வருமொழியில் திரளான
சனங்களின்முன் திறமாய் நின்று
ஊன்திருந்தி வாருமென உரையாடுந்
தலைவர்பலர் ஓங்க லானார்;
கோன்திருந்தி நில்லானேல் குடிதிருந்தி
வருகின்ற குணமுண் டாமோ? (29)

## போலிப் போதகர்.

௩௰. இலக்கணங்கள் கல்லாமல் இலக்கியங்கள்
இல்லாமல் இரண்டொன் றங்கே
கலக்கமுடன் தெரிந்ததையே கணக்காகக்
கைக்கொண்டு கற்றார்க் கெல்லாம்
புலக்கணுறப் புகல்வார்போல் பொதுமொழியின்
அதிகாரப் போக்கில் நின்று
நிலக்கணுயர் போதகராய் நெடுநிலையில்
நிமிர்கின்றார் நிலையீது என்னே! (30)

புலை நோக்கு.

௩௮. உலகநலம் கருதியே இரவுபகல்
உழைப்பதா உருவம் காட்டிப்
பலபலவும் பேசுகின்றார்; பாசாங்கும்
செய்கின்றார்; பார்வை யெல்லாம்
கலகலவென்று எண்ணுகின்ற கைப்பணத்தில்
பொய்ப்புகழ்ச் கண்டோர் எல்லாம்
தலைவணங்கி உபசரிக்கும் தன்மையிலே
புன்மைகண்டு தழைக்கின் றாரே. (31)

புலையாட்டம்.

௩௯. என்வயிற்றை வளர்க்கவே இத்தொழிலைச்
செய்கின்றேன் என்று சொல்லார்;
தன்வயிற்றில் அடக்கிமுனம் தான்புரந்த
திருமால்போல் தம்மைக் காட்டி
மன்வயிற்றின் உலகிலுள மக்களெலாம்
வாழவே வாழ்வ தாகப்
பொன்வயிற்றில் வார்த்ததுபோல் புகல்கின்றார்
புகழ்நாடிப் புலர்கின் றாரே. (32)

சங்கங்கள்.

௪௰. சங்கங்கள் நடத்துகின்றோம் தண்டமிழை
வளர்க்கின்றோம் சமயம் ஓங்க
எங்கெங்கும் பரப்புகின்றோம் இன்புலவர்க்கு
உதவுகின்றோம் என்று சொல்லி

அங்கங்கே பொருள்தொகுத்துத் தந்தலைமைக்
குள்ளாக்கி அகம் செருக்கிப்
பங்கங்கள் வளர்ப்பதல்லால் பலன்வளர்த்து
வருவாரைப் பார்த்தி லேனே. (33)

பேய்ப் பேச்சு.

எக. வாய்படைத்த மாந்தராய் வையத்தில்
வந்திருந்தும் வளம் படைத்துத்
தாய்படைத்த அன்போடு தன்னுயிர்போல்
மன்னுயிரைத் தான் பேணுமல்
பேய்படைத்த பேச்சோடு பேராசைப்
பித்தோடு பெருகி நின்று
நோய்படைத்துத் திரிகின்ருர் நோக்கிருந்தும்
நோக்கொன்றும் நோக்கார் அந்தோ. (34)

வேட விரகு.

எஉ. வெளிவேடம் காட்டியே விரகோடு
பேசுகின்ருர்; மெய்மை யாக
அளியோடு செயல்புரிவார் யாண்டுமே
அரியராய் அருகி யுள்ளார்;
தெளிவோடு நேர்மையாச் செயல்புரிந்து
வருபவரே தேசம் வாழ
ஒளியோடும் உண்மையாய் உழைத்துவரும்
உத்தமராய் உயர்ந்து நின்ருர். (35)

# 3. தாய் மொழி.

## வாய்மொழி வளர்ப்பு.

௬௩. *தாய்மொழியாம் தமிழ்மொழியைத் தலைமையொடு*
*கற்றாலும் நிலைமை காணார்;*
*சேய்மொழியாம் அயல்மொழியைச் சிலகற்றார்*
*ஆனாலும் சிறப்புக் காண்பார்;*
*வாய்மொழிகள் பலபேசி வண்தமிழை*
*வளர்ப்பதென வளமை கூர்வார்;*
*பேய்மொழிகள் பேசுவதே அல்லாமல்*
*பிறநலங்கள் பேணல் காணோம்.* (1)

## ஆடையின்றி அணிபுனைவது.

௬௪. *தான்பிறந்த தாய்மொழியைச் சார்ந்துநன்கு*
*கல்லாமல் தாவி ஓடி*
*ஊன்பிறந்த அயல்மொழியை உள்ளமெல்லாம்*
*மயலேற உலைந்து கற்பார்*
*மான்பிறந்த ஆடையின்றி மணியணிகள்*
*பூண்டுவெளி வருவார் போல*
*என்பிறந்தார் இந்நாட்டில் இந்தஅவ*
*மானமினி என்று போமோ?* (2)

## தாய்ப்பால் இழந்து பேய்ப்பால் அருந்தல்.

௬௫. *தாயின்பால் போலினிய தனிமொழியைக்*
*கல்லாமல் தகைமை இன்றிப்*
*பேயின்பால் வேட்டுழலும் பேயர்எனப்*
*பிறமொழியைப் பிழையாய்க் கற்று*

நாயின்வால் போல்என்றும் எங்கணுமே
கோணலாய் நாவை நீட்டி
நோயின்பால் ஆடுகின்றார் நுண்ணறிவு
குடிபோன நோன்மை யோரே. (3)

தன் மொழி முன் மொழி.

எசா. தம்மொழியை முன்னதாத் தகவுடனே
கற்றபின்பு தரணி யுள்ள
எம்மொழியும் கற்கலாம் எக்கலையும்
தேறலாம் யாவும் நேரே
செம்மொழியாய் எளிதாகத் திறனுடனே
தெளியவரும் தெளிந்த ஞானம்
நம்மொழியில் நிறைந்துளது நாடியதைப்
பெறுவரேல் நன்மை யாமே. (4)

நாட்டு மொழி.

எஎ. மன்னரா யிருந்தாலும் மந்திரியாய்
இருந்தாலும் மதிமாண் போடு
தன்னுடைய நாட்டிலுள தாய்மொழியைப்
பேணுரேல் தன்னைப் பெற்ற
அன்னதனைப் போற்றாத அழிமக்கள்
ஆகவே அவலம் எய்தி
இன்னலுடன் இழிவதல்லால் ஏற்றமிகப்
பெறுதல்தான் யாண்டும் இன்றே. (5)

### கேட்டு நிலை.

எஆ. இந்நாட்டுத் தமிழர்கள்போல் தம்முடைய
தாய்மொழியை இகழ்ந்து நிற்பார்
எந்நாட்டு மொழிகளிலும் யாரிடமும்
யாம்காணேம்; என்ன பாவம்!
தந்நாட்டு மொழிதெரியார் தம்விழிநேர்
தெரியாத தகையர் அன்றோ
அந்நாட்டம் அறிந்துய்யின் அழிநாட்டம்
ஒழிந்துநலம் அடைய லாமே. (6)

### நிலைமை தேளி.

எக. இறைவன்போல் என்றுமே அழியாமல்
ஒளிவீசி இலங்கி நிற்கும்
துறையுடைய தமிழ்மொழியைத் தொடர்புடையார்
தொடர்பாகத் தொழுது நின்று
முறையோடு கல்லாமல் மொழியளவில்
தமிழரென மொழிந்து வாழ்தல்
நிறையுடைய தாகுமோ நீர்மையொடு
நிலைதெளிதல் நேர்மை யாமே. (7)

### களியாட்டம்.

அய. உரியதாய் மொழியின்கண் ஒருநூலும்
கல்லாமல் உணர்வும் இன்றிப்
பெரியமதி மான்கள்போல் பேரவையில்
பேரொலிகள் பெருக்கித் தாமே

அரியதமிழ் தனைவளர்க்க அவதரித்து
வந்தவர்போல் அகம் செருக்கிக்
கரியமனப் புன்மையொடு களியாட்டம்
புரிகின்றார் கருமம் என்னே. (8)

நன்றாகப் படி.

௮௧. ஆங்கிலத்தின் அருங்கலையும் ஆகமாய்க்
கல்லாமல் அருமைத் தாயின்
பாங்குயர்ந்த தமிழ்மொழியும் படிமுறையில்
படியாமல் பகட்டுப் பட்டம்
தாங்கிவந்த அதிகாரத் தருக்கொன்றே
தலைக்கேறித் தருமம் குன்றி
வாங்கிநின்ற மதியினராய் வாங்காத
புகையினராய் வாழ்கின் றாரே. (9)

மட மகிழ்ச்சி.

௮௨. தனக்குரிய தாய்மொழியில் தான்பேச
மாட்டாமல் சபையில் ஏறி
எனக்கிதுநேர் தெரியாதென்று அயல்மொழியில்
ஏதேதோ இயம்பி நின்று
மனக்கினிய புகழ்ச்சியுடன் மாட்சிமிகப்
பெற்றதா மகிழ்ச்சி கூர்வார்
உனக்கினிய புதல்வரா யுற்றிருந்தும்
உனையறியார் ஊனம் என்னே. (10)

தாய் மொழியில் பேசு.

அக. எந்நாட்டும் தம்முடைய தாய்மொழியில்
பேசுதலே இயல்பாம் அன்றிப்
பின்னாட்டும் அயல்மொழியைப் பிழையாக
எவருமே பேசி நில்லார்
பொன்னாட்டுப் புகழ்நாட்டிப் போதமுடன்
நின்றதேனும் புகழ்மை வாய்ந்த
இந்நாட்டில் இந்நாளில் தமிழ்மொழியின்
இருக்குநிலை என்னே அம்மா! (11)

நாட்டுமொழி மதியார் காட்டு விலங்காவார்.

அச. பெற்றதாய் தனைமதித்துப் பேணாத
பேதைமக்கள் பிழையாய் ஓங்கி
உற்றநன்றி கொன்றவராய் ஊனமடைந்து
ஒழிகின்றார் உரிமை யாகப்
பற்றியதாய் மொழிபடியார் படியடைந்தும்
படியாத பதர்க ளாகி
வற்றியுணர் வொளியிழந்து வனவிலங்கின்
இனமாக வாழ்கின் றாரே. (12)

மொழியைப் பேணி ஒளியைக் காணுக.

அரு. தங்களுயர் தாய்நாட்டுத் தனிமொழியைத்
தலைமையுடன் தகுதி யாக
எங்கணுமே நன்குமதித்து இனிமையுடன்
போற்றுகின்றார் இந்நாட் டுள்ளார்

மங்களமாம் தமிழ்மொழியை வாயளவில்
பேசுகின்றார் மதிப்போ மாண்போ
பொங்கமுடன் புரியாமல் புலையாடிப்
போகின்றார் புலையாட் டென்னே. (13)

## பிறப்புரிமை.

௧௪. பிறப்புரிமை யுடன்வளர்ந்து பேச்சுவழக்
கினிதமைந்து பெருகி உன்றன்
சிறப்புடைய தாய்மொழியாய்ச் சீர்மிகுந்த
தமிழ்மொழியைச் செவ்வை யாக
உறப்பயின்று தெளியாமல் ஊன்படிந்து
திரிவாயேல் ஊனம் அன்றோ?
இறப்படையு முன்புநீ பிறப்படைந்த
பயன்பெறுதல் இனிமை யாமே. (14)

## மாடு பேசாது; மனிதன் பேசுவான்.

௧௫. மாடாடு முதலான மிருகங்கள்
வாய்பேசா; மனிதன் நேரே
பீடாகப் பேசுகின்றான் பிரசங்கம்
செய்கின்றான் பேச்சே வாழ்வை
ஈடாக இனிதியக்கி எவ்வழியும்
இயங்கிவரும் இயல்பை நோக்கின்
தேடாத உயிரொளியாய் மொழியிருக்கும்
நிலைமையினைத் தெளிய லாமே. (15)

## மனிதனும் மொழியும்.

எண்ணரும் பிறப்பில் யாவும் கடந்து
மண்ணிடை உயர்ந்த மானுட மாய் வரல்
புண்ணிய விளைவின் பொலிவே யாகும்;
விலங்கினும் மனிதன் பெரியவன் என்பது
5. பேசும் வகையில் பெருகி வந்தது;
பிள்ளையில் தொடர்ந்து பேசிய மொழியே
ஒள்ளிய உயிரின உயர் தாய் மொழியாய்த்
தெள்ளிய நேர்மையில் சிறந்து நின்றது;
பிறந்த நாடும் பேசும் மொழியும்
10. சிறந்த தாய்எனும் சீர்மையில் அமைந்தன;
வாய்மொழி யானஅத் தாய்மொழி ஒன்றே
அறிவருள் ஈகை ஆண்மை வீரம்
நெறிதரு நேர்மை நீர்மை சீர்மை
மானம் மேன்மை மாண்புடன் நல்கும்;
15. ஞான ஒளியாய் நலம்பல புரியும்;
உயிரின் கிழமையாய் மருவிய மொழியைப்
பயிலும் தோறும் பான்மை மிகப்பெறும்
பெற்ற தாய்எனப் பெரிதும் போற்றி
உற்றவுன் மொழியை உவந்து பேணின்
20. மறுமை நலங்கள் மருவி
இருமையும் பெருமையாய் இன்புற வருமே. (16)

வாய் பேசும் வாய்ப்பால் மனிதன் உயர்ந்துள்ளான்; வாய் மொழியான உன் தாய்மொழியை மாண்போடு பேணி மகிமை காணுக. மொழியின் வழியே வாழ்வுகள் வருகின்றன.

# 4. தமிழின் வாழ்வு.

## வானம் ஆண்டது.

௮௯. வான்ஆண்ட தேவரையும் மண்ஆண்ட
மன்னரையும் வழிமுன் காட்டித்
தான்ஆண்டு வந்தஒரு தமிழரசி
இந்நாளில் தலைமை குன்றிக்
கான்ஆண்ட இராமன்மனைக் கலைகளெலாம்
நிலைகுலைந்து கலங்கி யுள்ளாள்
தேன்ஆண்ட மொழியோடு திகழ்கின்ற
நாள்என்றோ செப்பாய் அம்மா! (1)

## மானம் மாண்டது.

௯௰. மானம்உள்ள ஒருமாமி வலியவாய்
மருமகள்முன் வாழ்வ தென்ன
ஞானம்உள்ள நம்தமிழ்த்தாய் ஆங்கிலத்தின்
எதிராக நாவடங்கி
ஊனமடைந் துள்ளமுடைந்து ஒளியிழந்திங்
கயல்ஒதுங்கி உறைந்திருக்கும்
ஈனநிலை தனையறிந்தால் எந்தமகன்
உள்ளந்தான் எரியா தம்மா! (2)

## மதிகேடு நீண்டது.

௯௧. அரசகுலத் தோன்றலே ஆனாலும்
தமிழ்மொழியை ஆழ்ந்து கற்றுப்
பரிசுபெறும் பெரும்புலமை படைத்தாலும்
இந்நாளில் பயனிங் குண்டோ?

உரிமையடற் றுயராத பதிகேடர்
முன்னிலையில் மதிப்பு நாடல்
சிங்கமது போர்வீரன் பேடியிடம்
திறலாண்மை விழைவ தாமே. (3)

## தலைக் கிறுக்கு.

௧௨. இந்நாளில் தமிழ்மொழிக்குப் புதுமலர்ச்சி
வந்ததாய் நம்பி எங்கும்
வாதாடி நிற்கின்றார் வருகின்ற
பேச்செல்லாம் வம்பே பேசித்
தீதாகத் தலைசெருக்கிக் கிறுக்குகளே
செய்கின்றார் தீமை யாக
பாரேனும் ஊதியமும் தன்னலமும்
அவாவியே அலைகின் றாரே. (4)

## மறு மலர்ச்சி.

௧௩. மறுமலர்ச்சி இந்நாளில் தமிழ்மொழிக்கு
வந்ததெனை மகிழ்ச்சி கூர்வார்
வெறுமலர்ச்சி எனுமெய்யை வெட்டவெளி
யாகவே விழைந்து கண்டு
பெறுமலர்ச்சி ஒன்றுமின்றிப் பிழைகளையும்
களைகளையும் பிழையாப் பெற்றுச்
செறுமலர்ச்சி செய்வதெல்லாம் செயிர்மலர்ச்சி
யாவதன்றிச் சேர்வ தென்னே. (5)

## கலைத்தாயே கதிகாட்டு.

௬௪. உண்ணவோ உணவில்லை உடுக்கவோ
உடையில்லை உயர்வுக் கான
வண்ணமுறும் அதிகார வளங்கள் ஒன்றும்
வாய்ப்பில்லை மதிப்பும் இல்லை;
பண்ணமைந்த செந்தமிழைப் படிப்பதனால்
என்னபயன் படியார் முன்னே
கண்ணழிந்து நிற்கவோ கலைத்தாயே
நிலைத்தமதி காட்டாய் அம்மா! (6)

## மதிகேடு மாய்க.

௬௫. தீண்டாதார் எனச்சொல்லிச் சிலர்தம்மைத்
திட்டிவந்த தீமை தீரத்
தோண்டாத வழிகளெல்லாம் தோண்டிவைத்துத்
தொழில்காட்டும் தோழன் மாரே!
வேண்டாதார் எனஒதுக்கித் தமிழ்கற்ற
மேதைகளை விலக்கி நேரே
மாண்டார்போல் நீண்டுநிற்கும் மதிகேடு
மாய்வதென்றோ வழுத்து வீரே. (7)

## மயக்கம் ஒழிக.

௬௬. தமிழ்வளர்ச்சி என்றுசொல்லித் தம்முடைய
வளர்ச்சிகளைத் தனியே நாடி
அமிழ்துறழும் மொழிகளினால் அயல்மதிக்கப்
பேசுவார் ஆழ்ந்து கற்றுத்

தமிழ்வளர்ச்சி என்பதெல்லாம் தமிழ்மக்கள்
வளர்ச்சிஎன்னும் தன்மை காட்டார்
இமிழ்திரைசூழ் உலகநிலை என்றுமே
எழில்மயக்கா யிழிவ தென்னே. (8)

மயல் கழிக.

௧௭. எழுதியுள்ள ஏடுகளை ஏற்றிவைத்துப்
பூசிப்பார்; இனிய கல்வி
முழுதுணர்ந்த புலவர்களை முன்எதிரே
தூசிப்பார்; மூட மாகத்
தொழுதுபலி பீடங்கள் துதிசெய்வார்
மனிதருக்குத் தொல்லை செய்வார்
இழுதைகளின் செயல்களெல்லாம் எவ்வழியும்
மயல்களாய் எழுதல் என்னே. (9)

உண்மை மதிப்பு உயருக.

௧௮. அருமையறிந்து ஆள்மதியார் ஆளையே
நினைந்தவர்தாம் யாவும் கற்ற
பெருமையுடை யார்என்று வீணாக
வெறும்பெருமை பேசிப் பேசிக்
கருமையுடை மனத்தராய்க் கற்றவரும்
மற்றவரும் களித்திந் நாளில்
ஒருமையுடன் சிறுமைகளை உலகறியச்
செய்கின்றார் ஊனம் அந்தோ! (10)

செருக்கு அழிக.

௯௯. தாங்கள்தமிழ்ப் படித்ததே தமிழ்செய்த
தவமென்று தருக்கு மீறிப்
பாங்களவு தெரியாமல் பயனிழவும்
உணராமல் பாழ்வாய் விண்டு
தேங்களவில் கழிநீர்போல் சிந்தையெலாம்
தீநாற்றம் வீச நீண்டு
ஈங்களவில் பிழைகளையே எவ்வழியும்
புரிகின்றார் ஈனம் என்னே. (11)

இழிவு நிலை தெளிக.

100. எளியதமிழ் வேண்டும்என்பார் எளிமைஎன்றால்
இன்னதென யாதும் தேரார்
வெளியளவில் சிலபேச வெளிவேடம்
பூண்டுள்ளார் வீணே நீண்டு
களிமயக்கில் திரிகின்றார் கல்வியறி
வொருசிறிதும் காணார் அந்தோ
இளிவழியில் உழலுகின்றார் இழிவுநிலை
தெரியாமல் என்னே அம்மா! (12)

மருள் மடிக.

101. ஒருமொழியில் பலபிழைகள் உளவாக
வெளியறிய உளறி னாலும்
பொருளுடையார் சொல்லினே அதுவும்ஒரு
பொருளாகப் புகழ்ந்து கொள்வார்

மருளுடைய வுலகமிதில் பொருளுடைமை
செய்துவரும் மாயம் கண்டே
தெருளுடைய அறிஞர்களும் அதைநாடி
உறிஞரெனத் திரிகின் றாரே. (13)

### பொருள் நிலை அறிக.

102. பொருள்நிலைகள் நிறைந்தவரின் பொறிவெறிகள்
மிகுந்துவரும் புனித மான
அருள்நிலைகள் அகன்றொழியும் அறிவுநிலை
அவர்க்கயலாம் ஆத லாலே
தெருளுடைய கல்விநலம் சேராமல்
சிறுமைகளில் சேர்ந்து சேர்ந்து
மருளுடைய ராயிழிந்த மாறாகிப்
போகின்றார் மருமம் தேர்க. (14)

### தமிழைப் படி.

103. பாலூட்டிச் சோறூட்டிப் பசுந்தமிழை
வளர்ப்பதுபோல் பரிவு காட்டி
மாலூட்டித் திரிகின்ற மதியுடையீர்!
மதிஒன்று பதித்துக் கேண்மின் !
நாலூட்டி நவமூட்டி நலமூட்டி
வளர்தமிழை நாடி நீங்கள்
தாலூட்டிப் படியுங்கள் தாயன்பு
செய்யுங்கள் தகைமை யாமே. (15)

குறளை மனனம் செய்.

104. ஒருநூறு குறளேனும் உள்ளத்தில்
பதிவுசெய்க உயர்நூல் தம்முள்
இருநூறு கவிகளையும் இயல்சங்க
நெறிகளையும் எண்ணி ஆய்ந்து
பெருநீர்மை யுடன்வாழ்க பேருலகில்
மனிதனாய்ப் பிறந்தும் பேசும்
திருவான மொழிபயிலார் திருவிலிக
ளாயிழிவர் தெளிக தேர்ந்தே. (16)

மனிதனும் மிருகமும்.

105. மாடுகளும் ஆடுகளும் வாய்பேச
மாட்டாகாண்; மனிதன் மட்டும்
பீடுபெறப் பேசுகின்ற பெருமிதத்தைப்
பெற்றுள்ளான்; பேச்சுக் கெல்லாம்
கூடுகின்ற மூலமுதல் மொழியாகும்
அம்மொழியைக் கூர்ந்து கல்லார்
காடுகளில் திரிகின்ற கடுவிலங்கிற்
கடையராய்க் கழிந்து போவார். (17)

உற்றதை உணர்.

106. தமிழ்வளர்ச்சி வேண்டுமெனத் தனிமுழக்கம்
செய்கின்றார் தாமும் கல்லார்
அமிழ்தூறும் தமிழ்மொழியை ஆதிமுதல்
கற்றவரை யாதும் பேணார்

குமிழ்ச்சிரிப்பார் அவமதிப்பார் கூட்டங்கள்
மிகக்கூட்டிக் கோட்டி கொள்வார்
உயிர்த்திழிவை உழக்கின்ற ஊனநிலை
ஒழிவதென்றோ உரையாய் அம்மா! (18)

## கற்றவரைப் போற்று.

107. கற்றவரை அவமதிப்பார் கல்லாரை
மிகமதிப்பார் கல்வி எங்கும்
வெற்றியுடன் பரவியிந்த நாடெங்கும்
தமிழ்விரிய வேண்டும் என்பார்
உற்றவுணர் வொன்றுமே உள்ளத்தில்
இல்லாமல் உளறி நிற்பார்
பெற்றதாய் வயிறெரியப் பிழைகள்புரி
பேதைகளாய்ப் பெருகி யுள்ளார். (19)

## பேச்சுப்படி நட.

108. பேச்சாளர் பெருகிநின்றார் பேசுகின்ற
படியொன்றும் பேணிச் செய்யார்
வாய்ச்சாலம் புரிகின்றார் வளமைகளைக்
கொழிக்கின்றார் வாய்மை குன்றி
நாச்சாலம் புரிவதால் நவையன்றி
நலம்ஒன்றும் நண்ணு தந்தோ
நீச்சான நிலைதெரிந்து நெறிநின்று
வினைபுரியின் நேர்மை யாமே. (20)

கள்ள வேடம் போடாதே.

109. உள்ளத்தில் உண்மையின்றி உலகத்தில்
பலகோடி உளறி னாலும்
எள்ளைத்த நலமேனும் எதிர்காண
இயலாதே இதயத் துள்ளே
கள்ளத்தை மறைத்துவைத்துக் காசினியில்
நல்லவர்போல் காட்டி நிற்றல்
பள்ளத்தில் நஞ்சுள்ள படுபுனல்போல்
அடுதுயரம் படுக்கு மன்றே. (21)

செயலில் உயர்.

110. அயல்நாட்டில் விளைந்துள்ள அருங்கலைகள்
யாவுமே ஆய்ந்து தேர்ந்து
இயல்நாட்டித் தமிழ்மொழியில் தெளிவாக
மொழிபெயர்த்திங் கினிது சேர்மின்
செயல்நாட்டிச் சீர்நாட்டி எவ்வுலகும்
தமிழ்பரவிச் செழிக்கச் செய்மின்
மயல்நாட்டித் திரியாமல் மதிநாட்டித்
திரிந்துவரின் மாண்ப தாமே. (22)

தமிழை ஆங்கிலேயன் வாங்கச் செய்.

111. ஆங்கிலத்தை நீவிழைந்து படிக்கின்றாய்!
உன்தமிழை ஆங்கி லேயன்
பாங்கோடு மனமகிழ்ந்து படிக்கின்ற
படிசெய்தால் பரிந்து நீயே

சங்கினிய தமிழ்ஞர்க்கும் இடர்ப்புடைய
ஆகின்ருள்; இதனை எண்ணி
ஓங்கிவினை புரிந்துயர்க ஒழிந்தாயேல்
இழிந்தாய்காண் உணர்க ஓர்ந்தே. (23)

மத மயக்கம்.

112. அந்நியரின் மொழியான ஆங்கிலத்தைப்
படித்தவரே அறிஞர் என்ன
இந்நிலத்தில் எல்லாரும் மையலாய்
எண்ணிஞர் என்னை என்னை
மன்னியநந் தமிழ்மொழியை மதியாமல்
மதியிழந்து மருண்டு போனர்
எந்நிலத்தும் சொந்தமொழிக்கு இந்தவகை
இழிவென்றும் வருதன்றே. (24)

மடமைத் தலைமை.

113. அரியதமிழ் வாசனையே அறியாத
ஒருவனைப்போய் அழைத்து வந்து
பெரியகலை வாணர்களின் பேரவைக்குத்
தலைமையாப் பேணி வைப்பார்;
உரியதமிழ்ப் புலமைக்குளோர் ஊனமென
ஒருசிறிதும் உணர மாட்டார்;
கரியமனச் செருக்கோடு கலைக்கொலைகள்
புரிகின்ருர் களித்து நின்றே. (25)

### புண்பாடு.

114. பண்பாடு வேண்டுமெனப் பலபலவும்
பேசுவார் பழியுள் வீழ்ந்து
புண்பாடே புரிகுவார்; புலைகளையே
போற்றுவார்; புன்மை எங்கும்
கண்பாடு கொள்ளாமல் களித்துவிழித்
தெவ்வழியும் கதித்து நீண்டு
மண்பாடு மருவிவர மதிகேடு
பெருகிவர வளர்கின் றுரே! (26)

### நிலை குலையாதே.

115. மெய்யான பொருள்என்னும் மேலான
கல்விதனை மேவி நின்றும்
பொய்யான பொருள்நாடிப் புல்லரிடம்
போய்நின்றுல் புலமை குன்றி
ஒய்யார நிலையொழியும் ஊனங்கள்
ஏறிவரும் உணர்ந்து கொள்க
செய்யாளின் அருளெல்லாம் தொழில்வழியே
வருமதனைச் செய்து வாழ்க. (27)

### மனிதனைப் பாடாதே.

116. நரகவனம் நரகவனம் ஆதலினுல்
மனிதனைநீ நயந்து பாடி
இரவலன்போல் ஏருதே ஏதேனும்
ஓர்தொழிலை ஏன்று செய்து

வரவறிந்து மானமுடன் வாழ்ந்துவரின்
மகிழ்ச்சியுடன் மகிமை ஓங்கிப்
புரவலன்போல் இருக்கவரும் புனிதநிலை
தனையுணர்ந்து புரிதல் நன்றே. (28)

நர கவனம்—நரக வனம். மனிதனை வீணே புகழ்ந்து பாடு வது நரக துயரமான பழியாம். இழிவான அவ்வழியை ஒழிக.

மண்டையரிடம் மருவாதே.

117. தமிழ்மொழியை அறியாமல் தருக்கியுழல்
புல்லரிடம் தழுவி அன்பாய்
அமிழ்தநறும் கவிநிலையை அமைதியுடன்
மொழிந்தாலும் அவமே யாகும்
கமழ்மலரின் மாலையினைக் கழுதையிடம்
காட்டினன் கண்ட வாறே
அமிழ்தினிய தமிழ்நலனை அறிவிலிக
ளிடமொழிதல் அவல மாமே. (29)

பேசத் தெரிந்தது.

118. இந்நாட்டில் பிறந்தமையால் தமிழ்மொழியை
எளிதாகப் பேச நேர்ந்தார்
அந்நாட்டம் ஒன்றுனே அரியதமிழ்ப்
புலமையெலாம் அடைந்தார் போலத்
தந்நாட்டம் மருண்டிருண்டு தருக்கேறிப்
புலவர்களைத் தாழ்த்துப் பேசி
எந்நாட்டும் இல்லாத இழிவுகளைத்
தெளிவாக இயற்றி நின்றார். (30)

பிழைக்கப் புகுந்தது.

119. தான்பயின்று நெடுங்காலம் தவித்தடைந்த
சட்டத்தில் சதுரைக் காட்டார்;
வான்பயின்ற கலைகளிலே வன்மைஒன்றும்
வளமாக வாய்ந்து நீட்டார்;
ஊன்பயின்ற உரையாடி ஒருநூலும்
படியாமல் உபாயம் சூழ்ந்தே
தேன்பயின்ற தமிழ்நிழலில் சிலர்வளமாய்த்
திரிகின்றார் தேசம் என்னே. (31)

கவிஞர் கவலை.

120. மன்னரினும் மேலாக மகிமையுடன்
வாழ்ந்திருந்து மகிமை பூண்டு
நன்னயங்கள் எவ்வழியும் நாட்டுக்கு
நயந்துபோய் நாடிச் செய்து
பன்னரிய நீதிகளைப் பண்புடனே
போதித்துப் பண்டிருந்த
இன்னமுதக் கவிஞரிங்கே தமிழிருக்கும்
நிலையுணர்ந்தால் என்செய் வாரே? (32)

தாழ்வுக்குத் தமிழ்.

121. தாழ்ந்துநிற்கும் நிலைமைக்குத் தமிழ்ஒன்று
படித்தாலே சாலும் என்று
சூழ்ந்துநிற்கும் சூழல்களால் துறைதோறும்
உணர்ந்துணர்ந்து துயரம் கூர்ந்து

வாழ்ந்திருக்கும் ஒருபுலவன் வயிறெரிந்து
 கைதானேல் வைய மெல்லாம்
ஆழ்ந்திருக்குந் துயரதனில் ஆழாமல்
 இருக்குமோ அறிக ஆய்ந்தே. (33)

## மூவகை நிலை.

122. கற்றவர்கள் அகந்தையினுல் கலந்துமகிழ்
 பெரும்பேற்றைக் கருதா தந்தோ
முற்றிழந்தார் மற்றவரோ முறைதெரியா
 தயல்நின்று மூடம் ஆனர்
உற்றபெரும் செல்வர்களோ உதவாமல்
 உளஞ்செருக்கி உணர்வொ ழிந்தார்
எற்றேநம் தமிழ்ப்புலமை இன்பமுறப்
 பெற்றிங்கே இலங்கு நாளே. (34)

## பரிசிலின் பரிவு.

123. அக்காலப் பாரியே அவதரித்து
 வந்தான்என்று அளவு கூறி
மைக்கால முகிலனைய வள்ளலென
 வழங்காத புல்லர் தம்பால்
புக்காடல் புரிகின்ருர் போகாதீர்
 எனமாறர் புகன்றி ருந்தும்
இக்கால நிலைதெரியார் பரிசில்எனப்
 பலரிடம்போய் இரக்கின் ருரே. (35)

### பிறரிடம் போகாதே.

124. யாரிடமும் போகாமல் எவரிடமும்
கேளாமல் ஆண்மை யோடு
நேரிடமாய் ஒருதொழிலை நிலையாகப்
பற்றியே நிலைத்து வாழ்க
பாரிடம்நீ பிறரிடம்போய்ப் பயனடையப்
பார்த்தாயேல் பரிவே ஓங்கி
ஓரிடமும் கிடையாமல் உயர்நிலைகள்
எல்லாம்போய் ஒழியு மன்றே. (36)

### முயற்சியே உயர்ச்சி.

125. செய்கின்ற முயற்சியிலே திருமகளும்
மருமகளும் சேர்ந்து வந்து
பெய்கின்ற வானமெனப் பெருங்கருணை
பொழியவே பேணி யுள்ளார்;
உய்கின்ற தொழிலுடையான் உறுநிலம்
யாவுமே உடையான்; இன்றேல்
நைகின்ற துயரமொடு நாணமழிந்
திழிநிலைகள் நண்ணு மன்றே. (37)

### புலமை நிலை.

126. எள்ளென்னும் முன்னமே எண்ணெயென
நின்றருளும் இயல்பு வாய்ந்த
வள்ளியோர் அன்றிருந்த வண்ணத்தால்
வண்புலவர் வளமை கூர்ந்து

ஒள்ளியபொற் சிவிகைமுதல் ஊர்ந்துவந்தார்
அரசரினும் உயர்ந்து நின்றார்
தெள்ளுதமிழ் உடையரின்று எள்ளலுற
நேர்ந்ததென்ன தீமை அம்மா! (38)

## தலைமை குன்றல்.

127. என்றுமே குறையாத இயல்புடைய
கல்விஎனும் இன்பச் செல்வம்
நன்றமையப் பெற்றிருந்தும் அதனருமை
தெரியாமல் நயந்து பாடி
ஒன்றுமே உதவாத உலோபரிடம்
உவந்துபோய் உயர்வு குன்றி
நின்றுவரல் வீரன்ஒரு பேடியிடம்
நிற்றல்போல் நீச மாமே. (39)

## மதிக் கலை.

128. தனித்தமிழைக் கற்றவர்கள் தாய்மொழியைப்
பேணிநிற்கும் தகைமை வாய்ந்தும்
துனித்தநிலை யுடையராய்த் துயர்வறுமை
சிறுமையின்று தோய்கின்றார் என்று
இனித்தமன முடையசிலர் இரங்குகின்றார்
எழிலொளிசேர் மணிதான் ஈன
'டைப் படினஎனுமை மதிககலர்முன
மதிக்கலைஞர் மதிப்பென்னுமே? (40)

### கற்றவர் கலுழ்தல்.

129. தேனோடு மொழியோடு திகழ்தமிழின்
சுவைநுகர்ந்து தெளிவு கொண்டு
வானோடு புகழோடு வளர்ந்துமனம்
மகிழ்ந்திருந்தார் இந்நாள் இங்கே
ஊனோடும் உளமெலிய உணர்வுதளர்ந்து
உயிருளைந்துள் உறுதி குன்றி
ஏனோஇத் தமிழ்படித்தோம் எனவருந்தி
இரங்குகின்றார் என்னே அம்மா! (41)

### பெரிய மடங்கள்.

130. சைவமொடு தமிழ்வளர்க்கத் தக்கனவாய்
முன்னோர்கள் தழுவி வைத்த
செய்யதிரு மடங்களெல்லாம் சிறுமடங்கள்
பெருமடங்கள் எனச் செழித்தே
ஐயஒரு நலமேனும் ஆற்றாமல்
வேறாற்றில் அமைந்து நின்று
வையமது வையஅதை வாழ்த்தாக
ஏற்றுநிற்கும் வரிசை என்னே. (42)

### அரிய செயல்.

131. பொன்னோடு மணிஅணியும் புவிவேந்தர்
தங்களினும் புலவர் என்றும்
முன்னோடு புகழுடையார் என்னுமுது
மொழிமறந்து மூழ்கி னாலும்

மன்றேறு புலமுடைய சிலர்துணிந்து
தமிழ்த்தாயின் மானம் காத்துப்
பின்றேறு பிழைகளைந்து பெருமையுடன்
வீறுகொண்டு பெருகி யுள்ளார். (43)

நாட்டு வாழ்வு.

132. தண்ணீர்தா சாமிஎனத் தவித்தவனைப்
பாராமல் தாவிப் போனான்
உண்ணீர்ஓ ஐயரே! எனவுரைத்தான்
தனைப்பார்த்தான் ஒதுங்கிச் சென்றான்
எண்ணீர்மை யுடனிகழ்ந்து வாட்டர்மேன்
எனஇசைந்தான் எதிரே ஓடித்
தண்ணீரை வார்த்துநின்றான் தமிழ்நாட்டின்
தாழ்வையிது சாற்றிற் றன்றே. (44)

ஒரு புகைவண்டி நிலையம்; மத்தியான வெயில்; வாளியில் தண்ணீரை நிரப்பிக்கொண்டு ரயிலில் உள்ள பிரயாணிகளுக்கு ஒருவன் நீர்வார்த்துப் போனான்; அவன் பார்ப்பன மரபினன்; உண்ணீர் உதவிப் போகின்ற அவனை நோக்கிப் பின் வண்டியி லிருந்த ஒருவன் "சாமி! தண்ணி தண்ணி" என்றான். அவனைத் திரும்பிக் கூடப் பாராமல் நேரே போனான்; அவனுக்கு முன் பக்கம் அடுத்த வண்டியிலிருந்தவன் "அய்யரே! தண்ணீ" என் றான்; அவனைத் திரும்பிப் பார்த்தான்; ஆனால் தண்ணீர்கொண்டு வரவில்லை; எல்லாருக்கும் பின் வண்டியிலிருந்த ஒருவன் "**வாட்டர் மேன்!**" என்று கூவினான்; உடனே அவனை நோக்கி இவன் ஓடினான்; தண்ணீரைப் பணிவோடு வார்த்து நின்றான். **சாமி, ஐயர்** என்ற விழுமிய தமிழ் மொழிக்குச் செவி சாயாத வன் வாட்டர்மேன் என்ற ஆங்கில வார்த்தையைக் கேட்டதும் ஓட்டமாய் ஓடிவந்து நீர் வார்த்துப் பணிவாய்த் தாழ்ந்து நின்ற

அந்நிலே அந்த மொழியில் இந்த நாடு எவ்வளவு மோகம் கொண்டு எத்துணை மயங்கி எப்படி அடிமையாய் அடங்கி ஒடுங்கி முடங்கி மானம் கெட்டுக் கிடக்கின்றது என்பதை அன்று நன்கு காட்டி நின்றது. நாட்டுக் காட்சி நாணக் கேடாய் நீண்டது.

தமிழ்மொழி முன்னம் உன்னத நிலையில் ஒளி மிகுந்திருந்தது; அந்த இனிய மொழியைத் தனியுரிமையாக உடைய இந் நாடு எந்நாடும் புகழ்ந்து போற்றும் நிலையில் எவ்வழியும் ஏற்றமாய் உயர்ந்து நின்றது; அன்று இருந்த அந்த உயர் நிலையையும் இன்றுள்ள துயர் நிலையையும் கருதி உணருந்தோறும் உள்ளம் உருகி அயர்கிறது. எந்த நாட்டிலாவது தன் சொந்த மொழிக்கு இந்தவாறு இழிவு நேர்ந்திருக்குமா? இங்கே நேர்ந்துள்ள இந்நிலையைச் சிந்தனைசெய்து நோக்கின்நிந்தனைகளைநேரேதெரியலாகும்.

மக்கள் நிலை.

133. மன்னுயிர்கள் யாவுமே மதிதெளிந்து
கதியடைய மகிமை வாய்ந்த
இன்னமுத மொழிகளினுல் இனியபெரும்
போதனைகள் எளிது தந்து
மன்னிவரு புகழோடு மருவிவரும்
தமிழ்த்தாயே உன்னை வாயால்
பன்னிவரு மக்களுன்றன் பண்புணரா
திருப்பதென்ன பாவம் அம்மா! (45)

தாயுணர்வு.

134. வாய்மொழி கின்ற தாய்மொழி உணர்வை
ஓர்ந்து கொண்டார் உயர்கதி கண்டார்
ஓரா திருந்தார் உறுதி
பாரா திழிந்த பதடிக ளானுர். (46)

# 5. கலையின் நிலை.

## கலைக் கலக்கம்.

135. நிலையான கலைஞானம் நிலவிநின்ற
இந்நாட்டில் நிலைமை குன்றிப்
புலையான புல்லறிவில் புலன்திரிந்தும்
நலனுடையார் போன்று பொங்கித்
தலையான புலமைகளைக் கவிதைகளைத்
தமிழ்நடையைத் தகைமை யின்றித்
தொலையான வசைபுகன்று சுடுபழிகள்
சுமந்துபலர் தொலைகின் றாரே. (1)

## கலக்கணீர்.

136. இலக்கணங்கள் கற்றவர்கள் இலக்கியங்கள்
பயின்றவர்கள் இந்நாள் இங்கே
அலக்கணுறும் படியாக அவை அறியார்
அவைஏறி அவங்கள் பேசிப்
புலக்கணுடை யார்போன்று புலம்புகின்றார்
சிலரவரைப் புகழ்ந்து கொள்வார்
கலக்கணீர் சொரிந்திந்தக் கண்ணிலிகட்கு
இரங்குகின்றார் கருணை யாளர். (2)

## புதுமை மோகிகள்.

137. பண்டிதர்கள் நடைஎன்றும் பழமைவிரும்
பிகள்என்றும் பாரின் ஓட்டம்
கண்டிலர்என் றும்பலவும் கண்டவர்போல்
கண்டபடி கரைந்து கூறிப்

பண்டையுயர் நலங்கள்எல்லாம் பரிகாசம்
செய்துதாம் பழிவாய் நீண்டு
மிண்டிஎழுந் திந்நாளில் புதுமைமோ
கிகள்பலபேர் விளைந்தார் அம்மா! (3)

மதி கேடர்.

138. பேசுகின்ற மொழிகளிலே கொச்சையாய்ப்
பாடுவதே பெருமை என்று
கூசுகின்ற அறிவேதும் ஒருசிறிதும்
இல்லாமல் கூறு கின்றார்
தேசுமிகு கவிநலனும் தெளிவுடைய
கலைநிலையும் தெரிந்தார் போல
மாசுமிகப் பேசுகின்றார் மதிகேடர்
மதிகேடு மானக் கேடே. (4)

பேச்சிலே பாடல்.

139. ஆச்சுதே போச்சுதே ஆயுதே
பாயுதே ஆத்தா என்று
பேச்சிலே வருமொழிகள் பாட்டிலே
பாடாமல் பிழையாய் முன்னாள்
நீச்சிலே நின்றவர்கள் நிலைசெய்து
போயினரந் நிலையை மீறி
வீச்சிலே பாடினார் இவரென்ன
அவரைமிக வியந்து கொள்வார். (5)

புலையாடல்.

140. கலைநலங்கள் கருதாமல் கலகலத்து
வருகின்ற கருமத் தாலை
நிலையாகப் படித்ததுவே நிலையான
புலமையென நிமிர்ந்து நின்று
தொலையாத வாதங்கள் எங்கணுமே
தொடர்கின்றார் தோல்வி கண்டும்
புலையாடல் ஒழியாமல் போராட்டம்
புரிகின்றார் புலையாட் டென்னே! (6)

ஈன விளைவு.

141. ஆனந்தம் தருமென்றும் அறிவுநலம்
வருமென்றும் ஆசை காட்டி
ஊனங்கள் விளைத்துள்ளே ஒருபயனும்
இல்லாமல் உலாவும் தாள்கள்
ஈனங்கள் விளைத்துவரும் இயல்நோக்கி
அறிஞரெல்லாம் இரங்கு கின்றார்
பானந்தான் என்றாலும் கள்அருந்தல்
பழியன்றோ பாவம் உண்டே. (7)

பதடிகள்.

142. பொல்லாத போலிகளும் புலையான
பதடிகளும் பொங்கி நின்று
கல்லாத கலைகளெலாம் கற்றதுபோல்
வெளிவேடம் காட்டி நீண்டு

செல்லாத வழிகளெல்லாம் சென்றுசென்று
சீரழிந்து திரும்பு கின்றார்
ஒல்லாத இவர்நிலைக்கும் உயர்நிலைக்கும்
ஒருதொடர்பும் இல்லை அன்றே. (8)

## தரிசு நிலம்.

143. பரிசுபல தருவதாப் பாரறிய
வெளியிட்டுப் பகட்டுப் பட்டம்
பெரிசுபடப் பேர்துலக்கிப் பேயாட்டம்
ஆடுகின்றார் பேயர் அந்தோ
வரிசைஒன்றும் உணராமல் மதிமாண்பும்
தெரியாமல் வசையே பேணித்
தரிசுநிலம் போல்இந்தத் தமிழுலகைச்
செய்கின்றார் தருமம் ஆமோ. (9)

## கபட நாடகம.

144. சின்னஒரு செயலேனும் செம்மையுடன்
செய்யாமல் செருக்கே மீறித்
தன்னுடைய பெயருயர்வு தாரணியில்
ஓங்கிவரத் தாழ்ந்து சூழ்ந்து
மன்னுடைய மன்றத்தில் மாட்சியுடன்
ஆட்சிசெய்ய மையல் மண்டி
நன்னயமாய் நடத்திவரும் நாடகங்கள்
நாடெங்கும் நடத்தல் நன்றோ? (10)

இறுமாப்பு.

145. என்னவகை நிலையேனும் எக்கருமம்
செய்தேனும் ஏற்ற மாகப்
பொன்னைமிகத் திரட்டிவைத்துப் புறத்தொன்றும்
போகாமல் பொத்தி இங்கே
என்னைவிடப் பணக்காரன் யாரென்னும்
இறுமாப்பில் ஏங்கி அந்தோ
தன்னைமறந் துழல்கின்றார் தாம்போகும்
நிலைதெரியார் சாபம் என்னே. (11)

படு கோலை.

146. புற்றில்எழும் ஈசல்எனப் புலநலம்ஒன்
றில்லாமல் புன்மை யான
வெற்றுரைகள் மிகமலிந்து வீணுகக்
கவிகள்என வெறியே மண்டிச்
சுற்றிவரு சுவடிகளைச் சூழ்வணிகக்
கபடமுடன் துலக்கி வைத்துப்
பற்றுகலை வளர்ப்பதாப் படுகொலைகள்
புரிகின்றார் பலபேர் அம்மா. (12)

கரவுகள்.

147. உரிமையாய் உள்ளம்உவந்து உயர்கலையைப்
பேணுவார் ஒருவ ரேனும்
பிரியமாய் நான்எண்ணும் படியிங்கே
பிறக்கவில்லை பிறந்தார் எல்லாம்

கரியமன நிலையினராய்க் கரவுதனில்
உரியவராய்க் காண நேர்ந்தார்
அரியஒரு பெரியவனை அவாவியே
அலைகின்றேன் யாண்டும் காணேன். (13)

சிலுகுகள்.

148. உலகமகா கவிகளெலாம் தலைவணங்க
ஒளிர்கின்ற உதய ஞான
திலகமெனும் கம்பனைமுன் திருவயிறு
வாய்த்திருந்த தேசம் இன்று
கலகட[illegible]ம் சிலுகுரைகள் கவிகள்என
வெளிவருதல் கண்டு நொந்து
பலகாலும் அழுகின்ற பரிதாப
நிலைவிண்டு பகர லாமோ. (14)

வம்புகள்.

149. கம்பன்அடித் துகள்நிலையும் காணாத
கழிமடங்கள் கம்பன் பாட்டின்
செம்பொருளும் வெண்பொருளும் தெளிபொருளும்
தெரிந்தவர்போல் செருக்கு மீறி
உம்பர்அமு தங்களென ஒளிமிகுந்த
கவிகளிலே ஊனம் செய்து
வம்புகளை மிகவளர்த்து வசைவளர
வளர்கின்றார் வளர்வது என்னே. (15)

கண்பாடு.

150. வெண்பாவுங் கலிப்பாவும் விளிப்பாவும்
மேலான விருத்தப் பாவும்
பண்பாடு பலகனியப் பாடிவந்த
கவிஞரெலாம் பரிந்து நொந்து
புண்பாடு மிகவுடையப் புன்கவிகள்
பலநிலையில் போலி யாகக்
கண்பாடு படவந்து கலித்துளவே
கலிநிலையின் கலிப்பென் அம்மா! (16)

வெறி நிலை.

151. அறிவுநலம் கனிந்துவரும் அரியபெரு
நூல்நிலையை அறிய மாட்டார்
செறிவுடைய பொருள்நலங்கள் சிறிதேனும்
சேராமல் சிறுமை சேர்ந்து
வெறிநிலையில் வருவதையே விரிவான
விவேகமென விழைந்து பேசி
வறியஅவர் புலைநிலைகள் வசைநிலையாய்
வளர்ந்துவர வருகின் றாரே. (17)

கலைக் கோலை.

152. கலைகளையாம் வளர்க்கின்றேம் காசினியீர்
என்றுசிலர் கலையின் பேரால்
கொலைகளையே வளர்க்கின்றார்; கொடுமைகளே
சூழ்கின்றார்; குரோத மான

புலைகளையே பேசுகின்றார்; புன்மைகளே
புரிகின்றார்; போதம் வாய்ந்த
நிலைகளைநேர் நினையாமல் நெறிகேடே
செய்கின்றார் நிலைமை என்னே. (18)

வசை விளைவு.

153. உண்மையாய் அறிவமைந்த உயர்கலையை
உணர்வூன்றி உவந்து கற்றுத்
திண்மையுடன் எவ்வழியும் செவ்வையாய்த்
தெளிந்துள்ள தீர ரான
ஒண்மையுறு கலைஞர்களை இந்நாட்டில்
எவரேனும் உரிமை கூர்ந்து
வண்மையுடன் ஆதரித்த வகைசிறிதும்
கண்டிலேன் வசைஎன் அம்மா. (19)

காலக் கூத்து.

154. மாதொருத்தி கால்தூக்கி மன்னுசபை
எதிர்காட்டி மருட்டிக் கையை
மீதயலே செலவீசிக் கண்சுருட்டிக்
குதித்தாடின் விழைந்து நோக்கிக்
காதலொடு தலையாட்டிக் கலையாட்டம்
என்றுள்ளம் களித்துக் கொள்வார்
ஆதரவாய் மந்திரிகள் அக்கூத்துக்
கேதலைமை அவாவி நிற்பார். (20)

### கல்லாத கலைஞர்.

**155.** பொல்லாதார் நல்லரெனப் புல்லரெல்லாம்
வல்லரெனப் புனிதம் யாதும்
இல்லாதார் பெரியரென இனியாதார்
இனியரென இயல்கள் ஏதும்
கல்லாதார் கலைஞரெனக் காணாதார்
கண்ணரெனக் கடமை ஓர்ந்து
நில்லாதார் நிலையரென நெடியராய்
எங்கணுமே நிலவு கின்றார். (21)

### ரசிகமணிகள்.

**156.** அரசியலின் நிலைசிறிதும் அறியாதார்
அரசமன்றத் ததிபர் ஆகி
வரிசைபெற வரலானார்; வண்கவியின்
வெண்பொருளும் வகைசெய் தோரா
விரசமுடை யாரெல்லாம் ரசிகசிகா
மணிகளென வெளியே வந்தார்;
சரசமுடன [illegible]செயங்கள் இவ்வண்ணம்
பலகோடி தழைத்த அம்மா! (22)

### அவிச் சுவையாளர்.

**157.** புவிச்சுவையே பொருளாகப் பொறியோடிப்
புலன்மாறிப் போதம் இன்றி
அவிச்சுவையே அவாவிவரும் அகச்சுவையில்
அலமந்தும் அருமை யான

சுவிச்சுவைகை வந்தவர்போல் கண்டவிடம்
எங்கணுமே கரைந்து நின்று
செவிச்சுவையைச் சிதைக்கின்றார் செழுஞ்சுவையின்
கலைசெய்த தீமை என்னே. (23)

புலைப்புன்மை

158. எந்நாட்டும் பெறலரிய இனியபெரும்
கலைச்செல்வம் இயல்பாய் ஓங்கி
இந்நாட்டில் என்றுமே எழிலோடு
பெருகியுளது இருந்தும் அந்தோ
தந்நாட்டம் தெரியாமல் தனிநாட்டம்
காணுமல் தவறே மண்டிப்
புன்னுட்டம் உடையராய்ப் புலையாடி
நிற்கின்றார் புன்மை என்னே. (24)

போறிச்சுவை

159. அறிவிலெழும் ஆனந்தம் அறியாமல்
அயல்ஒதுங்கி அவமே பேசிப்
பொறியிலெழு சுவைகளையே பொங்கிஎங்கும்
நுகர்கின்றார் புலமை யின்பம்
நெறியிலெழு கலையிலன்றி நிலைதிரிந்து
புலைபேசி நிமிர்ந்து நிற்கும்
வெறியில் என்றும் விளையாதே விளைவறியா
திழிவுறுதல் விளிவே யம்மா (25)

மொழிவாதம்

160. இந்திமொழி வந்துவிடின் சொந்தமொழிக்கு
ஆபத்தென்று எழுந்து துள்ளி
அந்தமொழி இங்கடையின் ஆருயிரை
விடுத்தேனும் அழிப்பேம் என்று
வெந்தமொழி வீரராய் வீறுகொண்டு
திரிகின்றார் வீணே அம்மா
எந்தமொழி கற்றாலும் எக்கலைகள்
பயின்றாலும் ஏற்றம் ஆமே. (26)

பிதற்றுதல்

161. தாய்மொழியும் கல்லாமல் தந்தைமொழி
கேளாமல் தனைய ரென்று
வாய்மொழிகள் பலபேசி வயிற்றளவில்
குறிக்கோளை வளர்த்து நேரே
பேய்மொழிகள் பேசுதல்போல் பிழையாகப்
பிதற்றுகின்றார் பெருமை எல்லாம்
தூய்மொழியில் புரிகின்ற தொழிலியலில்
தருவிவரும் தோய்க நன்றே. (27)

அவல ஆட்டம்

162. கூட்டமாய்ச் சிலர்திரண்டு கூடிநின்று
கோதாடிக் கோட்டி கொண்டு
நாட்டமாய்த் தம்முடைய பெருமையையே
எவ்வழியும் நாவை நீட்டித்

தேட்டமாய்ப் பேசுகின்றார் தேர்ந்தவர்போல்
நடிக்கின்றார் செருக்கே மண்டி
ஆட்டமாய் ஆடுகின்றார் அவலரிவர்
அவநிலையை அறியார் அந்தோ. (28)

கலைச்சோரம்

163. மலைச்சாரல் வனம்முதலாத் தனிவழியே
வருவாரை வழிமறித்துப்
புலைச்சோரர் பொருள்கவர்வார் பொல்லாதார்
எனப்புகல்வார் புலக்கண் இன்றிக்
கலைச்சோரம் புரிந்துசிலர் களவாகப்
பிறர்நூலுட் பல கவர்ந்து
நிலைச்சோரம் செய்கின்றார் நெடுஞ்சோரர்
இவர்க்குநிகர் நிலத்தில் யாரே? (29)

எழுத்தாளர்

164. எழுத்தாளர் எனஎழுவார் எழுதும்நிலை
எதிர் அறியார் எழுதி ஏதோ
முழுத்தாளும் கரிஆக்கி முதலகில்
வெளியாக்கி முயன்று கற்ற
பழுத்தபெரும் புலவரினும் தாம்பெரியர்
எனச்செருக்கிப் பழுது கூறிக்
கழுத்தாழம் தெரியாமல் காலாழம்
கண்டுநிற்பார் கருமம் என்னே! (30)

## தீப்பூகேள்

165. கைபெழுத்துத் தெரிந்தவுடன் கரிஎழுத்தில்
கன்னவைத்துக் காத லாடல்
பொய்யழுத்தம் புரிகின்ற புலைநிலைகள்
முதலாய புன்மை எல்லாம்
மெய்யழுத்திப் பெயர்புனைந்து நூல்களென,
வெளியிட்டு வியந்து கொள்வார்
செய்யழுத்தி மடிகின்ற தீப்பூடாய்
அவை ஒழிசல் தெரியார் அந்தோ! (31)

## இழிந்து போதல்

166. கல்வியிலே பெரியரெனக் கடுஞ்செருக்கு
மேற்கொண்டு காட்சி குன்றிச்
சொல்விநயம் இல்லாமல் சுடுமொழிகள்
பலபேசித் தூற்றி நிற்பார்;
பல்வகைய காவியத்தின் பயன்உணரார்
படித்தபடி படிந்து நில்லார்
புல்வழியில் புகுந்தலைந்து புலையாடிப்
பலரிழிந்து போகின் றாரே. (32)

## பண்பு படிக

167. அரியபல நூல்களைநீ ஆராய்ந்து
படித்தாலும் அடக்கம் இன்றேல்
உரியபயன் ஒன்றுமே உறுதியுடன்
அடையாமல் ஒழிந்து போவாய்!

பெரியகலை வாணனெனப் பெருகிநீ
வருவதினும் பெரியோர் என்றும்
பிரியமுடன் பேணிவரும் பெருந்தன்மை
மருவிவரின் பெருமை யாமே. (33)

## உள்ளம் தெளிக

168. உள்ளத்தைப் பண்படுத்தி உண்மைநெறி
ஓர்ந்தொழுகி உறுதி யாகக்
கள்ளத்தை எவ்வழியும் கடுகளவும்
படியாமல் கடிந்து நீக்கின்
பள்ளத்தை நோக்கிவரு பைம்புனல்போல்
இன்பநலம் பரவி ஓங்கி
வெள்ளத்தை ஒத்துவரும் வித்தகத்தை
உய்த்துணர்ந்து விரைந்து கொள்க. (34)

## மெய்விழி

169. பழிபாவ நிலைகளே பரவிவரும்
உலகமிதில் பழுதி லாத
வழிகாண ஒளிவகுத்து வகைவகையா
மொழிவிளக்கை வளைந்து வைத்துப்
பொழிநீதி அறநலங்கள் போதித்து
வருதலால் புலவர் மாந்தர்
விழியாக மேவியுள்ளார் மெய்யுணர்ந்து
மேன்மைகளை விழைந்து தேர்க. (35)

### கவிசிருட்டி

170. செத்தொழிந்து போகின்ற செத்தைகளைப்
படைத்துவரு திசைமுகத்தோன்
நித்தியநந் நிலைகளையே நெறியோடு
படைத்துவரும் நீர்மை தோய்ந்த
உத்தமமெய்க் கவிஞரிடம் உபாயங்கள்
நாடியே உசாவு கின்றான்.
எத்திசையும் கவிசிருட்டி புவிசிருட்டிக்
கெவ்வழியும் ஏற்ற மாமே. (36)

### கலைஞர் நிலை

171. மண்ணோடு மண்ணாக மாண்டொழிந்து
போகின்ற மக்க ளுள்ளே
விண்ணோடு விண்ணொளியாய் எங்கணுமே
ஒளிவீசி விளங்கி மேலே
எண்ணோடும் எழுத்தோடும் எவ்வழியும்
செவ்வையாய் இனிது தோய்ந்து
கண்ணோடி அருள்புரியும் கலைவாணர்
நிலைமைஎவர் காண வல்லார்? (37)

### கவிஞர் காட்சி

172. வானமழை பொழிந்திந்த மாநிலத்தை
வளர்த்துவரு மாண்பு போல
ஞானமழை பொழிந்துயிர்கள் நன்மையுற
யாண்டுமே நலமே நாடித்

தேனமரும் மொழிகளினால் காவியங்கள்
ஓவியங்கள் சிறக்கச் செய்து
மானம்அருள் கவிஞர்களை மகிமையுடன்
மதியாதார் மனிதர் அன்றே. (38)

## பாவலர் பான்மை

173. காட்டுவிலங் காகநீ கழிந்தொழிந்து
போகாமல் கலைஞானங்கள்
ஊட்டிஒரு மனிதனென உளைஉயர்வாச்
செய்தவரார்? உண்மை யாக
நாட்டுமொழி ஒளிவீசி நலங்கள்பெற
வைத்தவரார்? நாளும் ஆய்ந்து
பாட்டுவழி நிலைகாட்டும் பாவலரே
காவலரும் பணியு மேலோர். (39)

## வழி காட்டி

174. கண்காட்ட வழிகண்டு கால்நடந்து
மன்னுயிர்கள் களித்து வாழும்;
விண்காட்டும் ஒளிவழியே வியனுலகம்
இயங்கிவரும்; விதிகள் தோய்ந்து
பண்காட்டும் மொழிவழியே பாவேந்தர்
வழிகாட்டப் பலவும் கண்டு
எண்காட்டும் மானுடங்கள் இனியராய்
வாழுகின்றார் இன்ப மூர்ந்தே (40)

# 6. உழவும் உலகமும்.

உலகம் உழவால் உளது

175. உலகம்எனும் உயர்தருவுக்கு உறுதியாம்
மூலவேர் உழவே; வேறாய்
இலகுபல தொழில்களெல்லாம் இலைதழைபூ
கனிகாய்கள் எனவே நின்ற;
நிலவுலகம் என்றுமே நிலையாக
நிலைத்துவர நேரே ஏரே
பலவகையும் புரந்துவரும் பான்மையினால்
பாரின்உயிர் ஏரே பாரீர். (1)

பசி எடுப்பு

176. உடல்எடுத்த உயிர்களெல்லாம் உணவுகளால்
உளவாகி உலாவு கின்ற
அடல்எடுத்த படைவீரர் அரசாளும்
அதிவீரர் அரிய ஞான
மிடல்எடுத்த மெய்வீரர் மேலான
கொடைவீரர் மேலோர் யாரும்
குடல்எடுத்த பசிஎடுக்கக் கோலங்கள்
பலஎடுத்தே குலாவு கின்றார். (2)

உயிரும் பயிரும்

177. உண்ணுகின்ற உணவுகளால் உயிர்களுள;
அவ்வுணவோ உழவன் கைகள்
பண்ணுகின்ற தொழில்களிலே பரவியுள;
ஆதலினால் பாரில் யாரும்

எண்ணுகின்ற தொழில்களெலாம் ஏருடையான்
தொழில்எதிரே இரவி முன்னே
நண்ணுகின்ற ஒளிகள்என நாணிஒளி
இழந்தயலே நடந்து போமே. (3)

## வீரர் வீறு

178. வில்வீரர் வாள்வீரர் வேல்எடுத்துப்
போர்தொடுக்கும் வெற்றி வீரர்
மல்வீரர் சொல்வீரர் மதிவீரர்
கதிவீரர் மதித்து மேலே
சொல்வீரர் எல்லாரும் சோராமல்
சோறளித்துத் தொடர்ந்து நின்று
ஒல்வீரர் ஆக்கியிந்த உலகத்தைக்
காத்துநிற்போர் உழவர் அன்றே. (4)

## விழுமிய தொழில்

179. நீருடைய நிலவுலகில் நேர்ந்தவுயிர்த்
திரள்களெலாம் நெடிது வாழப்
பேருடைய தொழில்கள்பல பெருகியுள
அவ்வளவும் பேணி நோக்கிச்
சீருடைய தொழில்எதுவோ அதைஉரைஎன்று
அரசருள ஒளவை தேர்ந்து
ஏருடைய தொழில்ஒன்றே சீருடையது
எனவுரைத்தாள் ஏற்றம் என்னே! (5)

### பலவகை உழவர்

180. வேலுழவர் வாளுழவர் வில்லுழவர்
சொல்லுழவர் வேதம் ஆதி
நூலுழவர் யாவருமே நோன்மையொடு
மேன்மைபெற நுதிகூர்த் தாறின்
கோலுழவர் மேழிதொட்டுக் கொற்றங்கள்
புரிகின்றார் குடிமை எல்லாம்
மேலுழவர் கையகத்தே வையமெலாம்
மேவியுள வியப்பீ தென்னே. (6)

### உழுங்குலத்தின் உயர்வு

181. உழுங்குலத்தில் பிறந்தாரே உலகுய்யப்
பிறந்தாரென்று ஓர்ந்து கம்பர்
செழுங்கவிகள் எழுபதினால் ஏரின்சீர்
பாடியுள்ளார்; தேவர் தாமும்
தொழுங்குறளில் உழவதனை உளம்உவந்து
துதித்துள்ளார்; துதிகள் எல்லாம்
ஒழுங்குடனே உலகுயிரைப் புரந்துவரும்
உழவுநிலை உணர்ந்தே அம்மா. (7)

### உழவன் உதவி

182. கடல்ஓடி மலைஓடிக் கான்கடந்து
வான்பறந்து கருதிச் சூழ்ந்து
மிடலோடு பொன்பொருளை மிகத்தொகுத்து
வந்தவரும் மேவி நின்ற

உடலோடும் உயிர்வாழ உழவனருள்
உணவின்றேல் உய்தி யுண்டோ?
அடலோடும் அறத்தோடும் அவனியெலாம்
வாழ்வதவன் அருளால் அன்றே. (8)

வையம் உய்வது

183. கைத்தொழிலைச் செய்தாலும் கலைஞானம்
கற்றாலும் கருதி ஓர்ந்து
சித்திரங்கள் புனைந்தாலும் திரைகடல்போய்
வாணிபங்கள் சிறக்கச் செய்து
ஒத்தபொருள் பெற்றாலும் உலகமெல்லாம்
ஆண்டாலும் உழவன் கையால்
வைத்தபொருள் இல்லையெனில் வையம்உய்ய
வழியுண்டோ வளமை என்னே. (9)

ஏரின் சீர்

184. ஓதியுயர் கலைஞரையும் உலகாளும்
வேந்தரையும் உழவன் கையே
ஆதிமுதல் ஆதரவாய் ஆதரித்து
வருதலினால் ஔவை யாரும்
மேதினியில் சீர்தேடின் ஏர்தேடென்று
ஓர்போதம் விளம்பி நின்றார்
நீதிநெறி நிலைதெரியின் நிலவுழவின்
கதிதெரிவார் நேரே அம்மா. (10)

### உலகின் கிழவன்

185. உழவன்எனும் பெயரில்உள உளவுநிலை
ஓர்ந்துணரின் உலகிற்கு அன்னோன்
கிழவன்எனும் கெழுதகைமை கெழுமிநிற்கும்
கிழமையுயர் கேண்மை யாவும்
பழகிவரும் நிலத்தைஅவன் பண்படுத்திப்
பலபோகம் விளைத்து மக்கள்
விழவுமிகுந்து உயிர்வாழ விளைத்துவரும்
விளைவுநிலை விளக்கு மன்றே. (11)

### உதவியை நினைக

186. மாந்தரெனத் தோன்றியிங்கே வாழ்ந்துவரும்
உயிர்களுக்குப் பயிர்கள் என்றும்
ஆர்ந்தபெருந் துணையாகும் ஆகலினால்
அத்தொழிலை ஆய்ந்து செய்வார்
சார்ந்தஉயிர் இனங்களுக்குத் தாயராய்த்
தந்தையராய்த் தழைத்து நின்றார்;
ஓர்ந்தவர்க்கு நன்றிசெய்யார் உண்டவர்க்குத்
தீங்குசெய்தார் உணர்க ஓர்ந்தே. (12)

### நன்றி மறவேல்

187. உப்பிட்ட பேரைநீ உள்ளவரை
உணர்கஎனும் உறுதிச் சொல்லை
ஒப்பிட்டுப் பார்த்தாயேல் உழவர்செய்யும்
உதவிகளை ஓர்ந்து நெஞ்சம்

அப்பிட்ட உப்பென்ன அன்போடு
கரைந்தருள்வாய் அரிய பாடு
செப்பிட்டுச் சொல்லரிது சிந்தனையால்
தெரிந்துகொளல் சீர்மை யாமே. (13)

உழவன் உழைப்பு

188. காய்கின்ற வெயில்எல்லாம் காயத்தின்
மேல்ஏற்றுக் காட்டில் மூண்டு
பாய்கின்ற முள்எல்லாம் பாதத்தின்
பால்ஏற்றுப் பனிநீர் வாடை
தோய்கின்ற துயரெல்லாம் தோலாமல்
தோல்ஏற்றுத் தொழில்கை செய்தே
ஓய்வின்றி உழைத்தூட்டும் உழவன்போல்
உலகில்எவர் உதவி யுள்ளார்? (14)

மாட்டுப் பாடு

189. மாட்டோடு மாடாக மாறுகப்
பாடுபட்டு மாரி நாடிக்
காட்டோடு காடாகக் கைசெய்து
வையமெலாம் களித்து வாழ
ஊட்டோடும் உடையுதவி உழவர்செய்யும்
உதவிகளால் உயர்ந்து மக்கள்
தேட்டோடும் சிறப்போடும் தேசமெங்கும்
வாழ்கின்றார் செழித்து நின்றே. (15)

## உழையாமல் உபதேசித்தல்

190. உணவுகளைப் பெருக்குங்கள் உண்டிகளைச்
சுருக்குங்கள் உறுதி நாடி
அணவுகளைச் சேருங்கள் அரிசிகளைச்
சேராமல் அயலே சேர்ந்த
கணவுகளைக் காணுங்கள் காய்கனிகள்
உண்ணுங்கள் கவலை யின்றிப்
பிணவுகளைப் பேணுங்கள் என்றுபலர்
போதிக்கப் பெருகி யுள்ளார். (16)

## உணவும் உணர்வும்

191. உண்ணுகின்ற உணவளவே உணர்வுநலம்
உளவாகும் உரிமை யோடு
மண்ணுலகில் வாழ்ந்துவரும் மானுடரின்
அநுபவங்கள் மருவி யுள்ள
எண்ணுகின்ற நினைவுகளும் இசைந்துண்ணும்
உணவுகளும் இழிந்திந் நாளில்
நண்ணுகின்ற அவலங்கள் நரகத்தின்
துயர்களாய் நலியு மந்தோ. (17)

## விளைவு குன்றியது

192. காடெங்கும் விளையவில்லை காலமழை
பெய்யவில்லை கருதி ஓடிப்
பாடெங்கே பட்டாலும் எவ்வழியும்
பயனில்லை படரே ஓங்கி

நாடெங்கும் அவலமாய் நகரெங்கும்
கவலையாய் நலிவே கண்டு
வீடெங்கும் மாந்தரெலாம் விழிநீரே
சிந்துகின்றார் வெய்து யிர்த்தே. (18)

பட்டினித்துயர்

193. கட்டொன்று கலங்காட்டிக் கதிருழக்கு
நெல்காட்டிக் கடல்சூழ் ஞாலம்
தட்டொன்றும் இல்லாமல் சார்ந்தஉயிர்
இனங்கள்எலாம் ஆர்ந்து வாழ
இட்டுண்டு பெரும்புகழை ஈட்டிவந்த
இந்தியா இன்று நொந்து
பட்டினியின் படுதுயரைப் பாரெங்கும்
பார்த்துளதே பாவம் என்னே? (19)

சாகவிடோம்

194. பட்டினியால் இந்நாட்டில் எவரையுமே
சாகவிடோம் பாரீர் என்று
கட்டிஅர சாளுகின்ற மந்திரிகள்
கூறுகின்றார் காலன் வாயில்
ஒட்டிமக்கள் உள்ளநிலை அவர்மொழியே
உலகறிய உணர்த்தி இந்நாள்
எட்டிநிற்கும் இழவுகளைத் தெளிவாக்கி
யுள்ளதே என்னே வாழ்வு. (20)

### சாவு நல்லது

195. நன்றுயர்ச் செத்தாலும் நல்லதே
சாகாமல் நாளும் நைந்து
பொன்றுதல் பொன்றுகின்ற புலைவாழ்வைத்
தலைவாழ்வாப் போற்றி வாழ்தல்
என்றாலும் எவராலும் இயலாதே
இந்நாடு செழித்து நேரே
ஒன்றாலும் குறையின்றி ஒளிவீசி
உயர்நாளை உரையாய் அம்மா! (21)

### தேவ வாழ்வு

196. காணிநிலம் கோடிதரக் காணுநாள்
எந்நாளோ, கண்டு நின்ற
பூணிகள்பொன் பொலிவோடு பொங்குநாள்
எந்நாளோ, புனித மான
வாணிகளை எவ்வழியும் வழங்குநாள்
எந்நாளோ, அந்நாள் இங்கே
பேணிவந்து குடிபுகுந்து வானவரும்
நனிவாழப் பெறுவர் மாதோ. (22)

சிறிய அளவுள்ள நிலத்தில் பெரிய விளைவுகளை உள வாக்குங்கள்; பசுக்களும் மாடுகளும் செழித்துவரச் சீர்மை யோடு பேணுங்கள்; எவ்வழியும் சத்தியமே பேசுங்கள்; எப் பொழுதும் எவ்வுயிர்க்கும் இரங்கி அருளுங்கள்; அப்பொ ழுது உங்கள் நாடு பொன்னுடாய்ப் பொலிந்து விளங்கும்.

# 7. உழைப்பும் பிழைப்பும்

### உண்ண உரியவன்

197. உழைக்கின்ற ஒருவனே உண்ணநேர்
உரியவன்காண் உழைப்பொன்றின்றிப்
பிழைக்கின்ற படிநாடிப் பிழைவழியில்
பிழையாகப் பிழைக்க நேர்ந்தால்
இழைக்கின்ற விதியவனை எவ்வழியும்
ஈனமா இகழ்ந்து தள்ளும்
தழைக்கின்ற செல்வமெல்லாம் தனியுழைப்பில்
தாவிவரும் தழுவி வாழ்க. (1)

### கருமமே தெய்வம்

198. காலமிடம் இனிதறிந்து கருமங்கள்
செய்துவரின் கடல்சூழ்ந் துள்ள
ஞாலமெலாம் ஆளவரும் நரர்பதியாய்
நீளவரும் நன்மை யாவும்
ஓலமுடன் ஓடிவரும் உயர்நிலைகள்
தேடிவரும் உறுதி ஓர்ந்து
சீலமுடன் வினைசெய்யின் தெய்வமதாய்
உய்திதரும் தெளிக தேர்ந்தே. (2)

### உழைப்பே உயர்வு

199. சோம்பேறித் தனம்ஒன்று தொடர்ந்ததேல்
அம்மனிதன் சுமட ளுகித்
தீம்பேறி எவ்வழியும் சிறுமைகளே
சேர்கின்றான்; செயலிழந்தால்

வீட்பேறு விளியவரும் வெய்யதுயர்
பெருகிவரும் வினைசெய் தானேல்
தாம்பேறு உருகின்ற நீர்போலச்
சீரேறித் தனமே சாரும். (3)

உழையாமை இழிவு

200. உரியதொழில் செய்யாமல் உண்ணநீ
இசைந்தாயேல் உனக்கு நீயே
பெரியபிழை செய்தவனாய்ப் பெரும்பழியை
அடைகின்றாய்! பிழைப்புக் கான
அரியவினை செய்பவனே ஆண்மகனாய்
மேன்மையெலாம் அடைந்து தெய்வம்
பிரியமுறும் படியுள்ளான் பிழைக்குமுறை
தனையுணர்ந்து பிழைத்தல் நன்றே. (4)

சீதேவி நிலை

201. சீதேவி என்பதெல்லாம் செய்தொழிலே
செயலின்றிச் சோம்பி நிற்றல்
மூதேவி யே ஆகும் முயற்சியினை
முன்னோர்ந்து மூண்டு நின்று
யாதேனும் ஒருதொழிலைச் செய்துவரின்
திருவருளை எய்தி இன்பம்
மீதோடி விரைந்துவர மேலோராய்
வருகின்றார் மேன்மை கூர்ந்தே. (5)

ஓடி உழை

202. உழுகின்றார் ஒருகோடி உழையாமல்
எவ்வழியும் உண்டு வாழ
எழுகின்றார் எழுகோடி என்னுமொரு
பழமொழிதான் இந்நாட் டுள்ளே
தொழுகின்ற வேதமாய்த் தோன்றியுளது
ஒருவன்மேல் எழுவர் ஏறி
விழுகின்ற சுமைகளாய் வீங்கியுள்ள
நிலையிது விளக்கு மன்றே. (6)

பேடியா யிழியாதே

203. நாடியுழைத் துண்ணுகின்ற நன்மகனே
நாட்டுக்கு நன்மை செய்வான்
ஓடிவினை செய்யாமல் உளமடிந்து
சோம்பராய் ஒதுங்கி நிற்கும்
பீடைகளே நாட்டுக்குப் பெருஞ்சுமைக
ளாய்நின்று பீழை செய்யும்
பேடியராய் மடிந்திருக்கும் பேதைகளைக்
கடிந்தொழித்தல் பெருமை யாமே. (7)

ஊக்கி வினைசெய்

204. ஊக்கிவினை செய்கின்ற ஒருவனே
ஒளியுடைய னாக ஓங்கிப்
பாக்கியங்கள் ஆக்கிவரு பண்புடைய
னாகின்றான் பணிசெய் யாமல்

தேக்கிமடி மண்டிநின்றால் தேசத்தின்
துரோகியாய்ச் சிறுமை கண்டே
ஆக்கமிழந் தவலமாய் அழிகின்றான்
ஆள்வினையை ஆய்ந்து செய்க. (8)

திருவின் காட்சி

205. செய்கின்ற வினைவழியே செய்யாளின்
திருவருள்கள் சேர்ந்து வந்து
பெய்கின்ற மழைஎன்ன எவ்வழியும்
இன்பநலம் பெய்து பொங்கி
உய்கின்ற உயிர்க்குறுதி உதவிவரும்
ஆதலால் உணர்ந்து நாளும்
மொய்கின்ற வினைபுரிந்து மூளுகின்ற
மேன்மைகளின் முதன்மை காண்க. (9)

உயர்ச்சி நிலை

206. முயற்சிதனை விட்டுநீ மூடமாய்
மடிகொண்டு மூண்டு நின்றால்
அயர்ச்சியுறும் அடிமையாய் ஐயகோ
எந்நாளும் அவத்தில் ஆழ்வாய்!
பயிற்சியுடன் உளம்துணிந்து பருவநிலை
தவறாமல் பாடு பட்டால்
உயர்ச்சியெலாம் உனைநாடி ஓடிவரும்
உறுதிநிலை உணர்க ஓர்ந்தே. (10)

### கொடிய கூட்டம்

207. காட்டிலுள்ள விலங்குகளுள் கரடிபுலி
கொடியனவாய்க் கதித்து நின்ற
நாட்டிலுள்ள மக்களுள்ளே நயவஞ்சச்
சூதர்களும் நயந்து சண்டை
மூட்டிவிடும் கோளர்களும் மூண்டபே
ராசையினல் முடுகி நின்று
கூட்டிநெடு வட்டிக்குக் கடன்கொடுக்கும்
கூட்டமே கொடிய அம்மா. (11)

### வட்டி வதை

208. வாழவகை தெரியாமல் வட்டிக்குக்
கடன்கொண்டான் வாழ்வும் நீரின்
ஆழவகை தெரியாமல் அதிலிறங்கி
அழிகின்றான் அறிவும் ஆய்ந்து
சூழவகை தெரியாத மந்திரியின்
அரசுரிமைத் தொடர்பும் நேரே
வேழமுண்ட கனிபோல விரைந்திழிந்து
பழியோடு விளிந்து போமே. (12)

### கடன் கடு

209. நேர்ந்தஒரு சிறுகடனல் நிலைத்திருந்த
நிலங்களொடு வளங்கள் யாவும்
ஆர்ந்தகரை யான்படிந்த அணிமரம்போல்
அடியோடும் அழிந்த அந்தோ

சார்ந்தகடன் புகுந்தஅன்றே சனியன்வந்து
புகுந்ததெனச் சலமே கண்டான்
கூர்ந்தகுடி கெடுத்துயிரைக் குடித்தகொடும்
பேயெனவே கொண்டான் அம்மா! (13)

மூதேவி மக்கள்

210. வறுமைஎனும் தாய்பெற்ற மக்கள்எனக்
கடன்இரப்பு மருவி வந்த;
சிறுமையிந்த இருவகையுள் எவர்எதைப்போய்த்
தொட்டாலும் சீர்மை குன்றி
வெறுமையுற்று மானம்போய் வீரம்போய்
மேன்மையும்போய் மேலே நின்ற
மறுமையும்போய் இம்மையும்போய் மறுகியுளம்
கருகியுயிர் மடிவர் அந்தோ. (14)

ஏழ்மை நிலை

211. நீர்இருக்க நிலம் இருக்க நிறைந்தபெரு
வளங்களெல்லாம் நிலவி யுள்ள
பார்இருக்கப் பலமிருக்கப் பாட்டாளி
மக்கள்எங்கும் பரந்தி ருக்க
ஏர்இருக்க எருதிருக்க ஏழைபசி
பகைபிணிஎன்று இந்த நாட்டில்
நேர்இருக்க நேர்ந்ததே நிலைதெரியின்
நெஞ்சிருக்க நேரா தம்மா! (15)

### பாட்டாளி துயர்

212. நெற்றிநீர் நிலத்தில்விழ நெடும்பொழுது
கொடும்பாடு நேரே பட்டும்
சுற்றிநீர் இடைமிடைந்த சூழ்பருக்கைக்
கூழுமின்றிச் சுழலு கின்றார்
பற்றிநேர் ஒருதொழிலும் பாராமல்
பாலுணவு பலகால் உண்டு
பேற்றியோர் அணுவுமின்றிப் பெரியரெனப்
பெருகியுள்ளார் பிழையீ தென்னே. (16)

### கருமமே தருமம்

213. தான்செய்து வருகின்ற கருமமே
தருமமாய்த் தழைத்து நின்று
வான்செய்து வருகின்ற சுகநலங்கள்
வழங்கியுயர் மகிமை செய்யும்;
ஊன்செய்த உடல்ஓம்பி ஒருதொழிலும்
செய்யாமல் உள்ளம் சோம்பித்
தேன்செய்த மொழிபேசித் தேம்பிநீ
திரிந்தாயேல் சிறுமை யாமே. (17)

### ஆளின் அளவு

214. ஆள்வினையைச் செய்துவரும் அளவுதான்
ஆளென்ன அமைந்து வந்த
கேள்வினையி லுயர்கின்றான் கிளைகளையும்
குடிகளையும் கிளர்ந்து தாங்கும்

தோள்வினையால் திகழ்கின்றான் தொல்லுலகம்
அவனையே தோழ னாக
நீள்வினையால் நினைந்துவந்து நெடிதுபுகழ்ந்
தணுகிவரும் நேர்மை யோர்ந்தே (18)

கரும வீரன்

215. கருமத்தைச் செவ்வையாக் கருத்தூன்றிச்
செய்துவரும் கரும வீரன்
தருமத்தைச் செய்துவரும் தகவுடையோன்
ஆகின்றான் தரும நீதி
திருமித்த தெய்வமுமே தொழில்செய்து
நிலவுதலால் உழைப்பின் நீண்ட
மருமத்தை யறியலாம் மதித்துணர்ந்து
தொழில்செய்து மகிமை காண்க. (19)

எண்ணியன எய்தும்

216. எண்ணியன யாவுமே எய்துமெனத்
தெய்வமறை இசைத்தி ருந்தும்
கண்ணியன ஒன்றுமே கண்காணோம்
என்றுபலர் கவலு கின்றார்;
திண்ணியராய் நின்றுவினை சிந்தைநல
முடன்செய்யின் சிறந்தெழுந்து
புண்ணியமாய் வந்ததுவே எண்ணியவெல்
லாம்சுரந்து பொலிந்து பொங்கும். (20)

---

# 8. உறுதி நலம்

காட்சி தெரிக

217. அண்டங்கள் பலகோடி அடுக்கடுக்காய்ப்
பரவியுள அவற்றி னூடே
கண்டங்கள் புடைஎழுந்து கடல்மலைகள்
இடையிடையே கலந்து சூழ்ந்து
துண்டங்க ளாயீண்டுச் சிலசிலங்கள்
தோன்றியுள தோற்றம் எல்லாம்
கண்டங்கே நிறைதூக்கின் கடுகளவும்
சிறியதெனக் காண லாமே. (1)

கருத் துணர்க

218. எங்கிருந்தோ வந்துள்ளோம் எங்கேயோ
போகின்றோம் இறக்கு முன்னே
இங்கிருந்து பெறவுரிய இன்னுயிரின்
ஊதியத்தை இனிது பெற்றால்
பங்கிருந்த மாதுடைய பரம்பொருளின்
திருவருளில் படிந்து பின்னர்
அங்கிருந்து மீளாமல் ஆனந்த
நிலையமாய் அமர்ந்து வாழ்வோம். (2)

இன்ப விளைவு

219. இன்பமே வேண்டுமென எல்லாரும்
எண்ணுகின்றார் இன்ப மின்றித்
துன்பமே வரும்படிக்காம் தொழில்களையே
செய்கின்றார் தொடர்ந்து நின்று

வன்புலத்தில் எட்டிநட்டு வளர்சுவைசேர்
மாங்கனியின் வரவு நோக்கும்
புன்புலம்சேர் மூழுமூடர் புலைமூடம்
போல்வதன்றோ புகலும் காலே. (3)

ஏழைக்கு இரங்குக

220. தாழ்ந்தாரை உயர்த்துவதும் தக்காரைப்
போற்றுவதும் தளர்ந்து கீழே
வீழ்ந்தாரை எடுத்தருளி மேன்மையுற
விடுப்பதுவும் விரும்பி வந்து
சூழ்ந்தாரை ஆதரித்துச் சுகம்பெறநேர்
வைப்பதுவும் தொன்மை யாக
வாழ்ந்தார்க்கே வருமென்பர் வாழ்பவரிவ்
வரிசையின்கண் வந்த துண்டோ? (4)

இல்லவள் இயல்பு

221. இல்லாள்என்று உரைக்கும்அந்த இன்பெயரே
இல்லினுக்காம் இயல்பாள் என்று
சொல்லால்நன் குணர்த்திவரும் இல்லான்என்
றன்பெயரால் சொல்லின் தோமாம்
நல்லார்என் பேர்தமக்கே நண்புரிமை
யாக்கொண்ட நங்கை மாரைப்
பொல்லார்என் பதுபுலையாம் புகழ்க்குடியை
வளர்ப்பதவர் பொறுமை அன்றோ? (5)

### அயல்மயல் ஒழிக

222. பிறர்மனையை நோக்காத பெருந்தகையே
பேராண்மை யுடையான் என்று
புறமறியப் பொதுமறைமுன் புகன்றிருந்தும்
அதைமறந்து புலன் அழிந்தே
அறமனைவி அமளிமிசை அவலமுற
அயல்மனைபோய் அவம்புரிந்து
மறமலிய வருகின்றார் மறலியிடை
இவர்படுநோய் மறந்தார் அந்தோ. (6)

### படிப்பு நிலை

223. வாழ்நாளில் கால்பங்கு வருகல்விக்கு
இரையாக வழங்கி ஓடி
ஊழ்நாளும் படித்தாலும் உண்மையுணர்வு
ஒருசிறிதும் உறாமல் ஓங்கிப்
பாழ்நாளே கழிக்கின்றார் பணம்சேர்த்து
வைத்தாலும் பயனும் காணார்
வீழ்நாள்ஒன் றில்லாமல் மெய்யறஞ்செய்
துய்யாதார் வீழ்ந்தார் அன்றே. (7)

### நடிப்பு நவை

224. பெற்றதாய் மனம்வருந்திப் பெரும்பசியோடு
அயலிருக்கப் பிறரைப் பேணி
உற்றசுவை விருந்தாற்றி உயர்கனவான்
எனவெளியே ஓங்கி நிற்பார்

மற்றவறி யவர்வரினோ வாசல்வரை
ஏசலுரை வழங்கி மீள்வார்
எற்றைநாள் இவர்தரும இயல்பறிந்து
நலமடைவார் இங்கே அம்மா! (8)

## தந்தைதாய் பேணுக

225. ஈன்றுவளர்த் தினிதாக எவ்வழியும்
அன்புரிமை ஈந்து பேணி
ஆன்றநலம் புரிந்துவந்த அருமைத்தாய்
தந்தையரை யாண்டும் போற்றி
ஊன்றியபே ரார்வமாய் உவந்துதொழுது
ஒழுகிவரின் உம்ப ரெல்லாம்
தோன்றியந்த மகன்எதிரே சோபனங்கள்
செய்தருள்வார் தொன்மை தோய்ந்தே. (9)

## மக்களும் மாக்களும்

226. மக்களெனப் பெற்றுவைத்த மாதாவை
அடிவணங்கி மகிழ்ந்து பேணின்
மிக்கபொருள் புகழறங்கள் மேவியவர்
மேலான மேன்மை காண்பார்;
தக்கபடி பேணாரேல் தாழ்ந்திழிந்து
மாக்களாய்ச் சார்ந்து மாறிப்
பக்கமென்றும் தேறாமல் பழிபிறப்பில்
அழிதுயரில் படுவார் அந்தோ. (10)

### நினைவு நிலை

227. எல்லாரும் இன்பமுடன் இனிதிருக்க
வேண்டுமென ஒருவன் எண்ணின்
பல்லாரும் தெய்வமெனத் தொழுதவனைப்
போற்றுவார்; படர்புரிந்தால்
பொல்லாத நீசனெனப் பழிதூற்றிப்
புகைந்தழல்வார்; புரிந்த எண்ணம்
நல்லானேல் ஈசனும் பொல்லானேல்
நீசனும் நாடி உய்க. (11)

### புத்தகம்

228. தத்தமது கலைநிலைகள் தாம்தாமுன்
பயின்றறிந்து தகவோ டாய்ந்து
வைத்தவுயர் அனுபவங்கள் வழிவழியே
வருவார்க்கு வரிசை யாக
ஒத்தநிலை நின்றென்றும் உணர்வுதவ
முன்னோர்கள் உதவி யுள்ள
புத்தமுதம் அனையவைப்பே புத்தகமாம்
உய்த்துணர்ந்து போற்றல் நன்றே. (12)

### நூலே துணை

229. காலமிடம் எனும்பெரிய கருந்திரையால்
நெடுந்தூரம் காணு தோடி
மூலமற மறைந்துளநம் முன்னோரைக்
கண்ணெதிரே முன்னே கொண்டு

சீலமுடன் காட்டியவர் செயல்நலங்கள்
யாவுமே தெரியச் செய்யும்
நூலையன்றி ஞாலத்தில் மேலையொரு
துணையுளதோ நோக்குங் காலே. (13)

கவிகளின் சுவை

230. வள்ளுவரைக் கம்பரைநாம் வாயார
வாழ்த்துகின்றோம்; வணங்கி அன்னோர்
தெள்ளமுத மொழிகளைநாம் சிந்திக்கும்
போதெல்லாம் சிந்தை யுள்ளே
துள்ளிஎழு பேரின்பச் சுவைகளையே
துய்க்கின்றோம் தோய்ந்து தோய்ந்து
கள்ளிலுறும் வண்டென்னக் களிப்புமீக்
கொள்ளுகின்றோம் கருத்தி தென்னே. (14)

நூல் நோக்காமை

231. பால்வேண்டும் பழம்வேண்டும் பணம்வேண்டும்
பதம்வேண்டும் பதவிக் கெல்லாம்
மேல்வேண்டும் நிலைவேண்டும் வேணவெல்லாம்
வேண்டுமென விளிவே வேண்டி
மால்வேண்டும் பெரியர்பலர் மதிவேண்டும்
எனவேண்டி மாண்பு மிக்க
நூல்வேண்டும் எனவேண்டும் நோக்கிலராய்
நோக்கிழந்தார் நோக்கம் என்னே. (15)

### பதிப்பின் பதைப்பு

232. இருநூறு லட்சம்பேர் இனியதமிழ்
மக்களென இந்நாட் டுள்ளார்;
ஒருநூறு புத்தகங்கள் ஒருபதிப்பில்
பதிவுசெய்ய உள்ளம் அஞ்சிப்
பெருநூல்கள் பதியாமல் கலைவல்லோர்
பெயர்கின்றார்; பெயர்ச்சி எல்லாம்
வருநூல்கள் பேறாத மதிகேடர்
எனும்பெயரை வளர்த்த வன்றே. (16)

### தீம்பர் நிலை

233. பாம்புநிதம் பாலருந்தி வந்தாலும்
படுவிடமே படிந்து வாழும்
வேம்புதேன் உண்டினிது வளர்ந்தாலும்
வெங்கசப்பே விளைந்து நீளும்
தீம்பர்தாம் எவ்வளவு செவ்வியநூல்
படித்தாலும் தீங்கு நீங்கி
ஆம்பரிசு தேர்ந்தினிய ராய்அமையார்
அவலமே ஓங்கி நிற்பார். (17)

### கிழவர் கிழமை

234. பழங்கிழவர் துணிந்திங்கே இளங்குமரி
கனைமணந்து பரிவு கூர்வார்
வழங்குவதொன் றறியாத வன்பிசுனர்
வள்ளலென வழங்க நீள்வார்

தழங்குகுரல் முரசமெனத் தம்மையே
வியந்துபலர் தருக்கி வீழ்வார்
முழங்குகடல் உலகநிலை முழுமடமை
யாய்வருதல் முறைமை யாமோ? (18)

அழிவு தெளிக

235. எத்தனையோ சென்மங்கள் எடுத்து எடுத்து
வந்துவந்திங் கிருந்து அழிந்தோம்
அத்தனையும் கணக்கெடுத்தால் அளவறிந்து
கூறவல்லார் யாரும் இல்லை;
இத்தனைபே ரிழவுகளை எதிர்கண்டும்
இன்னுயிர்க்கோர் உறுதி யின்றிச்
செத்தொழிய நேர்ந்தாயேல் சிறுமைகொடுந்
தீமையாம் தெளிக நேர்ந்தே. (19)

உயிர் ஓம்புக

236. உன்னுயிர்போல் மன்னுயிரை உரிமையுடன்
ஓம்பிவரின் உலகத் தென்றும்
பின்னுடலில் பிறவாமல் பேரின்ப
நிலையடைந்து பெருமை காண்பாய்;
தன்னுடலை வளர்த்தற்குத் தாழ்ந்தவுயிர்ப்
பிராணிகளைச் சமைத்துத் தின்றால்
என்ன அறம் புரிந்தாலும் இழிதுயரே
பெருகிவரும் இழிந்தே போவாய். (20)

### இனிது வாழுக

237. அல்லலின்றி இனிதாக வாழநீ
விரும்பினல் அருளை என்றும்
நல்லதுணை யாக்கொண்டு நாடிநீ
எவ்வுயிர்க்கும் நலமே செய்க
புல்லிவரு துயரெல்லாம் பொல்லாத
செயல்வினையே புரிந்து நோக்கி
ஒல்லையிதை உணர்ந்துதெளிந் துரிமையுடன்
இதம்புரியின் உய்தி யாமே. (21)

### உறுவதை உணர்

238. வாயினிக்க வளம்பேசி வஞ்சனைகள்
உளம்படிந்து வசைவளர்த்துத்
தாயிருக்க மனையிருக்கத் தமரெல்லாம்
சூழ்ந்திருக்கச் சமன்கைப் பட்டு
நோயிருக்க வருமென்னும் நோக்கின்றிப்
பிறவுயிர்க்கு நோய்கள் செய்து
போயிருக்கும் நிலைகாணர் புலையிருக்கும்
நிலைஎன்னே புகல்வா யம்மா. (22)

### துட்டர் நிலை

239. கொள்ளித்தேள் ஆனலும் கொடியவிடப்
பாம்பெனினும் கோலித் தொட்டுத்
தள்ளிப்போய் மிதித்தாரைத் தம்கொடுக்கால்
பல்லினல் தட்டு மன்றித்

துள்ளிப்போய் எவர்க்குமொரு துயர்செய்யா
துடுக்கான துட்டர் அந்தோ
எள்ளிப்போய் வலியவே இனியவர்க்கும்
இடர்செய்வார் என்னே தீமை! (23)

வஞ்சக் கயவர்

240. கண்டவுடன் இனிதுரைத்துக் காணாத
போதிகழ்ந்து கரவே மண்டி
அண்டவரும் அனைவருக்கும் அவரவருக்
கானவகை அவமே பேசி
மண்டலத்தில் சதுரரென மாறுடி
மனஞ்செருக்கி மகிழ்ந்து கொள்வார்
விண்டலத்தில் வஞ்சநெஞ்சக் கயவரென
விளியுங்கால் வெருள்வ ரன்றே. (24)

பேயர் வாழ்வு

241. வாயினிக்கப் பேசுகின்றார் வயிறெரியச்
செய்கின்றார் வசைமீ தூர்ந்து
பேயினிக்க வாழுகின்றார் பிழையினிக்கப்
பிழைவழியே பெருக்கு கின்றார்
நாயிழுக்க நரியிழுக்க நண்ணாத
கழுகினங்கள் நாடித் தின்னத்
தீயிழுத்துத் தின்னுமிலை தெரியாமல்
திரிகின்றார் தீமை என்னே! (25)

உயிர்அடைந்த பயன்அடை

242. மயிரைநிதம் தடவிநீ மனமகிழ்ந்து
வருகின்றாய்! மருவி யுன்றன்
உயிரைஎமன் தடவியே உளமுவந்து
வருகின்றான்; உண்மை ஓர்ந்து
செயிர்களைந்து செயலுயர்ந்து செவ்வியனாய்
எவ்வழியும் சிறந்து வாழின்
உயிரடைந்த பயனடைவாய் ஒழிந்தாயேல்
இழிந்தாய்காண் உணர்ந்து கொள்க. (26)

மருள்பெருகி மடியாதே

243. பொருள்பெருகி வருந்தோறும் போகங்கள்
நுகர்தோறும் பொங்கி ஆசை
இருள்பெருகி வருமன்றி இனியவுணர்
வொளிஏதும் எழுந்து நேரே
தெருள்பெருகி வரலரிது செயலியலின்
நிலைமைகளைத் தெளிந்து தேர்ந்து
மருள்பெருகி வராதவகை மதியுடைய
னொழுகின் மகிமை யாமே. (27)

நசையின் கொடுமை

244. ஆடிவரு திரிகைதான் அரைச்சுற்று
வருமுன்னே அகில மெல்லாம்
ஓடிஒரு சுற்றாக ஒல்லைவரும்
உள்ளத்தை யுடைய மாந்தர்

கோடிவரு வாயுடைய ராஞலும்
கொடியநகை நெடிய தாகி
வாடியுயிர் நிலைகுலைய வதைபுரிந்து
வன்துயரம் வளர்க்கு மன்றே. (28)

## உறுதி நலன் உறுக

245. இறந்தொழிந்து போகின்ற இழவுநிலை
தலைசுமந்தே இங்கு வந்து
பிறந்துழந்து நிற்கின்ருய் பெயர்ந்துநீ
சுடுகாடு போகு முன்னே
அறந்தெரிந்து சிறிதேனும் விரைந்துநீ
உயிர்க்குறுதி அடையாய் ஆயின்
சிறந்துயர்ந்து வாழ்ந்தாலும் செத்தசவ
மேயாவாய் சித்தம் தேர்க. (29)

## துயர் நீங்கும் வகை

246. உள்ளம்உரை செயல்களெல்லாம் ஒருநாளும்
பிழைவழியில் ஓடா வண்ணம்
மெள்ளவே நிலையடக்கி மேலான
நெறிகளிலே மேவச் செய்யின்
எள்ளலும் இழிதுயர்கள் எவ்வழியும்
யாதுமே ஏரு என்றும்
தெள்ளுபுக ழுடையராய்த் தேசுடனே
வாழலாம் தெளிக தேர்ந்தே. (30)

---

## 9. புனித நெறி.

உயர்வு

247. உள்ளத்தில் புனிதமா யுள்ளவனே
உலகத்தில் உயர்ந்தோ னுவான்
கள்ளத்தால் வஞ்சனையால் கரவுரைகள்
காட்டுவதால் களித்து மேலே
துள்ளித்தான் திரிந்தாலும் துளியளவு
பெருமையுமே தோயா னுகிப்
பள்ளத்தே கிடந்துழலும் பழியாள
னுயிழிந்து படுவான் அன்றே. (1)

இழிவு

248. உன்னதமாம் பதவியினில் ஒருவன்உயர்ந்
திருந்தாலும் உள்ளத் துள்ளே
சின்னவனு யிருந்தானேல் அன்னவனே
சிறியரினும் சிறிய னுவான்
மன்னவனே ஆனாலும் மனத்தில்நலம்
இல்லையெனில் மாண்பு குன்றிப்
பின்னவரிற் பின்னவனுய்ப் பிழையடைந்து
படுவனன்றிப் பெருமை யுண்டோ? (2)

மேல் நாடு

249. நெஞ்சிலே நேர்மையுடன் நெறிமுறையே
ஒழுகிவரும் நீதி மான்கள்
மிஞ்சியுள நாடெதுவோ அந்நாடே
மேல்நாடாய் மேவி நிற்கும்

பிஞ்சிலே இழிந்துழலும் பேதையர்கள்
உளநாடு பிழையாய்த் தாழ்ந்து
மஞ்சிலே மறைந்துள்ள மதிபோல
மருண்டிருக்கும் மதிப்பிழந்தே. (3)

நல்லவன்

250. எந்தமதம் ஆனாலும் எந்நிலையன்
என்றாலும் எந்நா டேனும்
அந்தமகன் உள்ளத்தில் நல்லஇயல்
பமைந்திருந்தால் அவனே மேலோன்
முந்தவரு தெய்வத்தின் முன்னிலையில்
அன்னவனே முதலாய் நிற்பன்
சிந்தைவழி உயர்வன்றி எந்தவழி
யும்உயர்வு சேரா தன்றே. (4)

மகாத்துமா

251. மனம்புனித மாயுயர்ந்து மனிதன்ஒரு
படிஏறின் மகாத்து மாவாய்க்
கனம்படிந்து வருகின்றான்; கரவுபடிந்
திழிபுலைகள் கலந்து நின்றால்
வனம்படிந்த மிருகமாய் வசைபடிந்து
தாழ்கின்றான்; வாய்மை தூய்மை
இனம்படிந்து வருமளவே எவ்வழியும்
உயிரினங்கள் ஏற்ற மாமே. (5)

### நிலை குலைந்தது

252. உண்மைக்கே உறையுளாய் உயர்நிலைக்கு
நிலையமாய் உறுதி கூர்ந்த
திண்மைக்கும் திறனுக்குஞ் செம்மைக்கும்
திகழிடமாய்ச் சிறந்து தேர்ந்த
வண்மைக்கு வாழிடமாய் வாழ்ந்துவந்த
இந்தியா வரிசை குன்றி
எண்மைக்கும் புன்மைக்கும் எவ்வழியும்
இடமாகி இருப்ப தென்னே. (6)

### பழிவழி

253. பொய்யான வழிகளிலே புகழுடைய
ராமென்று புகுந்து நீண்டு
செய்யாத செயல்களெல்லாம் கரவாகச்
செய்கின்றார் சீர்மை குன்றி
ஒய்யார நடைநடந்து பையாரப்
பணந்தேடி உளஞ் செருக்கி
எய்யாத பழிகளிலே இழிந்திழிந்து
கழிகின்றார் இழிவு காணார். (7)

### கரவில் வரவு

254. உன்னைநான் புகழ்ந்துமொழிந் துயர்வாகப்
பேசுகின்றேன் உரிமை யாக
என்னைநீ வியந்துபுகழ்ந் தெவ்வழியும்
இதம்புரிக என்று கூறி

இன்னவகை நிலைகளிலே இழிந்துவிழைந்
திசைகாண ஏங்கி எங்கும்
சின்னவராய்த் திரிகின்றார் சிறுவரிவர்
வருவதொன்றும் தெரியார் என்னே. (8)

கோட்டிக் கூட்டம்

255. கூட்டங்கள் கூடுகின்றார் குத்திரங்கள்
நாடுகின்றார் கோட்டி கொண்டு
பாட்டங்கள் பாடுகின்றார் பலவழியும்
தன்னலமே பரிந்து நோக்கித்
தேட்டங்கள் தேடுகின்றார் சீருடையார்
போல்வெளியே தெரியக் காட்டி
ஓட்டங்கள் ஓடுகின்றார் ஓடிவரும்
நிலைகாணு துழல்கின் றாரே. (9)

வஞ்சம் நஞ்சம்

256. நெஞ்சகத்தில் வஞ்சகமே நிறைந்துள்ள
ஒருவனுயர் நீதி மன்றில்
விசிஞ்யபே ரதிகார வீறோடு
வெளியுலகில் விளங்கி னாலும்
நஞ்சகத்தே வைத்ததுபோல் நாசமே
விளையுமன்றி நன்மை யுண்டோ
அஞ்சகத்தை ஆண்டாலும் அகம்தீதேல்
அவனழிவே அடைவான் அன்றே. (10)

## நீதிபதி

257. நீதிபதி யாயுலகில் நிலையுயர்ந்த
பதவியினில் சேர்ந்து அமர்ந்தோன்
வாதிகளின் முறைகளையும் வழக்குகளின்
நிலைகளையும் வகையாய் ஓர்ந்து
தீதுபதி யாதவகை எவ்வழியும்
செவ்வையாத் தெளிந்து நோக்கி
ஓதிவரு முறைபுரியின் உயர்நீதி
பதியாகி ஒளிர்வான் நின்றே. (11)

## தேசப் பணி

258. தெய்வத்தின் திருவருளால் தேசத்தின்
விடுதலையைச் சேர்ந்து கொண்டோம்
மெய்வைத்த சிந்தையராய் யாவருமே
நாட்டுநலம் விரும்பி நின்று
பொய்வைத்த சிந்தையரைப் புறம்போக்கிப்
புன்மைகளை அறவொதுக்கிக்
கைவைத்த இடமெல்லாம் மேன்மைவரக்
காண்பதே கடமை யாமால். (12)

## பித்த மயக்கு

259. சத்தியத்தைக் கடைப்பிடித்துத் தருமத்தைத்
தழுவிநின்று சாந்த சீலம்
புத்தொளிபெற் றினிதொளிரப் புண்ணியங்கள்
வளர்த்துவரும் புனித மான

உத்தமமாம் வழியிலகி உள்ஒன்று
புறம்ஒன்று பேசி எங்கும்
பித்தமயக் கேறிவரும் பிழைகளெலாம்
ஒழிவதே பெருமை யாமால். (13)

மதுவிலக்கு

260. பஞ்சமா பாதகத்தில் ஒன்ருகப்
பழிபட்ட பாவிக் கள்ளை
நஞ்சினுமே கொடிதாக எண்ணியதை
விலக்கிவிட்டால் நமது நாட்டின்
பஞ்சையெல்லாம் ராட்டினத்தில் பதமாக
நூற்றுவந்தால் பரந்து நிற்கும்
பஞ்சமெல்லாம் நம்மைவிட்டுப் பறந்துவிடும்
பலவளங்கள் பரவு மன்றே. (14)

வெளி வேடம்

261. கண்ணெதிரே கண்டவர்மேல் கருணைஒன்றும்
காட்டாமல் கடிய தீமை
பண்ணுகின்ருர் யாருமே பாராத
பரமனைநேர் பார்த்தார் போல
எண்ணவெளி வேடங்கள் எழிலாகக்
கொண்டுமே ஏற்றம் காட்டி
விண்ணிலுயர் கின்றவர்போல் வீண்மொழிகள்
வீசுகின்ருர் விளைவ தென்னே. (15)

### அவல விழைவு

262. பொல்லாத புலமயக்கும் பொறிவெறியும்
எவ்வழியும் பொங்கி நின்று
செல்லாத வழிகளெல்லாம் சென்றுசென்று
சிறுமைகளைச் சேர்ந்து கொள்வார்
நில்லாத நிலையுன்னி நெறிமுறையில்
பெருமையொன்றும் நேரே காணார்
அல்லாத பழிதுயரை ஆவலொடு
புரிகின்றார் அவலம் அந்தோ. (16)

### காமக் காட்சி

263. கன்னத்தில் முத்தமிட்டுக் கட்டிஎதிர்
தழுவுகின்ற காமக் காட்சி
மன்னிவரு படங்களையே மனங்களித்துக்
காண்கின்றார் மையல் மீறி
அன்னவகை நிலைகளிலே ஆவலாய்
அனுதினமும் அழுந்தி யுள்ளார்
இன்னபடி மானுடங்கள் ஈனமாய்
இழிந்தொழியின் ஞானம் எங்கே? (17)

### தீச் சுவை

264. வாய்ச்சுவையே மிகவிழைந்து வயிறுவளர்த்
தனுதினமும் வசை வளர்த்துப்
பாய்ச்சுவையில் ஆழ்ந்துபழி பாய்ந்துவரும்
வழியெல்லாம் படிந்து தோய்ந்து

நாய்ச்சுவைக்கும் நரிச்சுவைக்கும் நயமாக
ஊன்பெருக்கி நலமொன் றின்றிப்
பேய்ச்சுரைக்காய் எனவந்து தீச்சுவைக்கே
பெயர்கின்றார் பெருமை என்னே. (18)

நேர்மையே சீர்மை

265. நேர்மையருள் நீர்மைகளால் நெஞ்சுயர்ந்து
நீதியாய் நிலவி நின்றால்
சீர்மைகளும் சிறப்புகளும் அன்னவனைத்
தேடிவந்து சேர்ந்து நிற்கும்;
கூர்மையறிவு எவ்வளவு கூடிநின்ற
தாலும் குணங்க ளின்றேல்
ஓர்மையுடன் அவன்உயரான் உறுதிநலம்
தனையடையான் உணர்க ஓர்ந்தே. (19)

புனிதமே புண்ணியம்

266. புனிதமன முடையவனே புண்ணியவான்
ஆகின்றான் புகழ்கள் ஓங்கி
மனிதஇனம் தொழுதுவர மதிப்படைந்து
வருகின்றான் மனமே யாண்டும்
இனியகதி தரவல்ல இன்துணையாம்
அதுதூய்மை எய்தி வந்தால்
தனிமகிமை பெருகிவரும் தனிமுதலின்
திருவருளும் சாரு மன்றே. (20)

# 10. பழக்க வழக்கங்கள்.

கெட்டதைத் தொடாதே

267. தொட்டஒரு பழக்கத்தின் படியாக
மனிதனென்றும் தொடர்ந்து நின்று
கட்டமைந்து வருகின்ற காரணத்தின்
பூரணத்தைக் கருதி நோக்கின்
ஒட்டிவரு பழக்கத்தின் உறுதிநிலை
உணரலாம் ஊன மான
கெட்டகொடும் பழக்கங்கள் கேடுகளே
புரிந்துவரும் கிளர்ந்து நின்றே. (1)

பழக்கமும் வழக்கமும்

268. பழக்கமொரு சிறிதுநீ முதல்நாளில்
பழகியது படிந்து பாய்ந்து
வழக்கமாய் மறுநாளில் வலியடைத்து
வந்துன்னை வளைந்து கொண்டு
குழக்கன்று தாய்நாடிக் குழைந்துநிற்கும்
கோலம்போல் கூடி நிற்கும்
பழக்கமே பிரதானம் எனமொழியும்
பழமொழியும் பரிந்து தேர்க. (2)

அல்லதை அணுகாதே

269. நல்லாரைச் சேர்தல்போல் நல்லஒரு
பழக்கத்தை நாடிக் கொள்க
பொல்லாத பழக்கத்தைப் பொய்யாகத்
தொட்டாலும் புலியாய் நீண்டே

எல்லாரும் எள்ளிநகை இழிபழியில்
தள்ளியுனை ஈனமாக்கும்
அல்லாத பழக்கங்கள் அவலமாய்
அழிதுயரே அடர்ந்து செய்யும். (3)

மனிதன் பழக்கத்தின் கட்டு

270. பாரினுறு மனிதரெலாம் பழக்கத்தின்
கட்டாகப் படிந்து வந்து
நேரிலெதிர் நிலவுகின்றார் நேர்ந்துவந்த
பழக்கத்தின் நிலைமைக் கேற்ப
யாருமே அமைந்துள்ளார் ஆதலினால்
அதனுடைய அமைதி நோக்கிச்
சீருடைமை அறியலாம் சிறுமைகளும்
பழக்கத்தால் தெரிய லாமே. (4)

புல்லன் ஆகாதே

271. பொய்பேசிப் பழகிவரின் புலைபடிந்து
புல்லியனாய்ப் புறம்போகின்றான்;
மெய்பேசி வருகின்றான் மேலான
குலமகனாய் விளங்கி யுள்ளான்;
பொய்பேசல் நீசமென்று முந்நாளில்
இந்நாட்டில் புனித மான
மெய்பேசி எவ்வழியும் மேலோராய்
வந்தனரம் மேன்மை எங்கே? (5)

## புலையில் இழியாதே

272\. கெட்ட இழி பழக்கங்கள் கேடாக
வந்திந்த நாட்டைக் கவ்வி
அட்டமத்துச் சனிகள்போல் யாண்டுமே
யாவரையும் அடர்ந்து பற்றி
வட்டமிட்டு நாளுமே வசையாக
வதைத்துவரும் வகையைக் காணூர்
கொட்டமிட்டுத் திரிகின்றார் குடிகேடு
தெரியாமல் குலாவி அந்தோ. (6)

## வெள்ளையர்பால் அள்ளியது

273\. வெள்ளையர்பால் அமைந்துள்ள வினையாண்மை
முதலாய மேன்மை வாய்ந்த
ஒள்ளியநற் குணங்கள் ஒன்றும் ஊதியமா
உளங்கொள்ளார் ஊக்கி அன்னூர்
கொள்ளுகின்ற உடைநடையும் தலைதறிப்பும்
புகைக்குடியும் குடியும் அந்தோ
அள்ளிநின்று தள்ளுகின்றார் அவ்நிலையில்
நம்மவர்தம் ஆர்வம் என்னே. (7)

## கோல்நாட்டும் குருடு

274\. மேல்நாட்டார் நடைமுறையில் மேல்நாட்டம்
கொண்டதனை விழைந்து பற்றி
மால்நாட்டம் உடன்திரிந்து மணநாட்டம்
ஒன்றுமின்றி மறுகி நின்று

கோல்நாட்டும் வழிஏகும் குருடரெனப்
பிறர்நெறியே குறிக்கொண் டேகித்
தோல்நாட்டும் பாவைகளாய்ச் சுழல்கின்றார்
ஈதென்ன துயரம் அம்மா! (8)

## வெளிவேடம்

275. வெளிவருவார் பலருமே வேடங்கள்
புனைந்துமே விரகுள் ஓங்கிக்
களிவருவெங் கரவோடு கபடங்கள்
செய்கின்றார் கதர்மேல் போர்த்தி
அளிவருபே ருபகாரம் புரிபவர்போல்
அடுத்தவருக்கு ஆசை காட்டி
ஒளிவருமென்று உள்மயங்கி இனிவரவே
புரிகின்றார் உறுவ தென்னே. (9)

## குள்ளநரித்தனம்

276. குள்ளநரித் தனங்களெல்லாம் குடிகொண்ட
நெஞ்சுடையார் கொடுமை யாவும்
மெள்ளமறைத்து இனியவர்போல் வெளிவேடம்
பூண்டுலகில் மேன்மை காணத்
துள்ளியெழுந் தலைகின்றார் சூழ்ச்சியுடன்
பேசுகின்றார் துள்ளல் எல்லாம்
கள்ளமனக் குகையிருக்கும் கடவுள்கண்டு
நகைக்கின்றார் கதிதான் என்னே. (10)

## போலிச் செருக்கு

277. மூன்றேநாள் தமிழ்ப்படித்து முடிந்தவுடன்
முழுப்புலமை வந்த தாக
ஆன்றகடுஞ் செருக்கேறி ஆயுள்வரை
படித்தவரை அவங்கள் பேசி
ஊன்றியஓர் உணர்வுமின்றி உரைகள்பல
பிதற்றுகின்றார் ஊனம் எல்லாம்
தோன்றிவெளி வருகின்ற தோற்றத்தை
அறிகில்லார் தொல்லை யம்மா. (11)

## பொல்லாப் படிப்பு

278. பேப்பரைநீ படித்துவரின் பிழைவழியில்
உனையீர்த்துப் பேதை ஆக்கிப்
பாப்பரெனச் செய்துவிடும் பண்புயர்ந்த
கலைநூல்கள் படிக்க மாட்டாய்
காப்பரிய உன்அறிவைக் கடைப்படுத்தும்
கடைத்தாளைக் கையில் ஏந்தி
மூப்பறியும் வரையுமே முதலறிவை
இழந்தொழிதல் முறையோ சொல்லாய்! (12)

## நல்லதை நாடிக்கல்

279. நல்லவுயர் நூல்களைமுன் நயந்தோர்ந்து
கற்றபின்பு நயம்ஒன் றில்லாப்
புல்லறிவு பெருகிவரப் புலையாடி
வருகின்ற பொல்லாத் தாள்கள்

ஒல்லைஎதிர் வந்தாலும் ஓராமல்
ஒருநோக்கே நோக்கிப் போக்கிக்
கல்விநலம் கண்டுயர்க காணாயேல்
வீணாகிக் கழிவா யன்றே. (13)

பிழையான பீடைகள்

280. பீடிபொடி குடிஎன்னும் பீடைகளே
வாடைகளாய்ப் பெருகி எங்கும்
ஓடிவரும் பேய்களையே உறவினங்க
ளாத்தழுவி உழலு கின்றார்;
கோடிவரு மானங்கள் கொடுத்துவரும்
குறியெல்லாம் குடியர் நாட்டில்
நீடிவரும் நிலைகாட்டி நின்றனவே
என்றிழவு நீங்கும் அந்தோ! (14)

கோடிவரவு

281. ஒருகாசுக்கு இருபீடி விற்பவரும்
பலகோடிக்கு அதிப ராகிப்
பெருகாசர் எனஎவரும் பேணிவரப்
பெருகிவரும் பெருமை காணின்
வருகாசும் புகைக்குடியும் இந்நாட்டில்
எவ்வளவு வளமாய் நீண்டு
திருகாசர் திரிகின்றார் என்பதைநேர்
தெரியலாம் தீமை அம்மா! (15)

## பிலுக்கு நடை

282. தன்வாயில் ஒருசுருட்டு தலையிரில்
பலசுருட்டு திருக்கு நோக்கம்,
என்வாயில் உள்ளதையும் எனதகத்தில்
இருப்பதையும் எதிரே கண்டு
பொன்வாயில் சொரியுமெனப் புகல்கின்ற
புகையினராய்ப் பொங்கி வாழ்வார்
முன்வாயில் திறந்துள்ளே முழுவதையும்
காட்டுகின்ற மூடர் தாமே. (16)

## இழிவிழைவு

283. குளிர்நாட்டில் வாழ்கின்ற குடிசனங்கள்
குடித்துவரும் குடியை மேலோன்
ஒளிநாட்டம் மிகவுடைய இந்நாட்டார்
குடிப்பதந்தோ ஊன மான
களிநாட்ட மேஎன்று கண்ணீரைப்
பெரியர்பலர் காட்டு கின்றார்
தெளிநாட்டம் இல்லாமல் தீமைகளை
நாடியே திரிகின் றாரே. (17)

## போடியன் ஆகாதே

284. பீடிநீ குடித்தாயேல் பீடையுனை
விடாதுகாண்! பிழை மலிந்து
நீடிவரு சுருட்டெனிலோ நீசுருண்டு
வீழ்ந்திழிவாய்! நெடிய மூச்சுள்

ஓடிவரு பொடிஎனினோ ஒருபொடிய
னாய்ஒழிவாய் உறுதி ஓர்ந்து
நாடியுனை எவ்வழியும் நலமாகப்
பேணிவரின் நன்மை யாமே. (18)

பேரியன் ஆகுக

285. பற்றிநின்ற பழக்கந்தான் பாடையிலே
கிடத்துமட்டும் படிந்து வம்பாய்
முற்றிநிற்கும் என்னுமந்த முதுமொழியை
முன்னுறநீ முழுதும் நாடி
ஒற்றிநிற்கும் உறவுகளை உரிமையுடன்
புனிதமா ஓர்ந்து கொள்க
சுற்றிநிற்கும் நிலைகளிலே நல்லதையே
பழகினல் சுகமே தோய்வாய். (19)

சீர்மை தேளிக

286. உள்ளம்உரை செயல்களெல்லாம் உயர்நிலையில்
பழகிவரின் உயர்ந்தோ னாகி
வெள்ளமெனும் பெருமைகளை மிகமேவி
மேலான இன்பம் காண்பாய்!
எள்ளனுறும் இழிபழக்கம் எவ்வழியும்
இழிதுயரே செய்யும் என்றும்
தெள்ளியநல் லுறவுகளைச் சேர்ந்துயர்ந்து
கொள்வதே சீர்மை யாமால். (20)

போடி போடாதே.

287. மூக்கிலே பொடிஏற்றி மூளையிலே
மிடிஏற்றி மூட மாக
வாக்கிலே புகையேற்றி வழியெல்லாம்
நகைஏற்றி வசையே ஏறி
நாக்கிலே பொய்யேற்றி நாண்ஒன்றும்
ஏறுமல் நாச மான
போக்கிலே போகின்ற புலையாட்டம்
ஒழிவதென்ருே புகல்வாய் அம்மா! (21)

பொய் பேசாதே.

288. நீசமே பொய்பேசல் என்பதைநேர்
உணராமல் நீள மாகப்
பேசிநீ வருவாயேல் பிழையான
பழிதுயரே பெருகி நீண்டு
நாசமே அடையவரும் நாவில்ஒரு
பொய்பேச நயந்த போதே
ஈசனருள் எழுகாதம் விலகியதே
இழிவினம் தெளிக இன்னே. (22)

புலையுருதே.

289. பொய்சொல்லக் கூசாத புலைவாயர்
இந்நாட்டில் புலையாய் ஓங்கி
மெய்சொல்லக் கூசுகின்ற மேலான
இழிநிலையில் மேவி யுள்ளார்

வைகின்ற வசைகளையும் வருகின்ற
பழிகளையும் வரைந்து காணார்
செய்கின்ற செயல்களெலாம் சிறுமைகளே
சேர்ந்துவரத் திமிரே கொண்டார். (23)

புகை குடியாதே.

290. பொடிநாடி எவ்வழியும் பொடியனாய்ப்
போகின்றாய்! புகையை நாடி
விடிநாளும் காணாமல் வெந்தவிந்து
சாகின்றாய்! வீணே தீமை
குடியேறிக் கூடிவரக் குடிகேடன்
ஆகின்றாய்! கோலம் யாவும்
அடியோடு கெடுகின்ற அவலநிலை
அறியாமல் அலைகின்றாயே! (24)

புல்லரோடு பழகாதே.

291. பொல்லாத சேர்க்கையைப்போல் புலைப்பழக்கம்
எவ்வழியும் புல்லனாக்கி
அல்லாத வழிகளிலே அவலமாத்
தள்ளிவிடும் அறிவு பாழ்போய்
எல்லாரும் இகழ்ந்தகல இழிந்துநீ
அழிந்தொழிதல் ஈனம் அந்தோ
நல்லாரை நாடுதல்போல் நற்பழக்கம்
கூடிவரின் நன்மை யாமே. (25)

நல்லதையே பழகு.

292. நலமான வழிகளிலே நாள்தோறும்
பழகிவரின் நன்மை ஓங்கிப்
பலமான மேன்மைகளே பாங்கோடு
பொங்கிவரும் பழக்கம் தீதேல்
குலமான நிலையழிந்து குடிகேடே
கூடுங்காண் கூர்ந்துணர்ந்து
நிலையான நெறிஒழுகி நெடியபே
ரின்பநிலை நிறைக நேர்ந்தே. (26)

வாழ்வின் வரவு.

293. மருவிவரு பழக்கத்தின் வழிமுறையே
மனிதவாழ் வனைத்தும் நேரே
உருவடைந்து வருகின்ற உண்மையினை
ஓர்ந்துநீ உணர்ந்தா யானல்
கருவடைந்து வருகின்ற உயிரினங்கள்
எவ்வழியும் கடல்சூழ் ஞாலம்
விரிவடைந்து வருகின்ற நிலைகளிலே
வேற்றுமைகள் விளங்கு மன்றே. (27)

மனிதர் நிலை.

294. புலையோடு பழகினன் புலையன்எனப்
போகின்ருன்; புனித மான
கலையோடு பழகினன் கலைஞன்என
வருகின்ருன்; கடிய தீய

கொலையோடு பழகினன் கொலைஞன்னனக்
கொடியபழி கொண்டு நின்றான்;
நிலையோடு பழகிவரு நிறைகளிலே
மனிதர்நிலை நிலவு மன்றே. (28)

மேன்மை விளைவு.

295. இழிவான பழக்கங்கள் இழிமக்க
ளாக்கிவிடும் இனிய தூய
தெளிவான பழக்கங்கள் தெள்ளியராச்
செய்தருளும் தீமை யாதும்
ஒளிவான வழிகளிலே உள்ளத்தைப்
பழக்கிவரின் உயர்ந்த மேன்மை
வெளிவான மாய்விளங்கி மேலான
பேரின்பம் விளையு மன்றே. (29)

விட்டு விடாமை.

296. பொன்னைவிட்டேன் பொருளைவிட்டேன் பூமிமுதல்
யாவையுமே போக விட்டேன்
மின்னைவிட்ட மனைவியையும் மேலான
மக்களையும் வெறுத்து விட்டேன்
தன்னைவிட்டேன் என்றிருக்கும் துறவியரும்
பொடியையடி தழுவித் தாங்கி
உன்னைவிட்டால் உயிர்விடுவேன் என்றிருப்பர்
பொடியே! உன் ஒளிதான் என்னே? (30)

## தோட்டதுயர்

297. பீடியே! இந்நாட்டில் பீடையாய்க்
குடிபுகுந்து பேதை மக்கள்
நாடியுனை எவ்வழியும் நசையாகத்
தேடிவர நவையே நீட்டிக்
கோடிதுயர் செய்கின்றாய் குடிகேடே
புரிகின்றாய் கொடிய நீதான்
ஓடியே போகாமல் உள்ளவரை
எள்ளல்துயர் ஒழியாதந்தோ! (31)

## ஒட்டிய புகை.

298. புகையிலையே! நீயிங்கே எத்தனையோ
வகையுருவில் புகுந்து கொண்டு
தொகையாக எவ்வழியும் துயரமே
செய்கின்றாய் தூயோர்க் கெல்லாம்
நகையாக மக்களிடம் நசையூட்டி
வசைநீட்டி நவையே காட்டிப்
புகையாகச் சுடுகாடு போகுமட்டும்
அவரைநீ புகைக்கின் றாயே! (32)

## கெட்ட வாய்.

299. செவ்வாய்கள் கருகிவரச் சீரழிவு
பெருகிவரச் சிறுமை யாவும்
எவ்வாயும் ஏறிவர இழிநாற்றம்
நாறிவர ஈன மாக

வெவ்வாயர் புகைகுடித்த வெறிமிகுந்து
அறிவழிந்த வெளியே நீண்டு
ஒவ்வாத பழக்கத்தால் ஒருநாளும்
இல்லாமல் உழல்கின் றாரே (33)

## அழுக்கின் மேல் அழுக்கு.

300. ஊனவுடல் எடுத்துவந்திங் குழல்கின்றோம்
ஒழியாத அழுக்கை நாளும்
நானமுறு நீராடி நலமாகப்
பேணாமேல் நாறும் அந்தோ
ஈனமுறும் அழுக்குகளை இயல்பாக
வுடையநாம் இழுக்கி மேலே
மானமறப் பழகிவரின் மாறாத
பேரிழிவு மருவு மன்றே. (34)

## இழுக்கு ஒழிக.

301. பன்றியொடு கூடினால் பசுங்கன்றும்
ஈனமலம் படிந்து தின்னும்
என்றெழுந்த பழமொழிதான் இழிதொடர்பின்
விளைவுகளை எளிது காண
ஒன்றிவந்தோர் போதனையாய் ஓங்கியுளது
உண்மைதனை யுணர்ந்து நாடி
நன்றுயர்ந்த வழிகளிலே என்றுமே
பழகிநீ நலமாய் வாழ்க. (35)

# 11. பிறப்பும் பேறும்.

நல்ல ஆள்

302. புல்லாகிப் பூடாகிப் புழுவாகிப்
பறவைகளாய்ப் புலன் அழிந்த
பொல்லாத விலங்குகளாய்ப் புலையாடிப்
பலபடியாய்ப் புரண்டு நொந்து
வெல்லாத வினைவழியே விரைந்தோடி
மேலான மானுடத்தின்
நல்லாளாய் வந்துள்ளாய் நண்ணியதை
நாடாயேல் நாச மாமே. (1)

நல்லானை நினை

303. நில்லாத உறவுகளை நிலையென்று
கருதுகின்றோம் நிலையா யுள்ள
நல்லானை எவ்வழியும் நமக்கினிய
தாரகமாய் நண்ணி நிற்கும்
வல்லானை ஒருசிறிதும் நினையாமல்
வல்லவராய் வாழு கின்றோம்
பொல்லாத நமனெதிரே புகலென்ன
புகலுவோம் புகல்வாய் நெஞ்சே! (2)

ஒத்தது உணர்

304. செத்துநிதம் பாடையிலே செல்வாரைக்
காண்கின்றோம் தினமும் கண்டும்
ஒத்ததொன்றும் உணராமல் உண்டுகளித்
துறங்குகின்றோம் உயிருக் கான

நித்தியநன் னலமொன்றும் நினையாமல்
திரிகின்றேம் நிலைமை எல்லாம்
பித்தரிவர் எனும்படியே பெருகிவர
வளர்கின்றேம் பிழைகள் அந்தோ! (3)

நன்றியறிந்து நட

305. பன்றியெனக் கழுதையெனப் பாரிலுனைத்
தள்ளாமல் பகுத்து நோக்கி
ஒன்றியுணர் கின்றவுயர் மானிடத்தின்
உருவருளி உதிக்கச் செய்தேன்
நன்றியறி வுடனடந்து நாளுநீ
என்செய்தாய்? நரனே! என்று
மன்றிலுயர் பரன்வினவின் மறுமொழிநீ
என்சொல்வாய் மறுகு வாயே! (4)

சிந்தனை செய்

306. இந்தவுடல் எடுத்துநாம் இங்குவந்தது
எதற்காக இறந்த பின்னர்
எந்தவுடல் அடையுமோ? என்னநிலை
எய்துமோ? இன்னே நம்பால்
வந்தஇந்த மெய்நிலையின் வகைதெரிந்து
மீட்டுவரா வழியை நாடி
அந்தமிலா இன்பநலம் அடையாமல்
கடைபோதல் அவமே அம்மா. (5)

### அரிய பிறவி

307. அரியபிறப் படைந்துள்ள ஆண்மகனே!
உன்னைநீ ஆய்ந்து நோக்கி
உரியவுயிர்க் குயர்பயனை உடனடைந்து
கொள்ளாமல் உணர்வு குன்றிக்
கரியமனப் புன்மையொடு காட்டுவிலங்
காயிழிந்து கழிந்து நின்றால்
பெரியபெரும் பேறிழந்த பேதையெனப்
பிழைபடுவாய் பிழை யாமே. (6)

### பிறப்பின் பயன்

308. எடுத்துவந்த இவ்வுடலுக் கினியபெரும்
பயனெதுஎன் றிறைவன் கேட்க
அடுத்தவுடல் அடையாமல் ஆனந்த
நிலையமே அடைதலாமென்று
உடுத்தபெருந் தவமுடைய ஒருமுனிவன்
உரைசெய்தான் அதை உணர்ந்து
மடுத்துமறு பிறவிவந்து மருவாத
படியமர்ந்து மகிமை பெற்றான். (7)

### உயிர்க்கு உறுதி

309. நேற்றிருந்தார் இன்றுவெந்து நீறானார்
எனும்நிலையை நிலையாய் நேரே
ஊற்றமுடன் பார்த்திருந்தும் உளமுருகி
உயிர்க்கான உறுதி நாடி

ஏற்றமுடன் அறநலங்கள் யாதொன்றும்
புரியாமல் நிறையாத் தந்தோ
கூற்றடர்ந்து வரும்வரையும் கோதாடி
நிற்கின்றார் குறிதான் என்னே! (8)

நிலையாமை நிலை

310. பாரரசெல் லாம்பணியப் பணியரசின்
முடியிருந்த பாரம் தாங்கிப்
பேரரச ராயிருந்த பேரெல்லாம்
பேர்ந்துநிலை பிரிந்து போனார்
நேரரசா இதுவரையும் நிலையாக
நின்றவரை நேரே காணோம்
ஓரரசா யுள்ளவரை உளமுருகிப்
போற்றாமல் ஒழிவ தென்னே! (9)

உயிர் வளராமை

311. பயிர்வளர்க்கும் உழவனதைப் பண்போடு
பார்த்துவரும் பான்மை போல
உயிர்வளர்த்து நின்றெங்கும் உபகார
மேபுரிந்துள் உறுதி கூர்ந்து
செயிர்வளர்த்தல் அறமறந்து சிவபோகம்
துய்க்குமுயர் சீர்மை காணார்
வயிறுவளர்த் துடல்ஓம்பி வசைவளர்த்து
நிற்கின்றார் வாளா அந்தோ! (10)

### அழிவு நிலை

312. கடல்புடைசூழ் உலகமெலாம் காலோடிக்
கண்ணூன்றிக் கருதி நோக்கின்
உடல்புடைசூழ் உயிரினங்கள் உயர்நிலையை
அடையாமல் உழந்து ழந்து
குடல்புடைசூழ் பசிக்கஞ்சிக் கும்பிக்கே
கூழ்வார்த்துக் கும்பு கூடி
அடல்புடைசூழ் தாஓடி அவநிலைக்கே
ஆளாகி அழிகின் றாரே. (11)

### துறவியின் தோல்வி

313. பிறவியிடை வருகின்ற பெருந்துயர
நிலைமைகளைப் பெரிதுணர்ந்து
மறவியிடை யிறையேனும் அதையடையா
வகைநாடி மனந்துணிந்து
துறவியென எழுந்தயலே போனவரும்
தூயபே ரின்பம் தோயார்
புறவிடையில் புகழ்நாடிப் பொருள்நாடிப்
புரள்கின் றார் பொறியில் வீழ்ந்தே. (12)

### சாமியாரின் சார்பு

314. பூமியார் போகங்கள் புல்லிதென
அறவெறுத்துப் போதம் மேவி
நாமியார் எனஆய்ந்து நவையகன்று
தவமுயன்று நண்ணு வார்போல்

சாமியார் வேடங்கள் சதருடனே
தரித்தவரும் சார்புள் ஓங்கி
மாமியார் பல;டைய மாலடைந்து
மடிகின்றார் மதியென் அம்மா! (13)

பிறந்த பயன் பெறுக

315. இறந்தொழிந்து போய்விடுவோம் எனுநிலையைச்
சிறிதேனும் எதிரறிந்து
பிறந்தெழுந்து வந்தபயன் பேணுமல்
பிழையாகப் பெருகி நின்று
மறந்தழைய வாழ்கின்றார் மதிதழைய
வந்த இந்த மானுடத்தே
அறந்தெரியா தவம்போனல் அயலிழிந்த
பிறவிகளில் ஆவதென்னே! (14)

மெய்ப்பொருளை அடை

316. பகுத்தறிவு கொண்டுயர்ந்த பயனுணரும்
மானுடராய்ப் பாரில் வந்தும்
வகுத்தறிந்து பாராமல் வசைவழியே
வலிதோடி நசைவளர்த்து
மிகுத்தபொருள் அடைந்தாலும் மெய்ப்பொருளை
அடையாமல் மெய்மறந்து
தொகுத்தவர வினைத்துமயல் உகுத்திழிந்து
மயலோடு தொலைகின்றாரே. (15)

புண்ணியனாய் உயர்க

317. மனிதரென வந்துள்ளார் மதியுடைய
ராய்த்தெளிந்து மனிதப் பேற்றின்
புனிதநிலை தனையுணர்ந்து புண்ணியராய்
உயராமல் புலையில் தாழ்ந்து
துனியிருந்து வருகின்ற துயர்களையே
தொடர்பாகத் தொடர்ந்தி ழிந்தும்
இனியபயன் அடைந்தவர்போல் இறுமாந்தே
இருக்கின்றார் ஈனம் என்னே. (16)

சிறப்பு நிலை

318. பிறப்பொக்கும் எல்லார்க்கும் என்றாலும்
அவரவர்தம் பெருமைக் கான
சிறப்பென்றும் செய்வினையால் எய்துமெனத்
தெய்வமொழி செப்பக் கேட்டோம்
அறப்பண்பு கொண்டெவர்க்கும் அன்பாற்றி
அருள்புரியோம் அவமே பேசி
இறப்பொன்றும் நிலைதெரியாது இறுமாப்போ
டிருக்கின்றோம் இருப்பு நன்றே. (17)

மனக்கோட்டை

319. பாடுபட்டுத் தேடுகின்றாய் பசிதீர
உண்ணுகின்றாய் பலவும் நாடி
வீடுகட்டி மாடுகட்டி வேணவெலாம்
வேண்டுமென விழைந்து கட்டி

நாடுகட்டி யாளநீ நகைகட்டி
நீளுகின்றாய் நாளுலண்டு
கூடுகட்டி யாங்குமனக் கோட்டைகட்டிச்
சாகின்றாய் குறிக்கோள் என்னே. (18)

நலம்புரிந்து வாழ்

320. பொல்லாத புலைநினைவை ஒருசிறிதும்
அணுகாமல் புனித னாகி
நல்லாற்றின் இனிதொழுகி எவ்வுயிர்க்கும்
நலம்புரிந்து நடப்பா யாகில்
கில்லாத உலகத்தே நிலையான
புகழுடனே நிலைத்து நீதான்
எல்லாரும் தொழுதேத்த என்றுமே
தெய்வமா யிருப்பா யன்றே. (19)

மையலில் மருளாதே

321. தந்தைதாய் தெய்வமெனத் தாம்பேண
வேண்டுமென்று சார்ந்து பள்ளி
வந்தவுடன் போதித்தும் வருபயனை
எதிர்காணோம் வழியே வந்த
அந்தமனை யாட்டிகளை ஆருயிரிற்
பேணியவர்க்கு ஆட்செய் கின்றார்.
இந்தமரு ளுடையவர்பால் எந்தவிதம்
தருமநெறி ஏறும் அம்மா! (20)

### பிழை செய்யாதே

322. இன்பங்கள் துன்பங்கள் எல்லாம்நீ
செய்தனவே அயலே யில்லை;
முன்பங்கே செய்ததையே முதலுரிமை
யோடுவந்து மூண்டு நின்று
பின்பிங்கே அநுபவிக்க நேர்ந்துள்ளாய்
ஆதலினால் பிழைசெய் யாயேல்
துன்பங்கள் உனையடையா எவ்வழியும்
சுகமடைந்தே தொடர்ந்து வாழ்வாய். (21)

### ஒழிவதை உணர்க

323. நீரில்எழும் அலைகளென நிலத்தெழுந்த
தலைகளெல்லாம் நேரே மாய்ந்து
காரிலெழு மின்னல்கள்போல் கடிதுமறைந்
தொழிகின்ற காட்சி கண்டும்
ஓரில்நமக் குரிமையா வேண்டுமெனும்
உணர்வின்றி உயிர்கள் அந்தோ
பாரிலெழு பிறவிகளில் பலபடியாய்த்
திரிந்துவரும் பான்மை என்னே. (22)

### தனிமுதலைக் காணுக

324. உன்னுள்ளே இருக்கின்ற உணர்வொளியை
உரிமையுடன் ஊன்றி நோக்கின்
நின்னுள்ளே உலகமெல்லாம் நிலைத்திருக்கும்
நிலைமையினை நேரே காண்பாய்!

பின்னுள்ள நிலைகளெல்லாம் பேய்த்தேர்போல்
தோன்றுகின்ற பிழைகள் ஓர்ந்து
தன்னுள்ளே காண்பவனே தனிமுதலைக்
கண்டின்பம் தழைக்கின் றானே. (23)

பிறர் நலம் பேணுக

325. தன்னலமே கருதிநீ தழைத்துவரின்
தாழ்வதனுள் சார்ந்து நிற்கும்
பின்னலமும் பெரிதாகப் பெறலரிது
பிறர்க்குநலம் பேணி நன்மை
துன்னிவரச் சிறிதேனும் கருதிநீ
உழைத்துவந்தால் தொகுதி யாகப்
பன்னலங்கள் உனக்குவரும் பரர்க்கிரங்கி
வருவதே பரம வாழ்வாம். (24)

விதைத்தது விளைவு

326. நெல்விதைத்தால் நெல்விளையும் தினைவிதைத்தால்
தினைவிளையும் நேர்விதைத்த
வல்வினையே வருமன்றி மற்றொன்று
வருவதுண்டோ மதியின் ஓர்ந்து
நல்வினைசெய் தவர்இன்ப நலனுகர்வார்
நவைபுரிந்தார் நைந்து தாழ்வாய்
அல்லலுழந் தலமருவார் ஆருயிர்க்கு
வேறுதுணை யார்செய் வாரே? (25)

### அமுதமாய் வாழுக

327. உள்ளத்தே நல்ல இயல் பில்லாத
கொடியவர்கள் உலகிற் கெல்லாம்
கொள்ளித்தேள் எனநின்று கொடுமைமிகச்
செய்குவார் குணம்சேர் மாந்தர்
தெள்ளமுதம் எனஎழுந்து தேசமெங்கும்
இன்பமுறத் திகழ்ந்து நிற்பார்
ஒள்ளியதன் உளமினிதேல் உலகில் அவன்
இறைவனுய் ஒளிர்வன் அன்றே. (26)

### பிறப்பு துன்பம்

328. பிறந்துவரு பிறப்பெல்லாம் பெருந்துன்பம்
பெருகிவரும் பிறந்த யாவும்
இறந்துவரு கின்றநிலை எதிரறிந்தும்
உயிர்க்குறுதி ஏது மின்றி
மறந்துவரு கின்றதுபோல் மதிகேடு
மாநிலத்தில் மற்றென் றுண்டோ?
சிறந்துவரு சீரெல்லாம் தெளிவான
ஞானத்தால் சேரு மன்றே. (27)

### பிறவாமை இன்பம்

329. உன்னைநீ உள்ளபடி உணர்ந்தாயேல்
உயிர்பரத்தின் ஒளிஎன் றோர்ந்து
மின்னனைய மெய்யின்கண் மெய்யான
தெய்வமுள்ள மேன்மை காண்பாய்

தன்னையெவன் அறிந்தானோ தத்துவத்தின்
தற்பரமாய்த் தழைத்து நின்றான்
பின்னைஒரு பிறவியிலும் பிறவாமல்
பேரின்பம் பெறுவான் அன்றே. (28)

மணியுயிராகுக

330. தன்னுடல் வளர்க்க மன்னுயிர் அழிக்கும்
தாழ்வினை ஒழியவிட்டு என்றும்
இன்னுயிர்க்கு இரங்கி இதம்புரிந் தருள்க
ஈசன் இன் னருளெல்லாம் எய்திப்
பொன்னுயி ராகி மணியுயி ராகிப்
புனிதபே ரின்பங்கள் பொருந்திப்
பின்னுயிர் என்றும் பிறவியை அடையாப்
பேறுவந் துமைஅடைந் திடுமே. (29)

முத்தியை அடைக

331. இந்த மானுட யாக்கையை
அடைந்துளோம் இனிமேல்
எந்த ஊனுடல் எய்துமோ
அறிகிலோம் இதன்கண்
வந்த காமினி வராவகை
சூழ்ந்துமா தவங்கள்
முந்த வேசெய்து முத்தியை
அடைந்திட வேண்டும். (30)

## 12. பெருமையும் சிறுமையும்.

மேலோர் நிலை

332. மேலான பெருந்தன்மை மிகமேவி
நின்றவரே மேலோர் என்று
நூலோதி வருகின்ற நிலைமைகளை
அனுபவமா நோக்கி யுள்ளோம்
மாலோடு மதிமருண்டு மனம்சுருங்கிச்
சிறுகுணங்கள் மருவி நின்றும்
மேலோர்நாம எனவெளியே வெறிகொண்டு
திரிகின்றார் மேன்மை என்னே. (1)

கீழோர் புலை.

333. சின்னவர்கள் சிறியவர்கள் என்னவரும்
மொழிகளிலே சிறுமை யான
இன்னல்களும் இழிமதியும் ஈனவகை
யானவையே எண்ணி வந்த
அன்னவகை நிலைகளிலே யாண்டுமே
தலைவராய் அமர்ந்து நின்றும்
மன்னிவரு பெரியரென மதிமருண்டு
வருகின்றார் மதிப்புண் டாமோ? (2)

மருளாசை.

334. ஒருமுறைதான் சிறைசென்றால் உலகமெலாம்
உவந்துதொழும் உரிய தேசம்
பெருமகன்என்று உரைசெய்யப் பெறலாகும்
எனும்ஆசை பிடர்நின் றுந்த

அருமறைகள் செய்தபோய் அடர்சிறையில்
அடைபட்டுப் யாதுமின்றிப்
பொருமலுடன் இடைபிரிந்து பிழைபுகன்று
சிலர்புலைகள் புரிகின்றாரே. (3)

## நினைவின் நியதி

335. எண்ணங்கள் கோடிதாயின் ஈனராய்
இழிகின்றார்; எண்ணம் தூய
வண்ணங்கள் ஆகிவரின் மனிதருள்ளே
தேவரென மதிப்புள் ஓங்கி
மண்ணகமும் விண்ணகமும் மகிமைமிகப்
பெறுகின்றார்; மனமே யாவும்
பண்ணகமாம்; அதையுணர்ந்து பாராமல்
பாழ்படுதல் பழுதே அன்றோ. (4)

## வீண் விளைவு

336. பயனுடைய எண்ணங்கள் பண்புடைய
சரிதங்கள் பான்மை மேன்மை
நயனுடைய உணர்வொளிகள் நளினமொடு
சுவைகனிய நயந்து நோக்கி
அயனுடைய சிருட்டியினும் அதிசயமாய்
அருங்கலைகள் அமைந்து முன்னம்
வியனுடைய வாய்விளைந்த இந்நாளில்
விளைவனவோ வீணே அம்மா. (5)

### மனம் தூய்மையால் மகிமையாம்

337. மனம்புனித மானதேல் மனிதஇனம்
யாவுமே மகிமை வாய்ந்து
தினம்புனித மாயெழுந்து தேரேறி
வருகதிர்போல் தெளிவு காணும்
மனம்புனித மில்லாமல் மாசடைந்து
நின்றதேல் மதிப்பி ழந்து
கனம்படிந்த இருள்மண்டிக் கலுழ்ந்திழிந்து
கடையதாய்க் கழிந்து போமே. (6)

### வெய்ய இழிவுகள்

338. பொய்யுரையேல் புறங்கூறேல் பிறர்பொருளைக்
கவர்ந்துகொளேல் பொல்லாத் தீமை
செய்யஒரு சிறிதேனும் சிந்தைசெய்யேல்
எனநூல்கள் தெளித்து நின்றும்
வையமதில் கொலைகளவு வஞ்சம்பொய்
நாள்தோறும் வளர்ந்து பொங்கி
ஐயகோ எனஇரங்கி அருளுடையார்
அழுதரற்ற அடர்ந்த அந்தோ. (7)

### பொல்லாத வழிகள்

339. கல்லாத பேர்களே நல்லவர்கள்
என்றுமுனம் கருதிச் சொன்ன
நல்லார்தம் வாய்மொழியை ஞாலத்தார்
தெளிவாக நயந்து காணப்

பொல்லாத வழிகளிலே புலையாடிக்
கலைஞர்களும் போவா ராஞல்
அல்லாரை நோவதால் யாதுபயன்
ஆவதனை ஆய்ந்து தேர்மின். (8)

குதிரைக்கே சுழிபார்ப்பார்

340. கற்றறிந்த மேன்மக்கள் கண்ணேதான்
கண்ணன்றிக் கடல்சூழ் ஞாலம்
குற்றமிகக் கூர்ந்தோர்ந்து குறைகூறிக்
கொழித்துநிற்கும் குலப்படிந்து
வெற்றிமிகத் தருகின்ற குதிரைக்கே
சுழிசுத்தம் விழைந்து நோக்கிப்
பற்றிநிற்பர் அல்லாமல் கழுதைபால்
பழுதேதும் பார்ப்பார் உண்டோ? (9)

பார்ப்பார் பார்வை.

341. பார்ப்பனர்மேல் எழுந்துள்ள படுகோபம்
அடுதீயாய்ப் பரந்து நீண்டு
கார்ப்புமிக வுடையதாய் எவ்வழியும்
கொதிப்பேறிக் கனன்று பொங்கி
ஆர்ப்பரித்து வந்தாலும் யாதொன்றும்
ஆற்ருமல் அடங்கி அன்னோர்
ஓர்ப்புடைய ராயுள்ளார் உறுதிநிலை
வருமளவை ஓர்ந்து கொண்டே. (10)

பழுதுபடியப் பழி படர்ந்தது.

342. எல்லாரும் சேமமாய் இனிதிருக்க
வேண்டுமென யாண்டும் நாளும்
பல்லாண்டு பாடிவரும் பண்புநிலை
பாழாகிப் பழுது பட்டுப்
பொல்லாத நிலைகளிலும் புலைகளிலும்
புகுந்துகொண்டு புனித மான
நல்லார்நாம் என்றுநின்றால் நானிலந்தான்
மதிக்குமோ நாடி ஆய்மின். (11)

உண்மைப் பார்ப்பார்.

343. ஆண்டவனைப் பார்க்கின்ற அறிவுடையார்
யாரவரோ அவரே பார்ப்பார்;
பூண்டநெறி நியமங்கள் புனிதமுடன்
பழகியே போதம் ஓங்கி
மாண்டஅருள் நீர்மைகளை மருவியவர்
யாண்டுமே மாண்பு கண்டார்;
காண்டகைய பான்மையுளார் கருதரிய
மேன்மைகளைக் கைக்கொண் டாரே. (12)

நீர்மை குன்றச் சீர்மை குன்றியது.

344. வேதத்தின் அந்தத்தில் விளங்கிநிற்கும்
மெய்ப்பொருளை மேவி என்றும்
போதத்தின் நிலைநின்று புல்லாதி
எவ்வுயிர்க்கும் அன்பு பூண்டு

நீதத்தின் நெறிமுறையே நியமமுடன்
ஒழுகிவரும் நீர்மை குன்றி
ஏதத்தின் துறைதோறும் இழிந்திருந்தும்
மேல்என்னல் இழிவே அன்றோ. (13)

குலத்திமிர் கொடுமையாயது.

345. தாம்பெரிய சாதிஎன்று தருக்கேறி
அயலாரைத் தாழ்த்தி நோக்கி
ஆம்பரிசு தெரியாமல் அவமதித்து
வருவதெல்லாம் அவமே யாண்டும்
தீம்பரினம் செய்துவரும் சிறுமைகளைக்
கரவாகச் செய்து கொண்டு
போம்பரிசு கருதாமல் புலையாட்டம்
புரிவதெல்லாம் புன்மை யாமே. (14)

அந்தணராய் வந்தவர்.

346. இகலோக இச்சையெல்லாம் யாதுமே
இல்லாமல் இகபரத்தின்
சுகபோகங் களைமறந்து தூயபரம்
பொருளையே சூழ்ந்து நோக்கித்
தகவான புனிதநிலை தனில்நின்று
சமதமங்கள் தோய்ந்து வாய்ந்த
அகமேவி யிருந்தவரே அந்தணராய்
வந்துள்ளார் ஆய்க ஆய்ந்தே. (15)

தெய்வீக நிலை

347. எவ்வுயிரும் இறைவனுறை இனியபெரு
நிலையமென எண்ணி எங்கும்
செவ்வியபே ரருள்கூர்ந்து சீவர்களுக்கு
இதம்புரிந்து சீலம் தோய்ந்து
கவ்வியநன் னீர்மைகளால் எவ்வழியும்
நேர்மையாக் கனிந்து வாழும்
திவ்வியவாழ் வுடையவரே தெய்வீக
நிலையினராய்த் திகழ்ந்து நின்றார். (16)

உயர்வின் உரிமை.

348. வாக்குமனம் காயமெனும் மூன்றுவகை
நிலைகளால் வைய மாந்தர்
போக்குகளும் வரவுகளும் பொருந்திவரு
கின்றநிலை புரிந்து நோக்கி
நாக்குவழி நயமொழியும் யாக்கைவழி
நற்செயலும் நாடுளத்தே
ஊக்கியெழும் உயர்நினைவும் உடையவனே
பெரியவனாய் உயர்ந்து நின்றான். (17)

அரியன செய்பவன் பெரியவனாகிறான்.

349. உரியஒரு மனிதனாய் உருவாகி
வந்துள்ள உயர்வை நாடி
அரியசெயல் பெரிதாற்றி அறிவாண்மை
அமைந்தவரின் அவனே யாண்டும்

பெரியவ ளாய் வருகின்றாள் பேருலகம்
அவளையே பேணி நின்று
பிரியமிகச் செய்துவரும் பெருமையெலாம்
அருமையிலே பிறக்கு மன்றே. (18)

சாதித்தருக்கு தீதே தரும்.

350. தானுயர்ந்த சாதியெனத் தருக்குமிகுந்து
எவ்வழியும் தனக்கே மேன்மை
வானுயர்ந்து வரவேண்டும் மற்றவர்கள்
மதிப்பின்றி மழுங்கி நின்று
கானுயர்ந்து வாழுகின்ற விலங்குகள்போல்
கழிகவெனக் களித்து நின்றாள்
ஊனமடைந் திழிவதல்லால் ஒருபலனும்
எதிர்காணாய் ஒழிந்தே போவாய். (19)

உயர்வு நிலை.

351. என்னவகை நிலையிலே இங்குநீ
உயர்ந்துள்ளாய் இதைநேர் எண்ணிச்
சின்னவகை நிலையாதும் சேராமல்
செம்மைநெறி தழுவிச் சீராய்
உன்னுயிர்போல் மன்னுயிரை உரிமையுடன்
ஓம்பிவரின் உயர்நலங்கள்
மன்னியுன்பால் பெருகிவரும் மாறானால்
பழிதுயரே மருவி மாள்வாய். (20)

### தீண்டாதார்.

352. தீண்டாதே எனமுன்னம் திமிரோடு
கூறிவந்தார் யாரோ அன்னார்
தீண்டாதா ராய்வந்து சிறுமைபல
சேர்ந்துள்ளார் செயலால் சொல்லால்
மூண்டவினை எவ்வழியும் மூளாமல்
மீளாதே முந்திச் செய்து
நீண்டவினைப் பயன்களையே நெடிதுயிர்கள்
நுகர்ந்துவரும் நிலைக நேர்ந்தே. (21)

### வினைப்பயன்.

353. எவ்வுயிரை எவ்வழியில் எவ்வகையில்
இகழ்ந்துநீ பழித்தாய் நேரே
அவ்வுயிராய் அவ்வழியில் அவ்வகையில்
அவலம்நீ அடைவா யந்தோ
வெவ்வியதீ வினைப்பயனை வேதாவும்
விலக்கரிதே வீணே துன்பம்
வவ்வியுனை வதைபுரிய வழிகோலி
அழியாதே வளமாய் வாழ்க. (22)

### மதிப்பு நிலை.

354. என்னகலை கற்றாலும் எவ்வளவு
பயின்றாலும் இதயம் தூய்மை
மன்னிவரும் அவ்வளவே மதிப்புநிலை
வளர்ந்துவரும் மகிமை எல்லாம்

உன்னிவரும் மனநலத்தால் உதயமாய்
ஓங்கிவரும் உண்மை ஓர்ந்தே
உன்னுடைய உள்ளத்தை உயர்புனித
மாக்கிநீ உயர்ந்து கொள்க. (23)

விடத்தை உண்ணுதே.

355. எண்ணுகின்ருய் தீமைஎனின் இடரான
கொடுவிடத்தை ஈன மாக
உண்ணுகின்ருய் ஐயகோ உறுவதனை
உணராதுன் உயிர்க்கே கேடு
பண்ணுகின்ருய் யாண்டுமே பழிதுயரம்
படியாமல் படித்த பேரே
நண்ணுகின்ற மகிமையுடன் நரர்பதியாய்
உயர்கின்ருர் நன்மை தோய்ந்தே. (24)

முடிவுகள்.

356. அன்புநலம் கனிந்தோங்கி ஆருயிர்பால்
ஆதரவாய் அருள்புரிந்தால்
இன்பநலம் சுரந்தோங்கி எவ்வழியும்
பொங்கிவரும்; இடர் புரிந்தால்
துன்பநிலை தொடர்பாக யாண்டுமே
தொடர்ந்துவரும்; சுகதுக் கங்கள்
முன்புநீ செய்துவைத்த முடிவுகளே
முடிவறிந்து முதன்மை தேர்க. (25)

சீவ தயை.

357. பிறவுயிரைத் தன்னுயிர்போல் பேணிவரும்
பெரியவனைப் பெருநீர் வையம்
உறவுரிமை யுடன்போற்றும் உயர்நலங்கள்
அவனெதிரே ஓங்கி நிற்கும்
மறமுடைய விலங்குகளும் மாதாஎன்று
அவனைநேர் வணங்கி வாழ்த்தும்
அறமுடைமை அருளுடைமை யாவுமவன்
உடைமைகளாம் ஆய்ந்து கொள்க. (26)

சித்த சுத்தி.

358. உள்ளத்தைத் தூய்மையா உயர்த்திவரு
கின்றவனே உயர்ந்த இன்ப
வெள்ளத்தை அடைகின்ற மேலோனாய்
எவ்வழியும் மேவு கின்றான்;
கள்ளத்தை வஞ்சத்தைக் கபடத்தைக்
கலந்துவரின் கடையன் ஆகிப்
பள்ளத்தை அடைகின்றான் பழிதுயரே
படிந்திழிந்து பாழா கின்றான். (27)

இருமையும் பெருமை.

359. பெருமையும் சிறுமையும் பேணி நீசெயும்
கருமமே மருமமாக் காட்டும் கண்டுனே
அருமைநன் னீர்மைகள் அமையின் அவ்வழி
இருமையும் பெருமையாய் இன்பம் எய்துமே. (28)

# 13. பொருளின் மருள்.

## பொருள் நிலை.

360. அருளுடைமை இருந்தாலும் அரியபல
கலைஞானம் அமைந்து நின்ற
தெருளுடைமை இருந்தாலும் சிறந்தபெருங்
குணநலங்கள் செறிந்துயர்ந்த
சுருளுடைமை யிருந்தாலும் சுருதிநடை
யிருந்தாலும் சுமுக மான
பொருளுடைமை யில்லையெனில் யாவுமே
பொலிவிழந்து போகு மன்றே (1)

## பொருளை நல்வழியில் ஈட்டுக.

361. பொன்னினால் எல்லாமே பொலிந்துவரும்
ஆனாலும் அந்தப் பொன்னை
நன்னயமாம் நெறிகளிலே நலம்புரிந்து
நயமாக ஈட்ட வேண்டும்
இன்னலுறு வழிகளிலே இடராக
ஈட்டினால் இழிவே செய்து
பன்னரிய துயராற்றிப் பழிநிறுத்தி
அதுவெளியே பறந்து போமே. (2)

## தேக யாத்திரை.

362. தேகத்தின் யாத்திரைக்குச் சிறிதுபொருள்
தேவையே தெளிவு குன்றி
மோகத்தை மிகஅடைந்து முதலடைய
மூளுவது மூடம் ஆகும்

தாகத்தைத் தீர்த்தற்குத் தண்ணீர்போல்
பொருளளவைச் சார்ந்து காண்க
போகத்தை யூட்டுவது புண்ணியமே
அதைஎண்ணிப் போற்றிக் கொள்க. (3)

பேராசை.

363. தொட்டதெல்லாம் பொன்னுக வேண்டுமெனக்
கடவுளைமுன் தொழுது வேண்டி
இட்டமுடன் சித்திபெற்ருன் இருங்களிப்பால்
துள்ளிவந்தான் எல்லாம் தொட்டான்
ஒட்டிநின்ற யாவுமே பொன்னுக
உறுபசியால் உள்ளுடைந்து
பட்டினியால் பதைத்திறந்தான் படுகேடு
தெரியாமல் பட்டான் அந்தோ. (4)

இலர் பலர்.

364. பொருளுடையார் சிலராகப் பொருளில்லார்
பலராகிப் பூமி எங்கும்
மருளுடைய ராய்மறுகி வன்பாடு
பட்டுவரும் மரபை நோக்கி
அருளுடைய வள்ளுவனர் அதற்குரைத்த
பதில்மொழியை ஆய்ந்துணர்ந்து
தெருளுடைய ராகாமல் இருளுடைய
ராயிழிதல் தீமை அம்மா. (5)

சேத்த பிணம்.

365. ஒத்தகுலத் துதித்தாலும் உயர்குணங்கள்
இருந்தாலும் உடைமை இன்றேல்
செத்தபிணத் திற்கடையாம் என்றுமுன்னோர்
செப்பிநின்றார் செல்வம் ஒன்றே
இத்தரையின் வாழ்வினுக்கோர் இன்னுயிராய்
உள்ளமையால் யாரும் பேணி
வைத்ததனை வருகின்றார் வரவறியார்
வைகின்றார் வருவ தென்னே. (6)

எளியரை இகழாதே.

366. ஏழைகள் என்று இரங்காமல் செல்வமுள்ளார்
இகழுகின்றார் இல்லார் நேரே
கோழைகள்வெங் கொள்ளையர்கள் கொடியவஞ்சர்
குடிகேடு செய்யும் பொல்லாப்
பீழைகள் என்று அன்னவரைப் பிழைபேசி
ஏசுகின்றார் பேச்சும் ஏச்சும்
வாழையடி வாழையாய் வந்துவந்து
வன்பழியுள் வளர்ந்த வன்றே. (7)

ஒரு கோடி உள்ளது.

367. கையிலே பலகோடி காணுமல்
போனாலும் கடைநாள் அன்று
மெய்யிலே ஒருகோடி மெய்யாக
மேவியுள்ளீர் வெறிமீக் கொண்டு

பொய்யிலே மிகஓடிப் புலையாடிப்
பொருள்தேடிப் புன்மை மண்டிப்
பையிலே பணம்எண்ணிப் படுபிணமாய்ப்
பின்எண்ணப் படுகின் றீரே. (8)

## இரண்டு கண்கள்.

368. மண்ணுலகில் மருவியுள்ள மனிதஇனம்
மதியடைந்து மதிப்பாய் வாழ
எண்ணிரண்டு கண்களாய் இனியகல்வி
செல்வங்கள் எழில்செய் துள்ள
விண்ணிரண்டு கதிர்மதிபோல் விளங்கியுள
அவ்விழிகள் வியனுக் காணின்
பண்ணிரண்டு புண்ணியங்கள் பரந்துவந்து
பேரின்பம் பயக்கு மன்றே. (9)

## செல்வ நிலை.

369. பெருஞ்செல்வன் எனஒருவன் பெருகிஎழின்
ஆயிரம்பேர் பெற்றிருந்த
அருஞ்செல்வம் இழந்தயலே அடர்வறிஞர்
எனஅமர்வார்; அறிஞன் ஆகி
வருங்கல்வி யாளன்என ஒருவன்வரின்
அறிஞர்பலர் வளர்ந்து நீள்வார்
இருஞ்செல்வ நிலையுமுயர் இனியகல்வி
இயல்புமிங்ஙன் இசைந்த அம்மா! (10)

## கல்வியே செல்வம்.

370. உள்ளத்தே நீங்காத உயர்கல்வி
யுடையவர்கள் ஒளிமிகுந்த
வெள்ளைத்தா யருளுடைய மேலோர்கள்
ஆதலினல் வேந்தர் எல்லாம்
கொள்ளத்தான் குறையாத செல்வரெனக்
கொண்டாடிக் குலாவி நின்ருர்
பள்ளத்தே யுள்ளவர்கள் பரத்திலுள்ளார்
தமைப்போற்றல் பயனு மன்ரே. (11)

## மருளுடைமை

371. தெருளுடைய மதியுடையார் செவ்விதாச்
சொன்னுலும் செவிஏற்று அன்பாய்
அருளுடைய ராயிரங்கி அறம்புரியார்
அவம்புரியும் அறிவை யார்தம்
மருளுடைய மொழிகேட்டு மையலே
மண்டிமறம் புரிவார் அந்தோ
இருளுடைய உலகமிதில் பொருளுடையார்
உய்யுநாள் என்ரே அம்மா! (12)

## கோடிக்கு ஒருவன்

372. ஒருகோடி மக்களுள்ளே ஒருவனே
வள்ளலென உதய மாகி
அருகோடும் உயிர்களுக்கோர் ஆதவன்போல்
அருட்சோதி வீசி ஓங்கித்

திருகோடும் உலகிலருள் செய்வனெனச்
சீருடையார் செப்பி நின்றார்
வருகோடிக் கொருவராய் நாற்பதுபேர்
எங்குள்ளார் வழுத்து வாயே. (13)

### இரவலர் அலமரல்.

373. உண்மையாய் உளம்உருகி உவந்தளிக்கும்
வள்ளலைஇவ் வுலக மெங்கும்
ஒண்மையாய் நாடினேன் ஒருவரையும்
காண்கிலேன் உயிர்போ னாலும்
எண்மையாய் எவரிடமும் ஏற்காதே
எனமறைமுன் இயம்பி நின்றும்
தண்மையாய் இரவலர்கள் தாழ்ந்திங்கே
உழல்கின்றார் தவறாய் அம்மா. (14)

### இருத்தலும் இறத்தலும்.

374. ஈயாத புல்லரிங்கே இருந்தாலும்
செத்தாலும் எமக்கென் என்று
வாயார ஒருபுலவன் வயிறெரிந்து
பாடினான் வண்மை யாளர்
தாயாகி எவருக்கும் தமராவர்
படுலோபர் தரணிக் கென்றும்
நோயாவர் ஆதலினப் பேயாரை
வெறுத்துயிர்கள் நொடிக்கு மன்றே. (15)

# 14. காலத்தின் கதி.

காலவேற்றுமை.

375. காலத்தின் மாறுதலால் கணக்கரிய
மாறுதல்கள் கலித்தெழுந்து
ஞாலத்தில் எங்கணுமே நாடகமாய்
நிலவுகின்ற நரர்தம் வாழ்வின்
மூலத்தை முன்னோர்ந்து முன்னோடு
பின்னோடு முழுதும் காணின்
சீலத்தால் உயர்ந்தவரே தேசடைந்து
தெய்வநிலை சேர்ந்து நின்றார். (1)

ஞாலத்தை ஆட்டுவது.

376. ஆலத்தை அமிர்தமென அரியபேர்
அமுதத்தை ஆலம் என்னக்
காலத்தின் கதிவேகம் கடிதாக
மாற்றியே காட்டி என்றும்
ஞாலத்தை ஆட்டிவரும் நயனுணரின்
அதனுடைய நடையும் போக்கும்
மூலத்தின் முடிவுகளும் முன்னெதிரே
தெளிவாக முழங்கு மன்றே. (2)

ஆங்கால நிலை.

377. ஆங்காலம் வந்ததெனின் அறிவுகெட்ட
மடையருமே அரச ராகி
ஈங்காரே எமக்குநிகர் எனக்களித்துத்
திரிவார்கள் இசையழிந்து

போங்காலம் புகுந்ததெனில் புவியாண்ட
மன்னவரும் புறம் ஒதுங்கிப்
பாங்காரும் பாராமல் பரிசழிந்து
பதைப்பார்கள் பரிவு கூர்ந்தே. (3)

பூலோக விநோதங்கள்.

378. மேலான வேந்தருமே மெலியவராய்
இழிந்தழிவார் மிகவும் கீழாய்க்
காலோடி அலைந்தவரும் காவல்புரி
மன்னவராய்க் களித்து வாழ்வார்
ஏலாத அதிசயங்கள் எவ்வளவோ
எதிர்காண இசைத்து நீட்டிப்
பூலோக விநோதங்கள் புரிகின்ற
காலத்தின் புதுமை என்னே! (4)

கால சக்கரம்.

379. காலத்தை அளவுசெய்து காட்டிவரு
கதிரவனும் கரந்து நிற்க
ஞாலத்தை இருள்மூட நரர்களெல்லாம்
கண்மூடி நாளும் துஞ்சி
மேலொத்த படிவிழித்து வினைபுரிந்து
வருகின்ற விதத்தை நோக்கிச்
சாலத்தின் சக்கரமாக் காலத்தைச்
சான்றோர்கள் சாற்றி நின்றார். (5)

காலச் சுழல்.

380. இறந்தவரை எண்ணிநொந்த துக்கங்கள்
இல்லாமல் இரிந்து நீங்கப்
பிறந்தவர்கள் பெருகிவந்து பெரியோராய்
மேலோங்கிப் பெருமை காண,
சிறந்ததவ முடையவர்கள் தினங்கழிய
மனங்கனிந்து தெய்வம் சேர
அறந்தழுவி வந்தவர்கள் அமரராய்
வாழ்ந்துவர ஆக்கும் காலம். (6)

காலத்தின் செயல்.

381. ஈரேழு வருடங்கள் இராமபிரான்
தனைவெளியே ஈர்த்து நின்று
நீரேழு கடல்புடைசூழ் நிலவுலகும்
வானுலகும் நேர்ந்து கொண்டு
பாரேழும் பணிந்தடங்க ஆண்டுவந்த
ல்
காரேழு மழைஎன்னக் கணைகள்எய்வித்
தழித்ததிந்தக் கால மன்றோ. (7)

கணமும் பிணமும்.

382. கணம்ஒன்று கழிதோறும் கருதரிய
உயிர்வாழ்வின் கணக்கும் குன்றி
மணமின்றிக் கழிந்தொழியும் மருமத்தை
யுணராமல் மகிழ்ச்சி கூர்ந்து

பணமென்றும் பனிசென்றும் பாருலகில்
யாவருமே பறந்து நின்று
பிணம்என்று வீழ்ந்தழிந்து பின்மறைந்து
போகின்றார் பெருமை என்னே. (8)

கோடிகோடுத்தாலும் கோள்ளமுடியாது.

383. ஒருகோடி பொன்தரினும் ஒருகணமும்
உதவாமல் உடனே காலன்
அருகோடி உயிர்பருகி அயலோடிப்
போகின்றான் அதை யறிந்தும்
வருகோடிக்கு ஒருவனுமே வந்தஇந்த
உயிர்க்குறுதி வரைந்து காணான்
இருகோடி மையலிலே இருண்டுமருண்
டிறக்கின்றான் இருப்பென் அம்மா! (9)

உரியபயன் உறுக.

384. பிறந்துவந்த சீவரெல்லாம் பேருலகில்
எவ்வழியும் பெருகி நின்று
சிறந்துயர்ந்து வந்தாலும் செத்தொழிந்து
போவதையே செயலில் கண்டோம்
இறந்தொழிந்து போகுமுன்னே எடுத்துவந்த
இப்பிறவிக் குரிமை யாக
சிறந்தெரிந்த பயனடைந்தான் நித்தியமாய்
என்றுமே நிலைத்து நின்றான். (10)

அரிய விலையுடையது.

385. அரியவிலை மருவியுள்ள அணிமணிகள்
எவற்றினுமே அருமை யான
பெரியவிலை மருவியது காலமே
ஆதலினால் அதனைப் பேணி
உரியபொழுது ஒருசிறிதும் பழுதாக
ஒழியாமல் உயர்ந்த மேன்மை
தெரியவினை செய்துவரின் தெய்வமெதிர்
சேரவரும் தெளிந்து வந்தே. (11)

காலத்தின் வலி.

386. முடிவேந்தர் எவ்வளவோ கோடிபேர்
அடியோடு முடிந்து போனார்;
படியோர்கள் தொழுதுவரப் பரந்திருந்த
பெரியோரும் பறந்து சென்றார்;
நெடியோனும் பிரமருமே காலத்தின்
வசமாகி நின்றார்; என்றால்
கடியேறுங் காலத்தின் பெருமையெவர்
காணவல்லார் கடிது காண்க. (12)

நாளும் சாவு.

387. நாள்ஒன்று கழிதோறும் நமக்குவட்டி
வருமென்று நசைமீக் கூர்வார்
ஆள்என்று வந்தவர்தம் ஆயுள்நாள்
அழிவதனை அறியார் அந்தோ

வாள்என்று வந்தஅந்த நாள்என்னும்
கூற்றுவனை வணங்கி வாழ்த்திக்
கேள்என்று நிற்கின்றார் கெட்டுநிதம்
சாகின்றார் கேளார் என்னே. (13)

அழிவு நிலைகளை அறிக.

388. கண்எதிரே காணுகின்ற காட்சியெல்லாம்
காணாமல் கடிது நீங்கி
விண்எதிரே தோன்றுகின்ற வில்என்ன
மின்என்ன விளிந்தொழிந்து
மண்எதிரே மறைகின்ற மாயங்கள்
பலகண்டும் மாய்கின் றோம்என்று
எண்எதிரே எண்ணாமல் எண்ணிறந்த
எண்ணிஎண்ணி இறக்கின் றாரே. (14)

காலகாலனைக் கருது.

389. கருங்காலன் தனையுதைத்த செங்காலன்
தனைநினைந்து கதி காணாமல்
மருங்கால விழிமடவார் மய்யலிலே
மதியழிந்து மயங்கி வீழ்ந்து
வருங்கால வரவெல்லாம் வளமாக
உளம்நினைந்து வரவொன் றின்றிப்
பொருங்காலன் எதிர்வரவே போங்காலம்
எனஒழிந்து போகின் றாரே. (15)



# 15. சுதந்திரம்.

## உண்மையான சுதந்திரன்.

390. ஆண்டவனே சுதந்திரவான் அவன்ஒருவன்
தனக்கன்றி யார்க்கும் இங்கே
நீண்டசுதந் திரமில்லை நெஞ்சுநிலை
குலையாமல் நேர்மை யோடு
பூண்டபெருங் கடமைகளைப் போதமுடன்
புரிந்தெவரும் புதுமை காண
வேண்டியிதம் செய்துவரின் விழுமியமெய்ச்
சுதந்திரராய் விளங்க லாமே. (1)

## சுயம்பு நிலை.

391. சுதந்திரம்என் மொழியிலே சுயம்புநிலை
யுள்ளதது சோதி வானம்
நிதம்திறந்து வருகின்ற நெடியகதி
ரவன்ஒளிபோல் நேரே வீசிப்
புதைந்திருந்த புலையிருளைப் புறம்போக்கி
அறம்தூக்கிப் போதம் காட்டி
சிதைந்தழிந்த நிலைகளெலாம் செம்மைசெய்த
போதுதான் சீர்மை யாமால் (2)

## சுதந்திர வரவு.

392. உள்ளத்தில் நேர்மையின்றேல் ஒருகோடி
சுதந்திரங்கள் ஓடி வந்து
பள்ளத்தில் பாய்கின்ற வெள்ளம்போல்
பாய்ந்தாலும் பலனங் குண்டோ

கள்ளத்தில் இழிநெஞ்சம் கடுகளவு
சுகமேனும் காணாது அந்தோ
வெள்ளத்தில் நாய்நக்கி விழுங்கி
நின்றதுபோல் விளியு மன்றே. (3)

## கோமாளித்தனம்.

393. நாட்டிலே சுதந்தரங்கள் நாடுகின்றோம்
நமக்குள்ளே அடிமை யாகிக்
கோட்டிகொண்டு குலாவுகின்றோம் கோமாளித்
தனங்களெலாம் குதிகொண் டாட
வீட்டிலே பதுங்குகின்றோம் வெளியிலே
புலிகளென வீறு பேசிக்
காட்டிலே திரிகின்ற கடுகுள்ள
நரிகளாய்க் கழிகின் றோமே! (4)

## போகும்நிலை தெரிக.

394. கார்ஏறி நிலமீது கதிவேகம்
காண்கின்றோம் கலம்கைக் கொண்டு
நீர்ஏறிச் செல்கின்றோம் நெடுவானம்
யாண்டுமே நீண்டு தேரில்
ஏரோடு பறக்கின்றோம் இருந்தபடி
இருந்துபடி எங்கும் உள்ள
பேரோடு பேசுகின்றோம் போர்ந்துபோம்
நிலையறியோம் பேசல் என்னே? (5)

தருமசீலன்.

395. தன்னுயிரைப் புனிதமாத் தான்பேணி
வருகின்ற தரும சீலன்
பொன்னுயிராய்ப் பொலிகின்றான் பூமியிலோர்
தேவன்எனப் புதுமை எய்தி
இன்னுயிரின் இறைவனாய் எழில்கொண்டு
நிற்கின்றான் இன்பம் யாவும்
அன்னவன்முன் வருகின்ற அவனேதான்
சுதந்திரவான் அறிக ஆய்ந்தே. (6)

சொன்னபடி செய்.

396. தாழ்ந்தாரை உயர்த்துவோம் தக்கவரைப்
போற்றுவோம் தரணி தன்னில்
வீழ்ந்தாரை மேலேற்றி வியனான
மேன்மையொடு மேவச் செய்வோம்
சூழ்ந்தார்கள் எல்லாரும் சுகமாகச்
சுகித்திருக்கச் சூழ்ந்து செய்வோம்
ஆழ்ந்தாய தலைமைவரின் ஆம்என்பார்
வந்திடினோ யாதும் செய்யார். (7)

தலைமை நிலை.

397. பொய்யேதும் புகலாத புனிதனே
சுதந்தரத்தின் பூரணத்தை
மெய்யாக மேவுகின்றான்; மேலான
மேன்மையெல்லாம் விரைந்து வந்து

ஐயாவுன் அடைக்கலமென் றவனிடமே
வந்தடையும் அரிய தெய்வம்
பொய்யாமை ஆதலினால் அதையுடையார்
உயர்தலைமை பூண்டு நின்றார். (8)

மாறுபாடுகள்.

398. உண்ணவெனின் உணவில்லை உடுக்கஎனின்
உடையில்லை உழைப்புக் கேற்ற
வண்ணமோ கூலியில்லை என்னவே
ஒருகூட்டம் வயிறு காயப்
பண்ணைபண்ணை யாகவே பணத்தாலும்
பாலுணவும் பவிசும் ஆகிக்
கண்ணகன்ற செருக்கோடு களியாட்டம்
ஒருகூட்டம் காட்டல் என்னே! (9)

தலைமை வாழ்வு.

399. எல்லாரும் சுகமடைய எவ்வுயிரும்
இன்பமுற இரங்கி எண்ணிப்
பொல்லாத புலைநிலைகள் எவ்வழியும்
யாதுமே புகாமல் போக்கி
நல்லாராய் வாழ்ந்தவரின் நாட்டிலே
சுதந்திரத்தின் நன்மை ஓங்கி
வல்லாராய் வாழவரும் வாழ்வுநலம்
மனநலத்தால் வளரு மன்றே. (10)

அடிமை வாழ்வு.

400. அடிமைவாழ்வு எவ்வழியும் யாண்டுமே
அவலமாம்; அடிமை யில்லாக்
குடிமையே உயர்வான சுதந்தரத்தின்
குலவாழ்வாம்; குணங்கள் ஓங்கிப்
படிமையுளம் படிந்தவரின் பாரரசாய்
வாழலாம்; பழியுள் வீழ்ந்து
மடிமையுறின் எவருமே மாருத
அடிமைகளாய் மறுகி மாள்வார்.

செயல்வழி உயர்வு

401. எவனுடைய எண்ணங்கள் இனியனவாய்
இயங்குமோ அவனே எங்கும்
தவனுடைய தகவமைந்து தனிநிலையில்
உயர்கின்ருன் தாழ்வும் வாழ்வும்
அவனவன்றன் செயலியலால் யாண்டுமே
அமைந்துவரும் அயலொன் றின்றி
சிவனுடைய ஆணையிது தெளிந்தாயேல்
சுதந்தரத்தின் சீர்மை தேர்வாய். (12)

பொய் பேசல் நீசம்.

402. பொய்பேசல் நீசமாம் புலையான
அதைஒழிந்து புனித மான
மெய்பேசி வரினவனே மேலான
தலைமகனாய் விளங்கி நிற்பன்;

தெய்வீக ஒளிகளவன் செயலியலில்
திகழ்ந்துலவும் சீர்த்தி யின்பம்
மெய்வழியே மேவிவரும்; பொய்வழியே
புலைத்துயர்கள் பொங்கு மன்றே. (13)

## அடிமையின் அடையாளம்.

403. அச்சமே அடிமைகளின் அறிகுறியாம்
யாண்டுமே அந்த அச்சம்
கொச்சையுறு நிலைகளால் கோதான
புலைகளால் கூடிவந்து
பிச்சையுறும் இழிவுகளில் மனிதரைக்கீழ்
அழுத்தியே பெருகி நிற்கும்
உச்சமுறும் சுதந்திரத்தை ஒருபோதும்
அவரறியார் உயர்வு காணார். (14)

## மேலான கதி.

404. உள்ளத்தை மாசடையா துரிமையுடன்
பேணிவந்தால் உயர்ந்த இன்ப
வெள்ளத்தை அவனடைந்து மேலான
கதிநிலையை மேவு கின்றான்
கள்ளத்தால் வஞ்சத்தால் கபடத்தால்
நெஞ்சத்தைக் கறைப் படுத்தின்
எள்ளத்தான் படுகின்றான் இழிநரகே
அடைகின்றான் ஈனம் அந்தோ. (15)

### வையம் வானமாம்

405. பொய்கூறிப் புறங்கூறிப் புலையாடிப்
போகாமல் புனித மாக
மெய்கூறி அருள்புரிந்து மேலோராய்
ஒழுகிவரின் விரிநீர் ஞாலம்
தெய்விக நிலையமாய்த் தேசுமிகுந்து
இன்பமெலாம் சேர நல்கி
வையமதில் ஓர்சுவர்க்கம் வந்ததென
வயங்குமே வாய்ந்து காண்மின்! (16)

### தெய்வத்தேசு.

406. ஓதியுணர் கலையறிவும் உறுதியுணர்
தலையறிவும் ஒருங்கு வாய்ந்து
நீதுபடி யாதபடி சீர்மையுடன்
சேர்ந்துவந்தால் தெய்வத் தேசு
போதுகழி யாதபடி பொங்கிநிற்கும்
அந்தஇனம் பொருந்தி வாழும்
நீதியுயர் நாடெதுவோ அந்நாடு
தலைமையாய் நிலவு மன்றே. (17)

### மகனை மாடாக்காதே.

407. மாட்டோடு மாடாக உன்மகனை
மடக்கிவைத்தால் மாட்டுப் பாடுன்
வீட்டோடு பெருகிவரும் வியன்பயனை
வேறேநீ வெளியே காணாய்

பாட்டோடு பாடாகப் படிக்கவைத்தால்
அவனுயர்ந்து பண்பு வாய்ந்து
தேட்டோடு செழித்திந்தத் தேசத்தின்
சுதந்திரத்தைத் தேர்வா னன்றே. (18)

இன்ப வாழ்வு.

408. அயல்ஏவ வாழாமல் ஆள்வினையால்
வாழுகின்ற அந்த வாழ்வே
இயல்பான சுதந்திரத்தின் இனிமைகனிந்
திசைந்தெழுந்த இன்ப வாழ்வாம்;
உயர்வான உரிமையுடன் உவகையாய்
வாழ்தலால் உம்ப ரெல்லாம்
வியனுன புகழோடு மேலான
நிலைமைகளில் விளங்கி யுள்ளார். (19)

சுதந்திர நிலைகள்.

409. சீவனுயர் சுதந்திரமும் சீவியத்தின்
சுதந்திரமும் சேர வேண்டின்
பாவவினை சிறிதேனும் படியாமல்
எவ்வழியும் பண்பு தோய்ந்து
காவலுடன் உனைக்காத்துக் கருணையுடன்
கண்ணியமாக் கனிந்து வாழ்க
தேவனுயர் திருவாழ்வாய் அவ்வாழ்வு
சீர்மையொடு சிறக்கு மன்றே. (20)

---

# 16. ஆட்சியின் அமைதி.

முடிகளின் முடிவு.

410. இந்நாட்டை முன்னாளில் ஆண்டுவந்த
மன்னவர்கள் இகல்மீக் கொண்டு
தந்நாட்டம் தெரியாமல் தவறுபல
புரிந்ததனால் தளர்ந்து நொந்து
மூந்நாட்டு வேந்தர்களும் முடியிழந்து
முடிவானார் முடிவில் நாடும்
எந்நாட்டோ இருந்துவந்த அயலவர்தம்
கைவசமா யிசைந்த தம்மா. (1)

காலப்போக்கு.

411. பண்டங்கள் எதிர்மாற்றிப் பாடுபட்டுப்
பிழைக்கவே பரிந்து நாடிக்
கண்டங்கள் பலகடந்து காதலுடன்
வந்தவர்கள் காலப் போக்கில்
தண்டங்கள் இடுகின்ற தனிஅரசர்
ஆகவே தழைக்க நேர்ந்தார்
தெண்டங்கள் இட்டுமே தேசமக்கள்
அடிமைகளாய்த் தேர்ந்தார் சேர்ந்தே. (2)

வெள்ளையர் ஏறியது.

412. வேற்றுமொழி உள்ளேற வெள்ளையர்கள்
மேலேற வீரம் குன்றி
மாற்றுமொழி ஒன்றேனும் வாய்திறந்து
கூறாமல் மானம் கெட்டுப்

போற்றுமொழி யாளராய் எவ்வழியும்
புலைபேசிப் புன்மை மண்டி
ஏற்றுசுமை சுமந்துமே எங்கணுமே
வெங்கயமை ஏற நேர்ந்தார். (3)

வீரபாண்டியன் சீறியது.

413. பாஞ்சாலங் குறிச்சி * மன்னன் ஒருவனே
பணியாமல் பகைத் தெதிர்ந்து
தீஞ்சாலி விளைகின்ற திருவுடைய
இந்நாட்டில் தேச ஆட்சி
நாஞ்சாக நேர்ந்தாலும் அயலாரை
அரசிங்கே நாட்ட ஒட்டேன்
போஞ்சாக நேராதீர் என்றெதிரே
முரசறைந்து பொருதான் அன்றே. (4)

சதிபுரிந்து சாய்த்தது.

414. அத்தகைய குலவீரன் இந்நாட்டு
மானத்தை ஆண்மை ஆக
எத்தகைய நிலைகளினும் எதிர்விளக்கி
முதிர்போரை ஏன்று செய்தான்

* பாஞ்சாலங்குறிச்சி என்பது திருநெல்வேலி எல்லையில் உள்ளது. வீரபாண்டியக் கட்டபொம்மு என்னும் வீர அரசனுக்கு இராசதானியாயிருந்தது. அதிலிருந்து தான் ஆங்கிலேயரை எதிர்த்து அரும்போர் புரிந்தான். அந்தச் சுத்த வீரனுடைய சுதந்திர உணர்ச்சி எத்தகைய நிலையிலும் இசைமிகப் பெற்றது. பாரத நாடு அம்மன்னனைப் பார்த்து மகிழ்ந்துள்ளது.

ஒத்தசுய நலங்கருதி உள்நாட்டில்
சிலகயவர் உளவு கூறி
வைத்தசதி புரியவே வந்தகுழு
வென்றரசாய் வளர்ந்த தம்மா! (5)

ஒளி இழந்து நின்றது.

415. புண்ணியத்தின் விளைநிலமாய்ப் போதத்தின்
புகலிடமாய்ப் புனித மான
கண்ணியத்தின் உறைவிடமாய்க் கலைஞான
நிலையமாய்க் கனிந்து எந்நாடும்
எண்ணிஎதிர் தொழுநின்ற இந்தியநாடு
அயலாட்சி இயல்பால் நைந்து
திண்ணியநல் ஒளியிழந்து தேசழிந்து
நின்றுளதே தெளிவ தென்றே? (6)

அவமானம் அடைந்தது.

416. அன்னியர்தம் ஆட்சியினல் அவமானம்
அடைந்திருந்தோம் அவங்கள் நீங்கிப்
பொன்னியலில் பொருளியலில் புலத்துறையில்
கலைத்திறனில் போரில் நீரில்
மன்னியெழு வாணிபத்தில் மதியுழவில்
தலைநிமிர்ந்து மாட்சி காண
உன்னிமுயன்று எழுகின்றேம் ஒளிகாண
வருகின்றேம் உறுதி கூர்ந்தே. (7)

அடிமைத்தனம் நீங்கியது.

417. வெள்ளையர்தம் ஆளுகையால் மேலான
பலன்களைநாம் மேவி யுள்ளோம்;
கொள்ளைகொண்டு போகின்றார் குடிகேடு
செய்கின்றார் குனிந்த வாழ்தல்
எள்ளலொடும் இழிவாகும் என்பதுண்மை
ஆனாலும் இந்த நாட்டின்
பிள்ளைகளாய்ப் பிறந்துள்ள பெரியவர்கள்
பேணாரேல் பிழையாம் அந்தோ! (8)

பேய்வாய்ப்பிள்ளை தாய்வாய் மீண்டது.

418. பேய்வாயில் அகப்பட்ட பிள்ளைபோல்
நெடுங்காலம் பிறர்கைப் பட்டு
நோய்வாயில் நொந்திருந்த இந்தியா
இப்பொழுது நோன்மை யாகத்
தாய்வாயில் மீண்டதுபோல் தனியாக
வந்துளது தக்கோர் சூழ்ந்தே
ஆய்வோடு பேணிவரின் ஆனந்தம்
பெருகிவரும் யாண்டும் ஆர்ந்தே. (9)

காப்பது கடவுளே.

419. எவ்வுலகும் எவ்வுயிரும் இறைவனே
காக்கின்றான் எனினும் அந்தத்
திவ்வியஒர் ஒளிவழியே வெளியான
திருவுடைய மன்னர் நேரே

இவ்வுலகை எவ்வழியும் இனிதாகப்
பேணிவரும் இறைமை கொண்டார்
அவ்வியல்பார் வழிநின்றே அவனியெல்லாம்
விழிகாணும் அகம் மகிழ்ந்தே. (10)

கப்பல் ஓட்டம்.

420. அலைகடலில் ஓடுகின்ற அருங்கலத்தைப்
பெருங்கவனம் ஆக ஆய்ந்து
நிலைமையுடன் ஓட்டுகின்ற நெறியுடையான்
இல்லையெனின் நிலைமை என்னும்?
உலகநிலை தனிலுயர்ந்த அரசென்னும்
பெருங்கலத்தை உறுதி ஓர்ந்து
தலைமையுடன் நடத்தாத தனித்தலைவன்
இல்லையெனில் தாழ்ந்து போமே. (11)

கண்ணுக்கு இமை மண்ணுக்கு அரசு.

421. கண்ணை இமை காப்பதுபோல் காசினியில்
யாவரையும் கருதி நோக்கி
மண்ணையினி தாகமுன்னம் மன்னர்பலர்
காத்துவந்தார்; மகிமை வாய்ந்த
புண்ணியமா பூமிஎனும் இந்தியா
இப்பொழுது பொலிவு குன்றி
எண்ணியுயர் ஒளியின்றி இருளடர்ந்து
படர்படிந்திங் கிருப்ப தென்னே! (12)

நவகாளி நிகழ்ச்சிகள்.

422. இந்நாளில் இந்நாட்டில் எங்கணுமே
பகைதீமை எழுந்து பொங்கி
எந்நாளும் எந்நாட்டும் யாண்டுமே
காணுத இடர்கள் ஓங்கி
அந்நாளில் வாழ்ந்தவர்கள் யாருமே
அறியாத அவங்கள் நேரே
நந்நாளில் காண்கின்ருேம் நலம்கண்டு
நாம்மகிழும் நாள்எந் நாளோ? (13)

தேசமக்கள் திகில்.

423. தாயிருக்க மனைவிஅழத் தனயர்களைக்
கொல்கின்ருர் ; தழுவி அன்பாய்ச்
சேயிருக்கத் தாயர்தமைச் சீறிவதை
செய்கின்ருர் ; தீமை பொங்கிப்
பேயிருக்கும் சுடுவனம்போல் நாடெங்கும்
படுகளமாய்ப் பெருகி அந்தோ
தீயிருக்கும் நெஞ்சோடு தேசமக்கள்
திரிகின்ருர் தீமை என்னே. (14)

கொடியரை அடியோடு ஒழி.

424. கொலையிலே கொடியவரைக் கொன்ருெழித்தல்
பைங்கூழ்க்குக் களைகளைந்து
நிலையிலே அதைவளர்க்கும் நீர்மைஎன
அரசுக்கு நேர்மை யாகத்

தலையிலே அமைந்திருக்கும் தனிநீதி
 தனையுணர்ந்து தறுகணோடு
புலையிலே புகுவாரை அடியோடு
 போக்காரேல் பூமி என்னும்? (15)

இராம நீதி.

425. நீதிக்கு நிலையமாய் நிறையருளுக்கு
 உறைவிடமாய் நேர்மை வாய்மை
போதிக்கும் தருமகுண புனிதனும்
 ரகுராமன் போர்வில் வாங்கிப்
பேதிக்கும் பொல்லாத அரக்கர்குலம்
 இல்லாமல் பேர்த் தெறிந்தான்
மாதிக்கும் புகழ்கின்ற மகிமையொடு
 நின்றுள்ளான் மன்னர் ஏறே. (16)

நல்லாரைப் பேணுக.

426. எல்லார்க்கும் ஒருபடியாய்க் கடவுளுமே
 கருணைசெய்யார்; எவர்க்கும் அன்னார்
செல்லாறும் செயல்இயலும் அயலளந்து
 தெளிவாகச் சீர்மை செய்வார்;
பொல்லாரைப் புலைஒடுக்கிப் புல்லியரைத்
 தலைஅடக்கிப் புனித மான
நல்லாரைப் பேணுதார் நாடாட்சி
 புரிவதெல்லாம் நாசம் ஆமே. (17)

பகையைக் கிள்ளி எறி.

427. எள்ளிவரு பகையினந்தான் இடையூறு
செய்யஎழின் எதிரே பாய்ந்து
கிள்ளிஎறிந் தவர்தலைகள் கீழுருளச்
செய்யாமல் கீழ்மை யாக
உள்ளமயர்ந்து அயல்ஒதுங்கி உறைந்திருந்தால்
அவ்வரசன் உரிமை பொன்றி
அள்ளுபழி யாளனாய் அவலமாய்
இழிந்துகழிந் தழிந்தே போவான். (18)

ஆதவன்.

428. ஒளிமிகுந்த ஆதவன்போல் உயர்அரச
குலத்தோன்றல் ஒருவன் செங்கோல்
அளிபுரிந்து வரின்எங்கும் களிசிறந்தே
உயிரினங்கள் அமர்ந்து வாழும்
வெளியெழுந்த வான்மீன்கள் போலவே
பலர்கூடி விளக்கி னாலும்
தெளிவமைந்த வாழ்வெங்கும் செழுமையுடன்
எங்குமே சேரா தன்றே. (19)

மன்னன் நிலை.

429. தன்னலமே எம்மருங்கும் தானெக்கும்
தறிதலைகள் தலைமை தாங்கின்
பன்னலமும் பாழாகும் பாராண்டும்
பட்டினியாய்ப் பதைக்க நேரும்

மன்னவர்தம் பெயரிலே மன்னுயிர்கள்
நன்னலங்கள் மருவச் செய்யும்
சின்னமுளது அன்னதின்றேல் என்னநிலை
யானாலும் சிறுமை யாமே. (20)

ஆட்சியின்மாட்சி.

430. ஆட்சிஎனும்சொல் உலகை ஆண்டுவரும்
அதிபரியல் ஆண்மை மேன்மை
காட்சியுற வந்துளது காண்பவர்கள்
யாவருமே கருதி ஓர்ந்து
மாட்சிநிலை தேர்ந்துகொள்வர் வையமெலாம்
உய்யும்வகை மனுமுன் செய்த
நீட்சிநிலை நேரறிந்து நீதிமுறை
செய்துவரின் நேராம் அன்றே. (21)

பலநலம் பெருகப் பண்புடன் ஆளுக.

431. செல்வவளம் செழித்துவரத் தேசம்எங்கும்
களித்துவரச் சீர்மை நீர்மை
பல்வழியும் பெருகிவரப் பலகலையும்
பரவிவரப் பண்பு மேன்மை
நல்வழியில் ஏறிவர நல்லோர்கள்
தேறிவர நமது முன்னோர்
தொல்வழியின் மனுநீதி துலங்கிவர
ஆட்சிமுறை தொடரின் நன்றே. (22)

மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி.

432. மன்னவன்தான் எப்படியோ அப்படியே
மன்னுயிர்கள் மருவி வாழும்
என்னஒரு முதுமொழிமுன் எழுந்ததுபரந்
துள்ளமையால் இந்த நாட்டில்
முன்னமிருந் தரசாண்ட முடிவேந்தர்
குடிமாந்தர் முறைமை யாவும்
இன்னபடி யிருந்திருக்கும் எனவுணர்ந்து
தெளிகின்ருேம் இறைமை கூர்ந்தே. (23)

மேருவும் நேருவும்.

433. இந்தநில மண்டலத்தின் இனியபேர்
அரணாக இமயம் என்னும்
அந்தமலை அமைந்திருக்கும் அமைதியையும்
அருமையையும் அறிந்து நாளும்
சிந்தைமகிழ்ந் துள்ளநாம் மேருவே
நேருவாய்த் திரண்டு வந்து
நந்தமக்குத் தலைமையாய் நலம்புரிந்து
நின்றுளதா நயந்து ளோமே. (24)

உள்ளம் திருந்துக.

434. நேருமுதல் நல்லோர்கள் சிலர்தலைமை
நிலவுதலால் நீர்மை யோடு
சீருடைய தனிவாழ்வு செழுமையுடன்
சேருமென்று சிந்தித் துள்ளோம்;

யாருதவி புரிந்தாலும் அவனியுள்ளார்
அகம்திருந்தி அமைந்தால் அன்றிப்
பேருவகை பெறலரிது பெற்றாலும்
பிழையாகிப் பிறழ்ந்து போமே. (25)

ஆதரவு புரிக.

435. நீதிமுறை நிலைகடந்து நெறிகேட
ராய்நிமிர்ந்து நேரே யார்க்கும்
கோதுபுரி கொடியவரை அடியோடு
களைந்தொழித்துக் குடிகள் தம்மை
ஆதிமனு முறைப்படிநின்று ஆதரித்து
வருபவனே அரசன் ஆவான்
ஓதியநன் னெறிபுரியான் ஊனமாய்
அரசை யிழந்தொழிந்து போமே. (26)

தாய்போல் பேணுக.

436. பிள்ளைகளைப் பேணுகின்ற பெற்றதாய்
என்னவே பெருநீர் வையம்
உள்ளவுயி ரினங்களைநேர் உரிமையுடன்
பேணிவரின் உவகை பொங்கித்
தள்ளரிய பெருநீதித் தனியிறைஎன்று
அவ்வரசைத் தழுவி வாழ்வார்
கொள்ளைகொள்ள நேர்ந்தாரேல் கொள்ளிவைக்க
எல்லாரும் கொதிப்பர் அன்றே. (27)

புலைபேசாமல் நலமே செய்க.

437. எல்லாரும் இன்பமுற இந்நாடு
நன்மையுற இதங்கள் ஓர்ந்து
நல்லார்கள் பலர்முயன்று நள்ளிரவும்
கண்விழித்து நாடி யுள்ளார்
பொல்லார்கள் சிலர்இடையே புலைபேசித்
தந்நலமே பொங்கி எங்கும்
வல்லார்கள் போல்செருக்கி வாதாடி
வருகின்றார் வருவ தென்னே. (28)

பண்பு படிக.

438. பண்புநலம் பலபடிந்து பல்லுயிர்கட்
கிதம்புரிந்து பாரின் சீரை
நண்புரிமை யோடாய்ந்து நாட்டுநலம்
எவ்வழியும் நயந்து நாடி
உண்பொருள்கள் உடைமுதலா உளபொருள்கள்
பெருகிவர உறுதி கூர்ந்து
விண்பொருள்கள் எண்பொருளா விரிந்ததென
விளைத்துவரின் மேன்மை யாமே. (29)

மனம் புனிதமாகுக.

439. மாந்தருளம் புனிதமாய் மருவிவரின்
மதிநலங்கள் மருவி ஓங்கிச்
சாந்தநிலை பெருகிவரும் சமதமங்கள்
தழுவிவரும் தரணி ஆளும்

வேந்தரெனத் தலைமையுறும் நிலைமைவரும்
விழுமியநன் னலங்கள் யாவும்
ஏந்தலொடும் எழுந்துவரும் இருமைநிலை
உயர்ந்துவரும் இன்பம் ஏய்ந்தே. (30)

உத்தமவுதவி.

440. கைமாறு கருதாமல் கதிரவனும்
கலைமதியும் காற்றும் வானும்
பெய்மாரி எனநின்று பேருலகம்
பேணிவரும் பெற்றி கண்டும்
மெய்மாறித் ததீசிசிபி மெய்யுதவி
செய்தநிலை மேலுணர்ந்தும்
பொய்மாறி உபகாரம் புனிதமாய்ப்
புரியாமல் போதல் என்னே? (31)

பாரததேவி.

441. எண்ணேழு தேசங்கள் எனமருவி
மன்னர்குழாம் இனிது பேண
விண்ணேழு புவனங்கள் விழிகளித்து
வியப்போடு விழைந்து காண
மண்ணேழு மண்டலங்கள் மனமகிழ்ந்து
புகழ்ந்துவர மகிமை தோய்ந்து
பண்ணேழும் பரவிவரப் பண்டிருந்த
பாரதத்தைப் பார்ப்ப தென்றோ. (32)

நல்ல அரசு.

442 நாளுமே குடிசனங்கள் நலமாக
வாழ்ந்துவர நன்கு நாடி
ஆளுகின்ற அவ்வரசே எவ்வழியும்
நல்லரசாம் அகில மெல்லாம்
நீளுகின்ற புகழோடு நித்தியமாய்
நிலைத்துவரும் நீதி யின்றேல்
மூளுகின்ற பழியோடு முடிவாகி
அடியோடு முடிந்து போமே. (33)

குடிமகிழக் கோன் உயர்வான்.

443. குடிமகிழ்ந்து வருகின்ற அளவுதான்
எவ்வழியும் கோன் உயர்ந்து
நெடியபெரும் புகழோடு நிலவிநேர்
வருகின்றான்; நிலைமை யெல்லாம்
படிபுரந்து வருகின்ற பான்மையிலே
பரந்துவரும் பண்பு தோய்ந்து
முடியரசும் குடியரசும் மனுநீதி
யுடன்நடந்து முதன்மை காண்க. (34)

மனு நீதி முறை.

444. எவ்வழியும் மாந்தரினம் இனியராய்
இயங்கிவர இறைமை தேர்ந்து
செவ்வழிகள் செய்துவரின் தேசமெங்கும்
செல்வவளம் சிறந்து பொங்கும்

அவ்வழியே மனுநீதி அரசுமுறை
செய்வதாம் அதனை ஓர்ந்து
வெவ்வழிகள் விலகியே விழுமியராய்
விதிமுறையே விளங்கி வாழ்க. (35)

### வேந்தர் வாழ்வு.

445. மாந்தரினம் மனமகிழ்ந்து வருகின்ற
அவ்வளவே மருவி நின்ற
வேந்தரினம் எவ்வழியும் வியனான
மேன்மைகளை மேவி வாழும்;
போந்தவுடல் சுகமாகப் புனிதமுடன்
பொலிந்துவரின் புகுந்த சீவன்
சாந்தமுடன் வாழ்ந்தினிய சால்புகளைத்
தோய்ந்துநலம் சாரு மன்றே. (36)

### நித்திய நினைவு.

446. சத்தியமும் தண்ணளியும் தருமகுண
நீர்மைகளும் தழுவிச் சித்த
சுத்தியுடன் தோய்ந்துவரு தூயவர்கள்
எவ்வழியும் தொடர்ந்து தோன்ற
எத்திசையும் இந்நாட்டின் இனியபேர்
இசைவளர எண்ணி வாழும்
உத்தமர்கள் பெருகிவர ஒருபரமன்
திருவடியை உளத்துள் வைப்பாம். (37)

---

# 17. காந்தி வழி.*

## கதிரவன் எழுந்தது.

447. காந்திஎனும் கதிரவன்தான் கதித்தெழுந்து
வந்தவுடன் கடல்சூழ் ஞாலம்
சாந்திஒளி வெளிவீசி எங்கணுமே
சமதமங்கள் தழைத்து நின்ற
ஏந்தியெழு புகழ்ஓங்கி இந்தியா
சுதந்தரத்தின் இனிமை கண்டு
வேந்தியல்கள் புரிந்துவர வெளிநாடும்
விழைந்துவர விளைந்த வன்றே. (1)

## ஒழுகி உயர்ந்தது.

448. சத்தியமே பேசுங்கள் தருமமே
செய்யுங்கள் தருக்கொன் றின்றி
எத்திசையும் எவ்வழியும் எவ்வுயிரும்
இன்பமுற இதமே நாடி
நித்தியமும் நியமமாய் நெறிமுறையே
ஒழுகுங்கள் நிமல ஞான
முத்திவரும் வழிஅதுவே எனஒழுகிக்
காந்திமகான் முதன்மை கொண்டார் (2)

## அருள் ஒளி.

449. பொறிவெறியில் வீழ்ந்திழிந்து புல்லியராய்ப்
போகாமல் புலனடக்கி
நெறிமுறையே வாழ்ந்திந்த நிலத்தவர்கள்
நிலையுயர்ந்து நிலவ நேரே

---

* திருச்சி அகில இந்திய ரேடியோவில் 2—10—54-ல் நடந்த காந்திஜயந்தி விழாவின் கவியரங்கத்தில் பாடியது.

அறிவறந்த மாதவர்கள் ஆதரவாய்
ஆண்டுவந்த அருளைப் பூண்டு
மறுவறநின் றொழுகியதால் காந்திவழி
அருள்ஒளியாய் வளர்ந்த தன்றே. (3)

சத்தியவான்.

450. சத்தியமே என்கடவுள் சத்தியமே
என்ஆவி தரும மான
சத்தியமே என்வாழ்வு சத்தியமே
என்உணவு சாந்தம் தோய்ந்த
சத்தியமே என்இருப்பென் றெவ்வழியும்
எந்நிலையும் தழுவி வாழ்ந்த
சத்தியவான் ஆதலினல் * சத்தன்எனக்
காந்திஎங்கும் தழைத்து நின்ருர். (4)

உலகத்தார் உள்ளத்தில் உள்ளது.

451. உள்ளத்தால் பொய்யாமல் ஒழுகிவரும்
விழுமியோன் உலகத் தார்தம்
உள்ளத்துள் எல்லாமே என்றுமே
நிலையாக உளனும் என்றே
உள்ளத்தால் பொய்யாத வள்ளுவனர்
உரைத்தபடி உலகத் துள்ளார்
உள்ளத்துள் எல்லாமே காந்தியுள்ளார்
உண்மைநிலை உணர்க ஓர்ந்தே (5)

---

* சத்தன் என்றது என்றும் நித்தியமாய் நிலைத்துள்ள பரமனை. சத்தியம் மனிதனைச் சத்தன் ஆக்குகிறது.

### கொல்லா விரதம்.

452. எவ்வுயிரும் கொல்லாமை எவ்வழியும்
பொய்யாமை என்னும் இந்தத்
திவ்வியநீர் மைகளிரண்டும் சேர்ந்தாரைத்
தேவரெனத் திகழச் செய்யும்
அவ்வுலகும் இவ்வுலகும் அவர்வசமாம்
எனஎவரும் அறியக் காட்டிச்
செவ்வியராய் ஒழுகிவந்த காந்திவழி
சாந்தியொளி திகழு மன்றே. (6)

### ஐம்பொறி இயக்கம்.

453. மெய்வாய்கண் மூக்குநா எனமெய்யில்
மேவியுள்ள மேன்மை வாய்ந்த
ஐவாயின் வழிமுறையே ஆருயிர்கள்
இயங்கிவரும் அமைதி நோக்கி
உய்வான நெறியாக்கி உறுபுலன்கள்
தமைஒடுக்கி உணர்வின் ஓங்கிச்
செய்தவமா ஒழுகிவந்த காந்திவழி
வாழ்ந்துவரின் தேவ ராவார். (7)

### நாவடக்கம்.

454. மனிதஇனம் உயர்ந்ததெல்லாம் வாய்பேசும்
வாய்ப்பொன்றால் மகிமை வாய்ந்த
புனிதன்என உயர்ந்துநீ புகழுடைய
வேண்டும்எனின் பொறிவாய் வந்த

இனியநா வினை அடக்கி எவ்வழியும்
மெய்பேசி இதமே செய்க
தனிமகிமை யுனைநாடி ஓடிவரும்
தாய்அடையும் சேய்போல் தாழ்ந்தே. (8)

புண்ணிய வரவு.

455. புலனடக்கி வாழ்ந்துவரின் புண்ணியங்கள்
ஓங்கிவரும்; புகழோடின்ப
நலனடக்கம் பெருகியுள நன்மையெலாம்
நாடிவந்து நயந்து நிற்கும்;
நிலனடக்கி மாவலிமுன் நெடியவனுய்
நின்றவனும் நேரே வந்து
பலனடக்கம் அருளவரும்; பாடறிந்து
பீடுறுக பணிவோ டோர்ந்தே. (9)

ஐம்புலன் அடங்கின் அகிலமும் அடங்கும்.

456. ஐம்புலன்கள் அடக்கிநின்ருன் எதிராக
அகிலமெலாம் அடங்கி வந்து
தம்புலன்கள் அடங்கிநிற்கும் தருமங்கள்
ஓங்கி நிற்கும் தலைமை யான
உம்பரெலாம் உள்ளமுவந் துரிமையொடு
புகழ்ந்துநிற்பர் உண்மை என்னே!
எம்பெருமான் ஐம்பொறிவாய் அவித்தவர்பால்
இருக்கின்ருன் இன்பமூர்ந்தே. (10)

அடக்கமுடையான் அமரன் ஆவான்.

457. அடக்கமெனும் அரியகுணம் அமரனெனச்
செய்யுமுனை அடங்கா தோங்கும்
மடக்கொடுமை கடுமையாய் மாறாத
துயர்நரகில் மடுத்து வீழ்த்தி
விடக்கொடிய தீமையாய் நிற்குமென
வள்ளுவர்முன் விளக்கிச் சொன்ன
தொடக்கநிலை தனையுணர்ந்தால் அடக்கநிலை
யினையுணர்ந்து தூய ராவார். (11)

மாதவர் நிலை.

458. பொல்லாத துயர்களெல்லாம் புலனிச்சை
யால்விளையும்; போதம் வாய்ந்த
நல்லார்கள் அதையுள்ளே நன்குணர்ந்து
கொண்டமையால் நவையென் றெள்ளிச்
செல்லாதவ் வழியிலகிச் சிந்தைதனை
இனிதடக்கித் தெய்வத் தேசின்
வல்லாராய் உயர்ந்துள்ளார் மாதவரென் று
அவர்மகிமை மருவி நின்றார். (12)

நிலம் அடங்குநிலை.

459. வாயடக்கிக் கண்ணடக்கிச் செவியடக்கி
மகிமையொடு வாழ வேண்டின்
தீயடக்க விறகெடுக்கும் செய்கைபோல்
தீமனத்தை அடக்க வேண்டும்

பேயடக்கம் போலுலகைப் பேயாட்டம்
ஆட்டிவரும் பேயாம் நெஞ்சை
நீயடக்கி நின்றாயேல் நின்னதிரே
நிலமடங்கி நிற்கு மன்றே. (13)

உண்மையை உணர்.

460. உண்டதையே உண்கின்றாய் உடுப்பதையே
உடுக்கின்றாய் உலகில் என்றும்
கண்டதையே காண்கின்றாய் களிப்பதையே
களிக்கின்றாய் கருதி வேறே
உண்டெனவோர் உண்மையினை உணராமல்
உழலுகின்றாய் ஊனம் அந்தோ!
கொண்டவுடல் அழியுமுன்னே கொடுத்தமுதல்
தனையுணர்ந்து கொள்க தேர்ந்தே. (14)

வெறி விளைவு.

461. பொறிவழியே அலைந்துழலும் புலைவாழ்வில்
எவ்வழியும் புன்மை தீமை
வெறிவிளைவே விளைந்துவரும் வெய்யதுயர்
பெருகிவரும் விலகி நல்ல
அறிவறிந்து புலனடங்கி அமைதியாய்
வாழ்ந்துவரின் அரிய இன்ப
நெறிவெளியாய் நெடிதோங்கி நிறைந்தபுகழ்
அறங்களெலாம் நிலவும் நேரே. (15)

### இன்ப வரவு.

462 உள்ளத்தை யடக்கியரு ளுயர்வழியே
ஒழுகிவரும் ஒருவன் முன்னே
பள்ளத்தை நோக்கிவரு பைம்புனல்போல்
இன்பநலம் பரந்து துள்ளி
வெள்ளத்தை நேரொத்து விரிந்துவரும்
மெய்யறங்கள் எல்லாம் மேவி
வள்ளத்தைப் போல்வந்து வன்பிறவிக்
கடல்கடக்க வளையு மன்றே. (16)

### தவ வாழ்வு.

463. உற்றநோய் யாவுமே உறுதியுடன்
நேர்தாங்கி உறுகண் யார்க்கும்
எற்றுமே செய்யாமல் எவ்வழியும்
கருதாமல் இனிய அன்பே
பற்றியருள் உருள்வழியே ஒழுகிவந்த
பான்மையினல் படியோர் ஏத்த
வெற்றியுறு தவவாழ்வே காந்திவாழ்
வெனநீண்டு விளங்கிற் றம்மா! (17)

### மகாத்துமா.

464. மனிதனுளம் புனிதமாய் மருவிநின்றால்
அன்னவனே மகாத்து மாவாய்த்
தனிநிலையில் உயர்ந்தெவரும் தஞ்சமெனச்
சார்ந்துவரத் தலைமை தாங்கி

இனியபெரு நிலைமையினில் இருக்கலாம்
என்பதனை இருந்து காட்டிப்
புனிதமுடன் வாழ்ந்தமையால் காந்திவழி
போதஒளி புரிந்த தன்றே. (18)

சீரிய வாழ்வு.

465. மனம்போன போக்கெல்லாம் போய்த்திரிந்தால்
மதிகெட்டு மானம் கெட்டு
வனம்போன மாவினம்போல் வாழ்ந்துவர
நேர்ந்துவரும் மதியால் ஓர்ந்து
முனம்போன மேலோர்கள் மேலான
வாழ்வுகளை முழுதும் ஆய்ந்து
தினம்போன நிலைதெரிந்து சீரியவாழ்
வடைந்துவரின் சீர்மை யாமே. (19)

புலையாட்டம் ஒழி.

466. புலன்வழியே ஓடியுழல் புலையாட்டம்
போயொழிந்தால் புனித மான
நலனடைய நாடிவரும் நல்லறங்கள்
தேடிவரும் நவமே ஓங்கிப்
பலனுடைய பலவழிகள் பண்போடு
படிந்துவரும் பரம ஞான
நிலைஎதிரே நிலவிவரும் நிலைதெரிந்து
தலைவாழ்வில் நிலைத்து வாழ்க. (20)

நலமாய் வாழுக.

467. ஓடுகின்ற உள்ளத்தை ஓடாமல்
அடக்கிவரின் உலக மெல்லாம்
பாடுகின்ற பவிசுவரும் பத்தியருள்
பரவிவரும் பரம ஞானம்
கூடிவரும் குணநலங்கள் ஒருமுகமாய்க்
குலாவிவரும் குறித்த யாவும்
நாடிஎதிர் ஓடிவரும் நயம்தெரிந்து
புலனடக்கி நலமாய் வாழ்க. (21)

அடிமை ஆகாதே.

468. ஆசைதனை அடக்கினன் அகிலவுல
கங்களையும் அடக்கி ஆண்ட
தேசுடைய ஈசனுய்ச் சீர்த்திஒளி
திசைவீசச் சிறந்து நிற்பன்;
மாசுடைய ஆசையுளம் மண்டிநின்றால்
மாறாத அடிமை ஆகி
நீசமடைந் திழிந்துழல்வான் நிலைதெரிந்து
புலையொழிந்து நீடு வாழ்க. (22)

பரம வாழ்வு.

469. புலன்வழியே உழல்கின்றார் புல்லியராய்
இழிகின்றார் புலன் அடக்கி
நலன்வழியே நின்றுள்ளார் நல்லவுயர்
ஞானிகளாய் நாளும் ஓங்கி

நிலன்வழிபா டாற்றவர நித்தியராய்
நிலவுகின்றார் நிலைமை தேர்ந்து
பலன்வழியே பெருகிவரப் பண்போடு
வரினதுவே பரம வாழ்வாம். (23)

பரமன் ஒளி.

470. கண்ணிரண்டு காதிரண்டு மூக்கிரண்டு
வாயொன்று கணக்கா வேறே
எண்ணிரண்டு வழிகளினால் இவ்வுடலம்
இயங்கிவரும் இயக்கம் எல்லாம்
பண்ணிரண்டு வினைகளையே பரப்பிவரும்
அதில்நலமே பரவி ஓங்க
விண்ணிரண்டு கலைகளைநீ விழைந்துவரின்
பரமனொளி வெளியா மன்றே. (24)

இன்ப இனம்.

471. தருமமே தாயாகச் சத்தியமே
தந்தையாச் சாந்த சீலம்
அருமையுறு மனைவியா அருளடக்கம்
நன்மகவா அரிய ஞானம்
பெருமையுறு மெய்த்துணையாப் பேணிநீ
ஒழுகிவரின் பேரின்பங்கள்
ஒருமையாய் உன்எதிரே உரிமையுடன்
வந்துநிற்கும் உறவு கூர்ந்தே. (25)

———

# 18. கண்ணப்பர் கண்டது.

இவர் அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவர். அதிசய பத்தியில் எவரும் துதிசெய்யத் தோன்றியவர். ஆறே நாளில் அற்புத முத்தி பெற்றவர். பரமாத்துமாவைச் சீவாத்துமா விரைந்து அடையவுரிய அரியவழியை எளிதே விழி தெரிய விளக்கியவர். கண்ணப்பா! என்று கண்ணுதல் கடவுள் கனிந்து மொழிந்து கருணை புரியக் கனிந்த அன்பால் எண்ணரிய இன்ப நிலையை எய்தியவர்.

472. தத்தைமொழி நாணமொழி * தத்தைவயிற்
றுதித்தெழுந்த தவக்கொழுந்தே
மித்தையிந்த உலகமென மெய்யுணர்வு
மிக்கவுயர் ஞான யோக
வித்தகரும் வியந்துவியந் துளமுருகி
விழைந்தேத்த விளங்கி நிற்கும்
சுத்தசிவ அன்புருவே இன்புருவே
என்புருகத் தொழுநாள் என்றோ? (1)

473. அப்பனின்றி அம்மையின்றி அகிலவுல
கங்கள்எல்லாம் அப்பா! என்று
செப்பநின்ற ஒருமுதல்வன் திருவாயால்
அப்ப!எனச் செப்ப நின்றாய்
ஒப்பரிய அன்புநிலைக்கு ஓரின்ப
நிலையாகி ஓங்கி என்றும்
துப்பரிய ஒளிர்கின்ற சுடர்விளக்கே
இடரொழிக்கும் துரிய வாழ்வே. (2)

---

* தத்தை என்பது கண்ணப்பரைப் பெற்ற தாயின் பெயர். தத்தை = கிளி. இனியமொழியினள் என்றது அழகு, குணம் முதலிய அவளது விழுமிய நிலைகளை உணர்ந்து கொள்ள. தன் வயிற்றில் பிறந்த மகன் வேறு ஒருத்தி வயிற்றில் பிறந்து வருந்தாமல் பேரின்பம் பெற்றான் ஆதலால் அவன் பிறந்த வயிறு புகழ்ந்து போற்ற வந்தது. அரிய மகனால் பெரிய மகிமை அடைந்தாள்.

474. ஊனருந்தல் ஈனமென உணர்வுடையார்
அருவருக்கும் ஊன வூனை
வானறிய மண்ணறிய மறைமொழிந்த
திருவாயில் வலிய வூட்டி
ஞானதவ யோகிகளும் நண்ணாத
பெரும்பதத்தை நண்ணி யுள்ளாய்!
கானுறையும் வேடன்என்கோ கைலையுறை
நாடன்என்கோ கழறு வாயே. (3)

475. பண்ணரிய தவம்புரிந்தும் அடைவரிய
பரம்பொருளை யாதும் பண்ணாது
உண்ணரிய உணவொன்றை உண்ணவைத்தங்
கதுபுரிந்த உளவோ ராமல்
கண்ணரிந்து பின்வைக்கக் காலறிந்து
முன்வைத்துக் காலன் என்றும்
எண்ணரிய நிலைபெற்ற கண்ணப்பர்
கால்பெற்றார் என்பெறாரே? (4)

476. யாதொன்றும் கல்லாமல் எக்கலையும்
தேராமல் யாவும் கற்ற
மேதைகளும் மெய்ம்மறந்து மேலான
மேதையென வியந்து போற்றி
ஓதியுளம் உருகிவர ஒருபரமன்
அருள்மருவி ஒளிமிகுந்தோர்
சோதியென அன்புலகில் ஆதிமுதல்
இன்பநிலை துலங்கி யுள்ளாய்! (5)

477. அன்புருவே சிவம்என்னும் அருளுரையை
அகிலமெலாம் அறிந்து கொள்ளத்
தன்புடைநேர் எழுந்துவந்து தனிப்பரமன்
செருப்புதையும் தாங்கி இன்பம்
முன்படைந்து துன்பமே எவ்வழியும்
முழுதுடைய பிறவி என்றும்
பின்படையா தருள்புரியப் பேரின்பம்
கண்ணப்பர் பெற்றார் அன்றே. (6)

478. ஈசன்பால் அன்புடையார் ஈசனென
இன்பமடைந்து எழில் சுரந்து
தேசுமிகுந் துலகமெலாம் உளமுவந்து
தொழுதேத்தச் சிறந்து நிற்பார்
நீசநிலை யெல்லாம்போய் நீருயர்வீர்
ஈசனைநேர் நினைமின் என்று
பேசரிய நிலையிலன்று கண்ணப்பர்
பேசியுள்ளார் பேச்செசன் னம்மா! (7)

479. கள்ளம்ஒரு சிறிதேனும் கலவாத
பேரன்பு கனிந்து வந்தால்
உள்ளம்உயிர் உருகிவரும் உயர்பரமன்
எதிரோடி உடனே வந்து
தள்ளரிய பேரின்பம் தந்தருளும்
என்பதைமன் பதைநேர் காண
விள்ளரிய மொழிகளினால் விழிதெரிய
விளக்கியவுன் மேன்மை வாழி. (8)

# 19. கவிகளின் காட்சி.

ஞானிகளும் கவிகளும்.

480. ஊனுடலம் எடுத்திங்கே உருவாகி
வந்துள்ள உயிர்கள் உள்ளே
மானுடங்கள் உயர்ந்தனவாய் மாண்போடு
வாழுகின்ற மாட்சி எல்லாம்
ஆனமொழி பேசுகின்ற அவ்வகையால்
அமைந்தனகாண் அதில் உயர்ந்த
ஞானமுடை யவர்களே கவிகள்என
ஞாலத்தில் நலமாய் வந்தார். (1)

புவியும் கவியும்.

481. புவியாளும் வேந்தருக்கும் பூலோக
மாந்தருக்கும் போதம் தந்து
செவியாளும் சுவைகளையே எவ்வழியும்
செவ்வையாய்ச் சேர ஊட்டிச்
சவியாளும் கதிரவன்போல் தனிமொழியின்
ஒளிகாட்டிச் சால்புள் ஓங்கிக்
கவியாளும் கவிஞரே காசினிக்குக்
கண்ஒளியாய்க் காண நின்றார். (2)

அழியாத மொழியினர்.

482. ஒருசமையம் சொன்னமொழி ஊழியுமே
தேயாமல் ஒளிசெய் தோங்கி
வருசமையம் மருவிவரும் மானிடருக்
கினியவழி வாய்ப்பக் காட்டிப்

பெருசயங்கள் அருளிவரும் பிழைவழியில்
பிழையாமல் பேணிக் காக்கும்
தருசமையம் தருகொடையும் தனிக்கவிஞர்
தருகொடைமுன் தாழ்ந்து போமே. (3)

உலகமெல்லாம் பணியும்.

483. மண்ணுலகும் மறிகடலும் மலைகளெலாம்
அவரெதிரே வணங்கி நின்று
பண்ணுலவும் மொழிகேட்டுப் பணிகள்பல
புரியுமே பரந்து நீண்ட
விண்ணுலகும் பெறலரிய மேலான
அறிவமுதை மேதி னிக்குள்
எண்ணுலகம் நுகர்ந்துவர இனிதருள்வார்
கவிகளே இயல்பு தேர்மின். (4)

கல்லும் பேசும்.

484. கல்லும்அவர் எதிர்வந்தால் கனிவோடு
பேசுமே காய்ந்த மண்ணும்
ஒல்லும்வகை உரையாடி உணர்வொளிகள்
வீசுமே உலர்ந்து போன
புல்லுமவர் முன்நின்றால் போதனைகள்
புரியுமே புவனம் யாவும்
வெல்லுமொரு சொல்லுடைய கவிகளுயர்
மகிமைஎவர் விளம்ப வல்லார்? (5)

உணர்வுகளை ஊட்டுவார்.

485. காட்டினுறு விலங்கினம்போல் கடையாகித்
திரியாமல் கருதி ஓர்ந்து
நாட்டினுறு மக்களினம் நலமாக
வாழ்வதெல்லாம் நன்கு கற்றுப்
பாட்டினுறு பொருளுணர்ந்து பண்பாடு
படிந்துவந்த பயனே யாகும்
ஊட்டியந்த உணர்வுகளைக் கவிகளே
உரிமையுடன் உதவி யுள்ளார். (6)

உயர்நிலைகள் அருளுவார்.

486. ஓர்ந்தறியும் உணர்வளவே உயிரினங்கள்
உயர்ந்துவரும் உணர்ச்சி யெல்லாம்
கூர்ந்தறியும் கலையளவே கூட்டமாய்க்
கூடிவரும் கோட்ட மின்றித்
தேர்ந்தறியும் கவிகளே தேசுடைய
ராயுயர்ந்து தேசம் எங்கும்
மாந்தரினம் மகிழ்ந்துவர மதிநலங்கள்
அருளுகின்றார் மகிமை யூர்ந்தே. (7)

வாலறிவும் நூலறிவும்.

487. வாலறிவு மெய்யாக வாய்ந்துள்ள
கடவுளே வையம் உய்ய
நூலறிவை எவ்வழியும் மேலோர்பால்
அருளியுளான் நூலோர் தம்முள்

சீலமுடன் கவிபாடும் தெளிவுடைய
கவிஞரே தெய்வத் தேசு
சால அமைந் துள்ளமையால் ஞாலமவர்
சொல்வழியே நடக்குந் தானே. (8)

கவிஞரின் அருமை.

488. மேலான மானுடமாய் மேதினியில்
வரலரிது; மேவி னும்
நூலோடு பழகியுயர் நுண்ணறிவு
பெறலரிது; நுண்மை தோய்ந்து
சால்போடு புலமைநலம் சார்ந்தாலும்
கவிபாடும் தகைமை வாய்ந்து
மேலான கவிஞனாய் மேவிவரல்
மிகஅரிது மேன்மை தேர்க. (9)

புவிவேந்தும் கவிவேந்தும்.

489. தேசத்தை ஆளுகின்ற தேர்வேந்தன்
ஆளுனும் தெளிந்த மேலோர்
நேசத்தை நேசித்து நீர்மையாய்
வருமளவே நிலைத்து நின்றான்;
மாசற்ற புலமையொடு மகிமையுறு
கவிஞர்களை மதித்து மன்னன்
பாசத்தைச் செய்துவரின் பலநலன்கள்
பெருகிவரும் பயனேர் கண்டான். (10)

மொழியும் கவியும்.

490. வாய்மொழியாய்ப் பேசிநீ வருகின்ற
வார்த்தையே வளமாய் வந்துன்
தாய்மொழியாய்ச் சார்ந்துளது தனியான
அம்மொழிதான் தலைமை யான
தூய்மொழியால் தோய்ந்துவரு நூல்களால்
துலங்கிவரும் அந்நூ லாளர்
ஆய்மொழியார் கவிகளே ஆதலால்
அவர்மகிமை அறிக ஆய்ந்தே. (11)

அறிவுநலம் அருள்பவர்.

491. பொறிவெறிய ராயிழிந்து புல்லியராய்
மனிதஇனம் போகா தோர்ந்து
நெறிமுறையே ஒழுகிவர நீர்மையொடு
பழகிவர நியம மான
அறிவுரைகள் அறநலங்கள் அரியபெருங்
காவியங்கள் அருளி ஆன்ற
உறுதிநலம் புரிபவர்கள் கவிகளே
அவர்மகிமை உணர்க ஓர்ந்தே. (12)

கடவுளும் கவி.

492. தன்னைஒரு கவிஞனாத் தனிமுதலும்
சாற்றியன்று தமிழ்ப்பாட் டொன்றை
மன்னனுயர் சேரனுக்கும் மற்றொன்றைத்
தருமிக்கும் வரைந்து தந்தான்

மின்னனைய வேல்முருகன் மெய்க்கவிஞர்
பெருமானாய் விளங்கி நின்றான்
இன்னவகை இயல்புகளால் கவிகளுயர்
பெருமைகளை எண்ண லாமே. (13)

கவிகளின் நீதம்.

493. நாதத்தின் வழிஒழுகி ஞாலமெலாம்
நடந்துவரும் நலமாய் வந்த
வேதத்தின் விதிமுறையே மேலான
நிலையடையும் மெய்மை யான
போதத்தின் ஒளிவழியே புனிதநிலை
பொலிந்துவரும் புகன்ற யாவும்
நீதத்தின் கவிகளால் நிலைத்துவரும்
நிலைமைகளை நினைந்து தேர்க. (14)

கவியின் கதி.

494. உள்ளத்தின் ஒளிவிளக்காய் உலகத்தின்
தெளிநிலையாய் உயர்ந்த இன்ப
வெள்ளத்தின் வியன்பெருக்காய் விஞ்ஞான
வெளிவிரிவாய் வீணே நீண்ட
கள்ளத்தின் இருள்நீக்கும் கதிர்ஒளியாய்க்
கவிகளுள காட்சி கண்டால்
பள்ளத்தில் கிடந்துழலும் பழிநீங்கி
ஒளிஓங்கிப் பயனே காண்பார். (15)

### முனிவரும் கவிஞர்.

495. அகத்தியனார் கீரனார் ஆதியராய்த்
தமிழ்க்கவிகள் அரிது தோன்றி
இகத்தியலும் பரத்தியலும் இனியவுயிர்
இயல்புகளும் எதிரு ணர்ந்து
சகத்தியலும் மானிடர்கள் சன்மார்க்க
நெறிஒழுகச் சால்பு காட்டி
மகத்துவங்கள் புரிந்துவந்த மகிமைகளை
மதித்தறிவார் மாண்பு காண்பார். (16)

### தோல்காப்பியனார்.

496. எழுத்துநிலை சொல்லமைதி இனியபொருள்
யாப்பணிகள் இனமாய் ஏய்ந்து
வழுத்துகலை வளர்நிலைக்கு வகையான
இலக்கணங்கள் வகுத்துக் காட்டிப்
பழுத்துவரு புலவரெல்லாம் பயனுணர்ந்து
பணிந்துவரப் பழமை தோய்ந்து
விழுத்தவராய் விளங்கியருள் தொல்காப்பி
யத்தேவை விழைந்து வாழ்க. (17)

### கோங்கு வேளிர்.

497. வத்தவர்கோன் உதயணன்தன் மாண்புமிகு
சீவியத்தை வகுத்து நோக்கி
உத்தமமெய்க் காவியமா உருவாக்கி
உரிமையுடன் உணர்வோர்க் கென்றும்

புத்தமுத போகமாய்ப் போதநலம்
பொங்கிவரப் புனைந்து தந்த
வித்தகனைக் கொங்குவேளெனும் பெயர்கொள்
மேலோனை மேவி வாழ்வாம். (18)

இளங்கோவடிகள்.

498. கோவேந்தர் குடிப்பிறந்தும் முடிபுனைந்து
கொள்ளாமல் அதைத் துறந்து
மூவேந்தர் தலைமைகளை முறைபுரிந்த
நிலைமைகளை முழுதும் ஆய்ந்து
பாவேந்தர் எல்லாரும் பலகலைகள்
பயின்றுணரப் பயனூல் தந்து
நாவேந்தாய் விளங்கியொளிர் இளங்கோவை
உளங்குளிர நயந்து வாழ்வாம். (19)

கச்சியப்பர்.

499. எம்பெருமான் அருளாடல் எவ்வழியும்
பொருளாழம் உடைய தேயாம்
உம்பரெல்லாம் உயிர்வாழ ஒருவடிவேல்
தனிஏந்தி உருவம் தாங்கி
இம்பரிடை வந்துசெய்த எழில்வீர
சரிதத்தை இனிமை யாகக்
கம்பர்அருள் வலியினால் கச்சியப்பர்
வெளிசெய்து கதிமுன் கண்டார். (20)

---

கம்பர் என்றது சிவபெருமானை. காஞ்சியம்பதியில்கோயில் கொண்டுள்ள இறைவன் இப் பெயரால் இலங்கியுள்ளார்.



# 20. திருவள்ளுவர்.

தெய்வப்புலவர்.

500 பல்லுயிரும் படைத்தளிக்கும் பரமனே
பாருலகம் பரமாய் ஓங்க
நல்லுருவம் தாங்கியுயர் வள்ளுவரென்று
ஒருநாமம் நண்ணி வந்து
சொல்லுருவில் திருக்குறளென்று ஒருநூலை
அருளினன் சோதி யான
எல்லுருவில் ஒளிவீசி எவ்வுலகும்
தெளிவடைய இசைந்த தன்றே. (1)

மனைவாழ்வு.

501. வாசுகிஎன் அம்மையுடன் மனைவாழ்வில்
மதிநலங்கள் மகிழ்ந்து வாழ
நீசுகியாய் இருந்துவந்த நிலைமைகளைத்
தலைமைகளை நினைந்து மாந்தர்
தேசுமிகுந்து இல்லறத்தை நல்லறத்தைச்
சொல்லறத்தைத் தெளிந்து நேரே
ஈசனருள் பெற்றுவர இமையவரும்
சுற்றிவர எழுந்து வந்தார். (2)

ஒரு சோதி

502. வள்ளுவரென்று ஒருசோதி வையமதில்
வான்கதிர்போல் வயங்கித் தோன்றி
உள்ளிருளும் புறஇருளும் ஒருங்கொழியப்
பெருங்கதிரை உலகம் எங்கும்

தெள்ளிஒளி வெளிவீசிச் சிவரெலாம்
தேவரெனச் சிறக்கச் செய்து
தள்ளரிய புகழோடு தழைத்திருந்தும்
தாழ்ந்துள்ளார் தரணி மாந்தர். (3)

உள்ளத்து அளவு உயர்வு.

503. உள்ளமுறும் உயர்வளவே மனிதனுயர்
கின்றுனென்று உணர்வு தோன்ற
வள்ளுவனுர் அருள்புரிந்து மதியுரைத்தார்
அதனுண்மை மாட்சி ஓரார்
கள்ளமுற ஏதேதோ காசினியில்
வெளிவேடம் காட்டி மேலே
துள்ளியெழுந் துயர்ந்தவர்போல் தலைநிமிர்ந்து
தோன்றுகின்றூர் தோற்றம் என்னே. (4)

பிறர் கேடு சூழாதே.

504 மறந்தும்நீ பிறர்கேடு சூழற்க
சூழ்ந்தாயேல் மரபு குன்றி
இறந்துபடும் படியுனக்குத் தருமதே
வதைசூழும் என்று தேவர்
நிறைந்தபெருங் கருணையினுல் நினைவுறுத்தி
நெடிதுரைத்தும் நீச மாகப்
பிறந்தபயன் கருதாமல் பிறர்க்கிடரே
புரிவாரேன் பிறந்தார் அம்மா! (5)

### பொறாமையுறாதே.

505. நெஞ்சிலே பொறாமைஎனும் நீசம்ஒரு
சிறிதடையின் நீச ராகிப்
பஞ்சுபடு தீஎன்னப் பாழ்பட்டுத்
தீநரகில் படுவர் அந்தோ!
நஞ்சருந்தி மகிழ்வார்போல் நவைபுரிந்து
நகைபுரிவார் நாசம் உள்ளே
மிஞ்சியெழல் காணாமல் விளையாடி
விளிகின்றார் வீணர் வீணே. (6)

### கல்வியே கண்.

506. காணுகின்ற கண்எல்லாம் கண்அல்ல
கல்வியே கண்ணாம் என்று
பேணுகின்ற கருணையினால் பேருலகம்
தெளிவடையப் பேசி நின்றார்
பூணுகின்ற கல்விநலம் பூணாமல்
பொலிவிழந்து புலையடைந்தும்
நாணுகின்றார் இல்லையே நலமழிந்து
நவையுழந்து நடக்கின் றாரே. (7)

### கல்லாமை கடை.

507. மட்டிநீ மடையன்நீ மதிகெட்ட
மூடன்நீ என்று கூறின்
ஒட்டியிதை எவனுமே ஒத்துநில்லான்
உள்ளமெல்லாம் கொதித்து நேரே

வெட்டிவிடு பவன்போலத் திட்டிவெகுண்
டெழுகின்றான் விளைந்த ஈனம்
கட்டிவந்த வகைஎல்லாம் கல்லாத
தீமைஎன்று காணான் அந்தோ. (8)

இருகால் விலங்கு.

508. ஒருகாலும் நீங்காத உயர்கல்வி
இல்லையெனின் உலகில் மக்கள்
இருகாலின் மிருகம்என இழிவடைந்து
கழிவரென இசைத்தார் தேவர்
வருதாயின் மொழிபயின்று மதிநலமும்
மனநலமும் மருவி வாழ்க
அருகான மொழியறியார் அகவிழியும்
புறவிழியும் அழிந்தார் அன்றே. (9)

ஈனஇழிவுகள்.

509. புண்ணியங்கள் பெருகிவரப் புகழ்பொருள்கள்
பொங்கிவரப் புனித மான
கண்ணியங்கள் எவ்வழியும் யாண்டுமே
கனிந்துவரக் கருணை யோடு
பண்ணியலும் மொழிவழியே பலநீதி
வள்ளுவனார் பரிந்து ரைத்தார்
எண்ணியதை உணராமல் ஈனமாய்
மானுடங்கள் இழிகின் றாரே. (10)

இழிதொடர்பு.

510. பொன்னன வள்ளுவர்தம் புனிதமொழி
உளம்கொள்ளார் புரையே மீறி
இன்னாத வழியோடி இறுமாந்து
திரிகின்றார் இரங்கி நல்லோர்
சொன்னாலும் கேட்டுய்யார் சொற்கோட்டம்
உடையராய்த் துயர்கள் மண்டித்
துன்னாத பழிவழியில் தொடர்ந்திழிந்து
தொலைகின்றார் தொல்லை என்னே. (11)

ஞானதிலகம்.

511. உலகமெலாம் ஒருங்கேநீ ஆளலாம்
உள்ளத்தில் ஊக்கம் ஓங்கி
இலகியநல் அருள்வழியே ஒழுகினென
வள்ளுவப்பேர் ஏந்தல் ஞான
திலகமெனும் திருக்குறளை அருள்புரிந்து
தந்திருந்தும் தெருளா தந்தோ
கலகமருள் இருளிடையே கழிந்துமக்கள்
அழிகின்றார் கருமம் என்னே! (12)

புறம் கூறாதே.

512. பொல்லாத புன்மையொடு புறங்கூறி
வாழ்வதினும் பொன்றி அன்றே
இல்லாமல் இறந்தொழிதல் இனிதாமென்று
அருள்மொழியை இயம்பி நின்றாய்

கல்லாத புல்லரிதைக் கருதியுணர்ந்து
ஒழுகாமல் கடைய ராகி
அல்லாத வழிகளிலே அவலமாய்
அலைந்துதிரிந் தழிகின் றீரே. (13)

பிறர்மனை நோக்காதே.

513. பேராண்மை இன்னதெனப் பேருலகம்
இனிதறிந்து பெருமை காண
ஊராண்மை உளமுறிய உயராண்மை
நிலைதெரிய உறுதி யான
போராண்மை வகைதெளியப் புகழாண்மை
புலனுணரப் போதித் தென்றும்
நீராண்மை யுடன்மாந்தர் நிலையான
மேன்மைபெற நீர்மை செய்தாய். (14)

மெய்யே பேசுக.

514. உள்ளத்தால் பொய்யாமல் ஒழுகிவரின்
உலகத்தார் உள்ளம் எல்லாம்
கொள்ளத்தான் நின்றென்றும் அழியாத
புகழுடனே குலாவி வாழ்வீர்!
கள்ளத்தால் வாழலாம் என்றுநீர்
கருதுவிரேல் கடுங்கேடெய்தி
எள்ளத்தான் படுவீர்கள் இழிபழியாய்
அழிவீர்காண் என்றார் தேவர். (15)

ஒருவரியில் உயர்கதி.

515. வள்ளுவர்வாய் வந்ததிருத் தெள்ளமுதாம்
திருக்குறளில் வரிஒன் றேனும்
உள்ளுவராய் அதன்படியே ஒழுகிவரின்
உயர்கதியை உறுவர் அன்றே
தெள்ளுபுக ழுடையராய்த் தேசமிருந்து
இன்பமெலாம் சேர எய்தித்
துள்ளுமகிழ் வுடன்வாழத் துணிவீரேல்
வள்ளுவரைத் தொழுது வாழ்மின். (16)

அருள் உடையார்க்கு அல்லல் இல்லை.

516. அல்லலின்றி என்றுமே ஆனந்தம்
ஆகநீர் அமர வேண்டின்
நல்லஒரு உபாயத்தை நாயனார்
சொல்லியுள்ளார் நயந்து கேண்மின்!
பல்லுயிரும் தன்உயிர்போல் பாராட்டி
அருள்நிலையில் பதிந்து நின்று
தொல்லுலகில் வாழ்ந்துவரின் துயபே
ரின்பநிலை துய்த்தீர் அன்றே. (17)

குணமணம்.

517. சமணசம யத்தன்என எவ்வழியும்
உன்மொழிகள் சான்று காட்டிச்
சுமணங்கள் வீசிவரும் ஆனாலும்
தொல்லுலகில் உள்ளோர் யாரும்

தமதுதம தினமென்று தழுவியுனை
மகிழ்கின்றார் தன்மை என்னே
குமணனென உலகைமணம் செய்துளவன்
இனியபல குணங்கள் வாழி. (18)

தான் பிறந்த பூமியை உயர்ந்த மணம் ஆகச் செய்தருளின மையால் திருவள்ளுவர் குமணன் என நேர்ந்தார். கு—பூமி. அதனை நல்ல வாசனையாக மணம் செய்தவன் குமணன் என்க.

### உயிர்க்கு உறுதி.

518. அரியபல கலைகளெல்லாம் ஆராய்ந்து
தெளிந்தாலும் அறிவில் ஆன்ற
பெரியனென நின்றாலும் பெரும்பதவி
பெற்றாலும் பிறந்து வந்த
உரியபயன் உணர்ந்துயிருக் குறுதிநலம்
உறுதொழியின் ஊன மான
கரியபவக் கடல்வீழ்ந்து கழிந்திழிவாய்
தெளிந்துநீ கதிமுன் காண்க. (19)

### பேரின்ப நிலை.

519. யான்எனதென் றெழுகின்ற இறுமாப்பே
எவ்வழியும் இடராய் ஓங்கி
ஊனமுறும் நிலைகளிலே உனைத்தாழ்த்தும்
அதனைஒழித்து ஒழுகி னையேல்
வானவரும் பெறலரிய பேரின்ப
நிலைமருவி வாழ்வாய் என்று
மானவருக் கினியஒரு ஞானநெறி
உணர்த்தியருள் மாண்பு வாழி. (20)

# 21. கம்பர்.

பாரின் பாக்கியம்.

520. சீராம காதைஎனும் தெய்வீக
கங்கைதனைச் சீவ கோடி
பேராவ லொடுதோய்ந்து பேரின்பம்
பெறச்செய்த பெருமான் உன்னை
நீராரும் சடைமுடிஅந் நிமலனே
கலைகளெலாம் நிலவ இந்தப்
பாராரும் பாக்கியமா ஆக்கியளித்
துள்ளமையைப் பாரார் யாரே? (1)

வீரகாவியம்.

521. வீரமா காவியத்தை விண்ணவர்தம்
அமுதமென விழைந்து மண்ணோர்
சாரமா எந்நாளும் இனிதாகத்
தனிநுகர்ந்து தழைக்கச் செய்தாய்!
பாரமா காவியங்கள் பலகோடி
எழுந்தாலும் பரிதி முன்னே
ஈரமா மதிகள்என இழிவுறநீ
ஒளிபுரிந்தாய் இசைமை என்னே. (2)

ஆரமுது.

522. நினைத்தாலும் படித்தாலும் நேர்நின்று
கேட்டாலும் நெறியே நேர்ந்த
அனைத்தாலும் தித்திக்கும் ஆரமுதாய்ப்
பேரின்பம் அமைய ஆய்ந்து

மனத்தாலும் வாக்காலும் இராமனுயர்
மகிமைகளை வையம் காண
எனைத்தாலும் சுவையொளிகள் எவ்வழியும்
எழில்செய்ய இனிதே ஈந்தாய். (3)

இன்ப உலகம்.

523. மன்னர்பிரான் தசரதன்தன் மகன்எனவே
வால்மீகி வரைந்து முன்னம்
சொன்னசரி தந்தன்னைச் சுவைகள்பல
எவ்வழியும் சுரந்து பொங்கி
இன்னமிர்தம் எனவழிய இனியஒரு
தனிஇன்ப உலகம் ஆக்கி
உன்னரிய பெரும்போகம் உயிர்களுண்ண
உதவினையே உரிமை என்னே. (4)

தேனின் சுவை

524. மானுடரின் செவிகளுக்கு வானவரின்
அமுதமென இராம காதைத்
தேனினைநீ சுவைசெய்து தேன்மாரி
பொழிந்துள்ளாய்! தேவர் எல்லாம்
ஊனமுதம் உண்டொழிய உணர்வமுதம்
இனிதுநுகர்ந்து உயர்பே ரின்பம்
ஞானமுடன் பெற்றுநரர் வானைமறந்து
உவந்துள்ளார் நன்மை கூர்ந்தே. (5)

பாவின் போகம்

525. உள்ளத்தில் கண்டதனை உலகமெலாம்
தெளிவாக உவந்து கண்டு
கள்ளத்தைக் காணுமல் கருதரிய
பேரின்பம் காண வைத்தாய்!
பள்ளத்தில் பாய்கின்ற பைம்புனல்போல்
ஐம்புலனும் பாவின் போக
வெள்ளத்தில் பாய்ந்துவெளி மீளாமல்
விளைத்திருக்கும் விளைவென் வேந்தே. (6)

தெய்வ ஓவியம்

526. காவியத்தின் சுவைகளெல்லாம் கலைஞான
நிலைகளெல்லாம் கனிந்து இராமன்
சீவியத்தில் சுரந்தெங்கும் திவ்வியதேசு
ஒளிசெய்யத் திருவின் தெய்வ
ஓவியத்தைச் சுவைசெய்திவ் வுலகர்எதிர்
வைத்ததுபோல் ஒருநூல் தந்தாய்!
நீவியத்தை உணர்மாந்தர் நெஞ்சுயர்ந்து
பேரின்பம் நேர்கின் றுரே. (7)

கலையின் சுவைகள்

527. சொல்லழகும் பொருளழகும் தொடையழகும்
நடையழகும் சுவைகள் தோய்ந்து
பல்லழகும் பொங்கிவரப் பாரமா
காவியத்தைப் பாடி வானோர்

மெல்லமுதம் புல்லமுதம் எனஇகழ்ந்துன்
கலைபமுதை விழைந்து வந்து
நல்லமுதம் எனநுகர்ந்து நன்புலவ
ராயுயர்ந்தார் நயந்தான் என்னே. (8)

தேவருக்குப் புலவர் என்று ஒரு பெயர்; அதற்குக் கார ணத்தை விளக்கிக் காவிய நிலையை இது காட்டியருளியது.

நிலையான இன்பம்

528. கண்ணெதிரே கொண்டுவந்து காட்டுகின்ற
காட்சிகளைக் கண்டு கண்டு
மண்ணெதிரே மண்டிவரு மையலெல்லாம்
அறமறந்து மனமகிழ்ந்து
பண்ணெதிரே மிளிர்கின்ற மொழிவழியே
விழியோடிப் பலவும் ஆய்ந்து
விண்ணெதிரே பெறலரிய பேரின்பம்
மாந்தர்பெற வேய்ந்தா யன்றே. (9)

மரியாத முறைகள்

529. தந்தைதாய் தெய்வமென எவ்வழியும்
அன்போடு தாழ்ந்திறைஞ்சி
மைந்தர்தாம் வரவுரிய மரியாதை
வரம்புகளை வரைந்து மண்ணோர்
சிந்தைதெளிந் துய்திபெறச் சீராமன்
சீர்மைகளைச் சீர்மை யோடு
விந்தையாய் விளக்கியுள வித்தகத்தை
விண்ணோரும் வியந்துள் ளாரே. (10)

### அனுமன் மகிமை

530. நெறிநின்று பொறிவென்ற நீதிமான்
அனுமனென நினைவு றுத்தி
வெறிநின்று வெளியேறி மேதினியோர்
மேலான மேன்மை மேவப்
பொறிவென்ற ஒருவனே புவனமெல்லாம்
வெல்லவல்ல புனிதன் என்னும்
அறிவொன்ற அருளியவுன் அதிசயத்தைத்
துதிசெய்வார் அமர ராவார். (11)

### அமுத நதி

531. பாடுகின்ற பாவலர்கள் பாருலகில்
பலமொழியில் பரந்து தோன்றி
நீடுகின்ற புகழோடு நிலைத்துள்ளார்
ஆனாலும் நின்போல் யாரும்
தேடுகின்ற கலைஞானத் தெளிவோடு
செழுஞ்சுவையில் திளைத்து நேரே
ஓடுகின்ற அமுதநதி எனஒழுகும்
ஒழுக்கத்தை யுடைய ரன்றே. (12)

### சுவை நுகர்ச்சி

532. உண்மையாய்த் தமிழுணர்ச்சி ஒருசிறிதே
இருந்தாலும் உன்வாய் வந்த
திண்மையுறு காவியத்தைத் தீஞ்சுவையின்
அமுதமெனத் தேர்ந்து கொள்வார்

வெண்மையுறு மதியினராய் வெளிவேடம்
பூண்பிறருக்கு மேவி நின்ற
எண்மையுறு நிலையினருக்கு என்றுமே
கலையின்பம் இனியா தன்றே. (13)

தனி உயர்ச்சி

533. உன்போன்ற ஒளிமிகுந்த உயர்கவிஞன்
இந்நாட்டில் உதித்த தாலே
என்போன்ற கவிஞர்களும் கலைஞர்களும்
கலைச்சுவையை இனிது மாந்தி
மன்போன்ற உலகாளும் தலைவரெல்லாம்
மதித்துவந்து வணங்கி வாழ்த்தத்
தன்போன்ற தனிமுதல்வன் ஒருவனையே
உளம்நினைந்து தழைத்துள் ளோமே. (14)

534. வடமொழியில் ஆங்கிலத்தில் யவனத்தில்
சீனத்தில் வளமை வாய்ந்த
இடமொழியாம் ஜெர்பனியில் ருசியத்தில்
இத்தலியில் எங்கு முள்ள
திடமொழியில் தேர்ந்தநின்ற கவிஞரெல்லாம்
நின்னெதிரே சேர நேர்ந்தால்
கடமையுணர்ந் துன்னையே கவிச்சக்கர
வர்த்தியெனக் களித்துக் காண்பார். (15)

### அனுமன் மகிமை

530. நெறிநின்று பொறிவென்ற நீதிமான்
அனுமனென நினைவு றுத்தி
வெறிநின்று வெளியேறி மேதினியோர்
மேலான மேன்மை மேவப்
பொறிவென்ற ஒருவனே புவனமெல்லாம்
வெல்லவல்ல புனிதன் என்னும்
அறிவொன்ற அருளியவன் அதிசயத்தைத்
துதிசெய்வார் அமர ராவார். (11)

### அமுத நதி

531. பாடுகின்ற பாவலர்கள் பாருலகில்
பலமொழியில் பரந்து தோன்றி
நீடுகின்ற புகழோடு நிலைத்துள்ளார்
ஆனாலும் நின்போல் யாரும்
தேடுகின்ற கலைஞானத் தெளிவோடு
செழுஞ்சுவையில் திளைத்து நேரே
ஓடுகின்ற அமுதநதி எனஒழுகும்
ஒழுக்கத்தை யுடைய ரன்றே. (12)

### சுவை நுகர்ச்சி

532. உண்மையாய்த் தமிழுணர்ச்சி ஒருசிறிதே
இருந்தாலும் உன்வாய் வந்த
திண்மையுறு காவியத்தைத் தீஞ்சுவையின்
அமுதமெனத் தேர்ந்து கொள்வார்

வெண்மையுறு மதியினராய் வெளிவேடம்
மீண்டிலுக்கு மேவி நின்ற
எண்மையுறு நிலையினருக்கு என்றுமே
கலையின்பம் இனியா தன்றே. (13)

தனி உயர்ச்சி

533. உன்போன்ற ஒளிமிகுந்த உயர்கவிஞன்
இந்நாட்டில் உதித்த தாலே
என்போன்ற கவிஞர்களும் கலைஞர்களும்
கலைச்சுவையை இனிது மாந்தி
மன்போன்ற உலகாளும் தலைவரெல்லாம்
மதித்துவந்து வணங்கி வாழ்த்தத்
தன்போன்ற தனிமுதல்வன் ஒருவனையே
உளம்நினைந்து தழைத்துள் ளோமே. (14)

கவிச்சக்கரவர்த்தி

534. வடமொழியில் ஆங்கிலத்தில் யவனத்தில்
சீனத்தில் வளமை வாய்ந்த
இடமொழியாம் ஜெர்மனியில் ருஷியத்தில்
இத்தலியில் எங்கு முள்ள
திடமொழியில் தேர்ந்துநின்ற கவிஞரெல்லாம்
நின்னெதிரே சேர நேர்ந்தால்
கடமையுணர்ந் தன்னையே கவிச்சக்கர
வர்த்தியெனக் களித்துக் காண்பார். (15)

### தமிழின் கதி

535. செந்தமிழ்க்குக் கதியாவார் இருவர்என
அறிவுலகம் தேர்ந்து சொன்ன
அந்தவுயர் முதுமொழிக்கு முந்திநீ
முதன்மையாய் அமைந்து நின்றாய்
எந்தவழி ஆய்ந்தாலும் எவ்வகையில்
ஓர்ந்தாலும் இறைமை உன்றன்
சொந்தவழி யாய்வளரச் சோதியாய்
ஒளிர்கின்றாய் சுகுண வேந்தே. (16)

திருவள்ளுவரும், கம்பரும் தமிழ் மொழிக்கு மகிமை தந்துள்ளனர்; அந்த உண்மையை அவருடைய பெயரின் முதல் எழுத்துக்கள் உணர்த்தி யுள்ளன; இரண்டு பேரின் அடையாளமாகக் க, தி சேர்ந்து கதி என வந்தது. கதி என்னும் சொல் ஆதரவு, அடைக்கலம், புகலிடம் எனப் பல பொருள்களை உணர்த்தி வரும். ''தமிழ்க்குக் கதி இருவர்'' என்னும் முதுமொழியுள் கம்பர் முந்தி நிற்றலால் இவரது கலையும் நிலையும் கருதியுணரவந்தன. தாய்மொழி இவர்வாய்மொழியால்வளமடைந்தது.

### தரும நிலைகள்

536. அறம்பொருளின் நிலைகண்டேன் அரும்புகழின்
நெறிகண்டேன் அரிய நீதித்
திறம்பலவும் எதிர்கண்டேன் தேயாத
பேரின்பத் தெளிவும் கண்டேன்
மறம்பலவும் மண்டிநின்ற அரக்கர்குலம்
மாண்டொழிய வரிவில் வாங்கி
திறம்பலவும் கொண்டுநின்ற சீராமன்
காவியத்தில் நேரே நானே. (17)

தேனின் தேன்

537. ஊனெல்லாம் உருகிவர உன்உரைகள்
பெருகிவரும் உணருந் தோறும்
வானெல்லாம் மண்ணெல்லாம் வளியெல்லாம்
ஒளியெல்லாம் வளமாய் நீண்ட
கானெல்லாம் மலையெல்லாம் கடலெல்லாம்
நதியெல்லாம் கண்முன் தோன்றித்
தேனெல்லாம் தேனென்று தேடிவரும்
மொழிவழியே திகழு மன்றே. (18)

கடவுளும் கம்பனும்

538. கம்பன்என நீநின்ருய் கடவுளும்ஏ
கம்பன்எனக் களித்து நின்ருன்;
உம்பருயர் கலைமதியன் எனஉலகம்
உவந்துதொழ உலாவு கின்ருய்!
அம்பிகா பதிஎனஓர் அருமகவும்
பெற்றுள்ளாய்! அன்பு கண்டே
எம்பெருமான் உன்பரமாத் தன்பெருமை
காட்டியுள்ளான் இன்ப மூர்க்தே. (19)

ஏகம்பன் என்றது ஏகாம்பர ஈசுரனை.
காஞ்சிபுரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் பெயர்.
கலைமதியன்—பிறைசூடியபெருமான்.
அம்பிகாபதி—உமாதேவியின் பதி.

கம்பருக்கும் சிவபெருமானுக்கும் ஒருமையாய் உரிமை தோய்ந்து வந்துள்ள இது ஊன்றி உணர்ந்து கொள்ள வுரியது.

## 22. திருத்தக்க தேவர்.

**539.** திருத்தக்க தேவரெனும் திருநாமம்
உடையராய்ச் சிறந்து தோன்றி
உருத்தக்க உயிரினங்கள் உயர்போத
நெறியேறி உண்மை காணக்
குருத்தக்க மொழிஒளியால் கூரிருளை
நீக்கியருள் கோவே! உன்றன்
தருத்தக்க வண்மையுடன் தமிழ்ச்சுவையை
நுகர்ந்துள்ளார் தமிழ ரன்றே. (1)

**540.** சீவகன்றன் சீவியத்தைத் திவ்வியவோர்
காவியமாத் திகழச் செய்து
பாவகன்ற புலவரெல்லாம் பகைவேகள்
பயின்றுயரப் பண்பு காட்டி
நாவகன்ற சுவையாரும் நவையகன்று
தமிழ்ச்சுவையை நன்கு மாந்தப்
பூவகன்ற கலையுலகைப் புகழுமையப்
புனைந்தனையே புதுமை என்னே! (2)

**541.** காமத்தின் சுவைகண்டார் காமநூல்
என்கின்றார்; கரும நீதித்
தாமத்தின் நிலைகண்டார் தருமநூல்
என்கின்றார்; தவங்கள் சார்ந்த
நாமத்தின் நலங்கண்டார் ஞானநூல்
என்கின்றார்; நயந்தோர்க் கெல்லாம்
சேமத்தை யருளுகின்ற சீவகசிந்
தாமணியைச் செய்து தந்தாய்! (3)

542. ஈண்டுவந்த இப்பிறப்பின் இயல்தெரிந்து
செயல்தெளிந்து மயல்கள் நீங்கி
மீண்டுவந்து பிறவாமல் மெய்ஞ்ஞான
ஒளிமேவி மேலா யென்றும்
நீண்டுவந்த மானுடங்கள் நிலையான
நிலையடைய நேரே அன்பு
பூண்டுவந்து போதித்த புண்ணியத்தால்
தேவர்எனப் பொலிந்தா யன்றே. (4)

543. பவ்வியசீ வன்களே பண்புநலம்
படிந்துவந்து படிமீ தேறித்
திவ்வியபே ரின்பநிலை சேர்ந்துமகிழ்ந்
திருக்குமெனும் திருநூல் ஒன்றை
இவ்வுலகம் உய்ந்திடநீ இனிதருளி
யிருந்துமதை எண்ணு தந்தோ
வெவ்வியதீ வினைகளிலே விரைந்தோடி
விளிகின்றார் வெறியர் என்னே! (5)

544. தன்னுயிர்போல் மன்னுயிரைத் தான்பேணி
வரின்அதுவே தவமாய்ப் பொங்கி
உன்னுயிருக் கென்றுமே உயரின்ப
நிலையமாய் ஒளிசெய் தோங்கும்
பொன்னுயிராய் மணியுயிராய்ப் புண்ணியத்தின்
தனியுயிராய்ப் பொலிவாய் என்றே
மன்னுயிர்கள் உய்திபெற மதியமிர்தம்
வழங்கியவுன் மகிமை வாழி. (6)

# 23. காந்தியின் சாந்தி.

1948 ஜனவரி மாதம் 30ந் தேதி மாலை 5 மணிக்கு டில்லியில் பிரார்த்தனைக்குச் செல்லும்போது காந்தியடிகளை ஒருவன் சுட்டு வீழ்த்தினான்; அங்ஙனம் அவர் இறந்த நிலைமையை அறிந்த பொழுது நெஞ்சம் பரிந்து வருந்திப் பாடிய பாடல்கள்.

545. காந்தியெனும் பெயரோடு கதிரவன்போல்
உலகமெல்லாம் கனிந்து காணச்
சாந்திஒளி வீசிளங்கும் தண்ணளியே
புரிந்துவந்த தரும மூர்த்தி
மாந்தரினம் மறுகியழ மன்னுயிரெல்
லாம்கதற வானி லேறிப்
போந்தனையே இனியுனது புனிதமொழி
கேட்பதென்றோ புகல்வாய் அந்தோ! (1)

546. தன்னுயிர்நேர் போனாலும் தான்பிறர்க்குத்
துயர்செய்தல் தவறும் என்று
மன்னுயிர்க்குத் தெளிவாகக் கருணைவழி
போதித்து மதிமுன் காட்டிப்
பொன்னுயிர்க்கும் மொழிகளினால் புதியஒளி
செய்துவந்தாய் புனித னான
உன்னுயிர்க்கும் இவ்வாறோர் ஊறுவர
நேர்ந்ததே ஊழ்தான் என்னே? (2)

547. தோன்றிநின்ற உயிர்களெல்லாம் தோன்றாமல்
ஒழிகின்ற தொழிலே ஓங்கி
ஊன்றியுள்ள இவ்வுலகில் ஒருமனிதன்
உண்மையருள் உடைய னாகி
ஆன்றபெருந் தன்மையுடன் ஆருயிர்கட்
காதரவு புரியின் அன்னான்
வான்றிகழும் புகழோடு வயங்குவான்
என்பதுன்பால் வயங்கிற் றன்றே (3)

548. உண்மையுடன் எவ்வழியும் உறுதியாய்
ஒழுகிவரின் உயர்ந்த ஞானத்
திண்மைவரும் தெளிவுவரும் தேசமெல்லாம்
தொழுதுவரும் திறலார் வேந்தும்
எண்மையுடன் வணங்கிவரும் எண்ணியன
யாவுமே எளிதின் எய்தி
ஒண்மையுடன் வாழலாம் எனும்நிலையை
உன்வாழ்வே உணர்த்திற் றன்றே. (4)

549. எங்கணுமே பகைதீமை யாண்டுமே
நீண்டஇடர் எவருளத்தும்
சங்கைதிகில் பொங்கியெழச் சால்புநிலை
குன்றிவரத் தவித்த யர்ந்து
மங்கியபே ரிருள்வழியே மறுகிநிற்கும்
இந்நாளில் மதிபோல் நேரே
துங்கஒளி வீசிநின்ற சோதிஒன்று
மறைந்ததே துயரம் அந்தோ! (5)

550. ஐயகோ! என்றெங்கும் ஆருயிர்கள்
கதறியழ அகில மெல்லாம்
வெய்யதுயர் பரவியெழ விண்ணவர்கள்
கண்ணயர்ந்து வியந்து நோக்க
மெய்யருளின் உருவாகி மேவிநின்ற
காந்திமகான் மெய்யின் நீங்கிச்
செய்யதிரு மால்உருவாய்த் தேசுமிகுந்
தின்பநிலை சேர்ந்தா னம்மா! (6)

———

# 24. குருவின் பிரிவு.

எனது குரு இலக்கணமுத்தையா என்னும் பேரினர். என் மரபினர்; சிறந்த தவ ஒழுக்கமுடையவர்; துறவி நிலையில் விரத சீலராய் வாழ்ந்து வந்தார். அப் பெரியார் சமாதியடைந்தமை அறிந்த போது பரிந்து பாடிய பாடல்கள்.

551. ஆதரவாய்க் கற்பிக்கும் அருளது எங்கே
ஐயாஎன் றெனையழைக்கும் அருமை எங்கே
கோதகலப் புகல்தருநன் மொழிகள் எங்கே
கொவ்வையெனக் கனிந்தகுரு மணிவாய் எங்கே
பூதரம்போல் அசையாத புலமை எங்கே
பொய்யாமை முதலாய குணங்கள் எங்கே
ஆதிபரன் அடிமலர்க்கே உள்ளம் தந்த
ஐயனே இலக்கணமுத் தறிஞர் வேந்தே! (1)

552. சங்கையுடன் வந்தார்க்குச் சங்கை நீங்கத்
தகுமொழியால் இடம்காலம் நோக்கிச் சாற்றி
அங்கவரை உபசரிக்கும் ஆண்மை எங்கே?
அன்பெங்கே? அடக்கம்எங்கே? அருள்தான் எங்கே?
துங்கமறை ஆகமநூல் வழியே சென்ற
தூய்மைஎங்கே வாய்மைஎங்கே தொண்டர்போற்றும்
அங்கயற்கண் ணம்பிகைமன் பாதம் உற்ற
ஐயனே இலக்கணமுத் தறிஞர் வேந்தே. (2)

553. சிவனடியார் தமைக்கண்டால் சிவனே என்று
சிந்தைமகிழ்ந் தன்புகொண்டு செங்கை கூப்பி
நவமாய நல்விருந்தே வருக வென்று
நயமுரைக்கும் நண்பெங்கே நட்டோர்தம்மைத்

தவமுடைய ராயிருமின்! என்று சாற்றும்
சதுர்எங்கே தகைஎங்கே தமிய னேனை
அவன்என்ளுது ஐயவெனும் அஞ்சொல் எங்கே
ஐயனே இலக்கணமுத் தறிஞர் வேந்தே. (3)

554. கல்லாத புல்லியரும் ஓர்கால் நின்னைக்
கண்டாரேல் அவர்புன்மை முழுதும் செந்தீ
புல்லிரத வன்கதிரால் முற்றக் காய்ந்த
புன்சருகாம்; மொழிசிறிது புகலக் கேட்பின்
நில்லாத காயமிதன் நிலைமை தேர்ந்து
நீள்பிறவிப் புணரிதனை நீந்தா நிற்பர்
அல்லாரும் குழலுமைகோன் பாதத் துற்ற
ஐயனே இலக்கணமுத் தறிஞர் வேந்தே. (4)

555. மலர்தலைமா நிலமுழுதும் புகழ வாழ்ந்தோம்
வானுலகும் புகழ்ந்திடநாம் வாழ்வோம் என்றே
பலகலைகள் முழுதுணர்ந்த புலவர் இங்குப்
பார்ப்பதரிது ஆனாலும் பண்பு மிக்க
நலமுடைய ராயிருத்தல் அரிதென் றெண்ணி
நான்முகன்தன் உலகுற்று நயப்போம் என்றே
அலகிலா அன்பர்குழாம் நீத்தெழுந்தாய்
ஐயனே இலக்கணமுத் தறிஞர் வேந்தே. (5)

556. வானுலகத் தவர்உன்னை எதிர்கொண் டேத்தி
வருகஇங்கு வருகஎன வாழ்த்தி னாரோ
தேனொழுகு துழாயலங்கல் செங்கண் மாலும்
திசைமுகனும் சிந்தையுவந் தன்பு கொண்டு

கானுலவு கொன்றையணி வேணி நாதர்
கழல்கண்டோய்உன்பெருமைகண்டோம்என்றே
ஆனபரி வோடழைத்தவ் வுலகும் ருரோ
ஐயனே இலக்கணமுத் தறிஞர் வேந்தே. (6)

557. சிவஞான புரம்என்னும் பெயருக் கேற்பச்
சிவஞானம் எப்பொழுதும் திகழச் செய்து
பவஞானம் தனையகற்றிப் பதிஞானத்தைப்
பத்தியுடன் அடைந்தோர்க்குப் பரிந்துசாற்றும்
தவஞானப் பெருங்கடலே வாய்மை யன்பு
சாந்தமுதல் குணங்களெனும் மலர்கள் பூத்தென்
அவஞானம் தொலைத்தொளிர்பூந் தருவே எந்தம்
ஐயனே இலக்கணமுத் தறிஞர்வேந்தே. (7)

558. சீலமுடன் ஒழுகிவரு செயல்கள் காட்டிச்
சித்தத்தைச் சுத்தமாத் திருத்தல் காட்டிக்
காலமிடம் கருதிவரு கருமம் காட்டிக்
கண்டவுயிர்க் கிதம்புரியும் கருணைகாட்டி
ஞாலமறிந் தொழுகிவரு நயங்கள் காட்டி
நலம்பலவும் தெளிவாக நன்கு காட்டி
ஆலமர்ந்த பரன்காட்டும் அருமை காட்டும்
ஐயனே இலக்கணமுத் தறிஞர் வேந்தே. (8)

559. குண்டைமதி ஈரெட்டேழ் ஓணம் புந்தி
குலவியநாள் இருபதுநா ழிகைநேரத்தில்
தொண்டர்குழாம் புடைபரந்து துதிகள் கூறத்
துயரங்கள் பலர்கூரத் தோட மிந்த

மண்டலமீ திருப்பதினி மேலென் றெண்ணி
மாலயனும் மறைமுடியும் இன்னும் காணு
அண்டர்பிரான் திருப்பாதம் இருப்பாக் கொண்டாய்
ஐயனே இலக்கணமுத் தறிஞர் வேந்தே. (9)

குண்டைமதி—வைகாசி மாதம். 23ந் தேதி புதன் கிழமை பகல் 20 நாழிகையில் (5—6—1912) பரமபதம் அடைந்தார்.

560. காலையுச்சி மாலையிந்த மூன்று காலும்
கைபூசி முகம்பூசிக் கங்கை தும்பை
மாலையணி வேணிமுடி வரதன் மெய்மை
மாருத வெண்ணீற்றை மலர்க்கை ஏந்திச்
சீலமுடன் விதியோடு குழைத்து மூன்று
தீக்குணங்கள் தமைவென்றே மென்று தீட்டும்
ஆவியெனும் குறியினியான் என்று காண்பேன்
ஐயனே இலக்கணமுத் தறிஞர் வேந்தே. (10)

561. திருமுகம்யான் தெரிசிக்கப் பெறுமல்அந்தோ
சிந்தைமிக நொந்தயர்ந்தேன் தேசிகாநின்
பொருவிலருட் கழகாமோ போந்தெனக்கோர்
பொய்யாத மொழிபுகன்றல் போக்குண்டாமோ
கருமுகம்புக் கினிவருந்தா வண்ணம் காத்துக்
கடையேனை ஆண்டருளக் கதிர்வேல் அண்ணல்
மருமலர்ச்செம் மலரடியென் உள்ளம் வைக்கும்
வகைபுரிந்த கவிவேந்தர் வேந்தே வாழி. (11)

# 25. நமது நாடு.

562. இந்தி யானனும் இந்தநன் னாட்டினில்
முந்தி யாவரும் நின்ற முதன்மையைச்
சிந்தி யாதவர் சிந்தை தெளிந்திடத்
தந்தி யானனன் தாண்மலர் ஏத்துவாம். (1)

563. புள்ளி மாமயில் ஊர்ந்தருள் புண்ணியன்;
வள்ளி நாயகி வாரிய தெள்ளமுது
உள்ளி னோர்க்கருள் ஊற்றமு தாயஒளிர்
வள்ளல் வந்தர சாண்டதிவ் வையமே. (2)

564. தாயும் தந்தையும் தம்முதல் தெய்வமா
ஆயும் சிந்தை அமைந்தஇந் நாட்டவர்
வாயும் கையும் வழங்கிய வாய்மையைப்
பாயும் அன்புடன் பார்ப்பது பார்வையே. (3)

565. பிறந்த நாட்டினைப் பெற்றதன் தாய்என
நிறந் தெரிந்தெவன் நெஞ்சில் நினைந்துளான்
அறந்த வாஅவ் அருந்திற லாளனே
பிறந்த ஆண்மகன் பேருல கோர்மகன். (4)

566. புத்தர் தோன்றிய புண்ணிய நாடென
முத்தர் தோன்றி முதன்மைசெய் நாடென
அத்தர் தோன்றி அருள்புரி நாடென
உத்த ரம்சொல உற்றதிந் நாடரோ. (5)

567. வீர நாடென மேன்மை மிகுந்தது;
தீர நாடெனத் தேசு மிளிர்ந்தது;
பார நாடெனப் பண்பில் உயர்ந்ததே;
ஈர நாடென இன்பில் எழுந்ததே. (6)

568. கூடு வாழும் குருவிக் கிடம்; உடல்
ஊடு வாழும் உயிர்க்கிடம்; மாந்தர்க்கு
வீடு வாழிடம்; மேவிய யாவைக்கும்
நாடு வாழிடம் நாடுக நாமமே. (7)

569. தாயின் தன்மையில் தாயக மாயருள்
மேய நாட்டினில் மேவியு ளோமதன்
தூய நன்மையைத் தொன்மையின் மேன்மையை
நாய கம்பெற நாம்செய வேண்டுமே. (8)

570. நாட்டுக் கான நலங்களை நாடுக
கூட்டுக் கான குணங்களைக் கூடுக
தேட்டுக் கான செயல்களைத் தேடுக
வீட்டுக் கான விதங்களை மேவுக. (9)

571. மனிதன் ஆகி மருவிநீ வந்துளாய்
இனிய நீர்மைகள் எய்தி இயங்குக
புனிதம் நாடு பொருந்தி உயர்ந்திடக்
கனியு மேன்மைகள் காட்டி வயங்குக. (10)

572. பெற்ற தாயினைப் பேணுதல் போலவே
உற்ற நாட்டின் உயர்வினை ஓம்புக;
குற்றம் நீங்கிக் குணங்களில் ஓங்குக;
வெற்றி நாட்டி வினைகளை ஆற்றுக. (11)

573. அறிவும் ஆற்றலும் ஆண்மையும் மேன்மையும்
நெறியும் நீர்மையும் நின்னிடம் மேவினல்
செறியும் நாட்டின் சிறப்பினுக் கானநற்
குறிகள் ஆகும் குணங்களைப் பேணுக. (12)

574. ஊக்கி யாண்டும் உழைப்பவன் நாட்டுக்குப்
பாக்கி யம்செயும் பான்மையன் ஆகுவான்;
தேக்கி நின்று செயலிழந் தானெனின்
ஆக்கம் கெட்டவன் ஆண்மை யிழந்தனன். (13)

575. ஈன்ற தாய்க்கிதம் இன்புறச் செய்கின்ற
தோன்றல் தோற்றமே தோற்றம தாகுமால்;
ஈ ்ற நாட்டினுக் காதர வாற்றிநீ
ஏன்ற தோற்றத்தை ஏற்றம தாக்குக. (14)

576. பிறந்த பிள்ளை பெருமை யுடையதேல்
சிறந்த அக்குடி சீர்த்தி அடைந்திடும்;
உறைந்த நாடும் உதித்தவர் மேன்மையால்
நிறைந் துயர்ந்து நெடிது திகழுமே. (15)

577. நல்ல தன்மைகள் உன்னிடம் நண்ணினல்
செல்ல நன்மகன் ஆகித் திகழுவாய்;
புல்லன் ஆகிப் புலைகள் படிந்திடின்
அல்லன் ஆகி அவலம் அடைகுவாய். (16)

578. தேசம் தேசுறத் தேர்ந்து செய்கலை
ஆசை யாக அறிவுடன் ஆற்றுக
ஈசன் இன்னருள் எய்தி இருமையும்
வாசம் ஆக வரும்புகழ் வாழுமே. (17)

579. காட்டில் உள்ள மரங்களும் காய்கனி
நீட்டி நின்று நிலத்துக் குதவுமே!
நாட்டில் உள்ளநீ நாடி நலங்களை
ஊட்டி யார்க்கும் உதவுக ஓர்ந்துமே. (18)

580. உற்ற நாட்டில் உறைகின்ற மக்கள்தாம்
குற்றம் நீங்கிக் குணங்களில் ஓங்கவும்
மற்ற நாட்டவர் மாண்புகள் காணவும்
சுற்றம் காட்டித் தொடர்வது தூய்மையே. (19)

581. உன்னைத் தாங்கி உறுதிகள் தந்துநல்
அன்னை ஆகி அமைந்துள நாட்டினைப்
பொன்னைப் போற்றுதல் போலநீ போற்றுக
நின்னைப் போற்றும் நெடிய வுலகமே. (20)

582. சீவ கோடிக ளுக்கிதம் செய்பவன்
தேவ தேவனைத் தேர்ந்தெதிர் காண்கின்றான்;
ஏவ ரேனும் இதம்புரி வார்உயர்
தேவ ராகிச் சிறந்து திகழ்கின்றார். (21)

583. புலையை நீக்கிவெம் புன்மையைப் போக்குக;
நிலையை நோக்கி நெறிகளில் ஏகுக;
மலையை நோக்கி மதிநலம் பேணுக;
கலையை நோக்கிக் கதிநலம் காணுக. (22)

584 உண்மை பேசி உயர்நலம் எண்ணுக;
எண்மை யாகி எவர்க்கும் இரங்குக;
தண்மை நீதி தழுவி ஒழுகுக;
வெண்மை நீங்கி விதிவழி ஓங்குக. (23)

585. உரிய நாட்டின் உயர்வினை ஓம்புக;
பெரிய நாட்டன் எனும்படி பேணுக;
அரிய நாட்டம் அவாவி அருளுக;
பிரிய நாட்டம் பெருகி வருகவே (24)

586. ஈன்ற நன்மகன் எவ்வழி யும்உயர்
ஆன்ற மேன்மகன் ஆய்வரின் அன்னையன்
மூன்ற உள்ளம் உவகையில் ஓங்குவாள்
தோன்றல் என்று தொழுமிவ் வுலகுமே. (25)

587. உன்னை ஈன்றருள் உத்தம ராகிய
அன்னை தந்தையை அன்புடன் பேணுக;
நின்னை எண்ணி நிமலனை நாடுக;
பின்னை இந்தப் பிறவி பெயருமே. (26)

588. ஈன்ற தாய்நமக் கிந்தியா இங்குநாம்
தோன்ற லாகித் துலங்கி யுளோம்இதன்
ஆன்ற மேன்மைக் கணுவள வாயினும்
சான்றன் ஆகும் தகுதியைச் சாருக. (27)

589. ஐயர் பிள்ளை முதலியார் ஆதியா
வைய மாந்தர் வழங்கப் படுகின்றார்
மெய்யில் உள்ளதை மெய்யா அறியினே
மையல் நீங்கி மகிமை அடைகுவார். (28)

590. நாளும் நல்லன நாடி நீ வாழினே
நீளும் இன்பங்கள் நீர்மையும் சீர்மையும்
கேளும் கேண்மையும் ஆகக் கெழுமியே
ஆளும் மேன்மைகள் யாவும் அருளுமே. (29)

591. உள்ளம் அன்பில் உருகி வருந்தொறும்
கள்ளம் துன்பம் கழியும் உயரின்பம்
வெள்ளம் பொங்கி விரியும் வியன்பயன்
கொள்ள அன்பின் குணங்களைக் கொள்ளுக. (30)

———

# 26. சாந்தி நிலை.

592. இந்தி யாவில் இருந்துள மாந்தர்முன்
புந்தி யாலுயர் போதனை யால்அருள்
முந்தி யான முதன்மைக் கொடையினால்
வந்தி யாவரும் வாழ்த்திட வாழ்ந்தனர். (1)

593. இன்று வாழ்பவர் ஈன நிலைகளில்
ஒன்றி ர்
நன்று ந்
சென்று சென்று சிறுமைகள் சேர்கின்றார். (2)

594. ஈன மான இழிபழக் கங்களே
மான மான மனிதரை மாக்களின்
தான மாகவே தாழ்த்தித் தளைத்துள;
ஊன மானதை ஓர்கிலர் ஊனர்கள். (3)

595. குட்ட நோயினும் கோதுகள் மிக்கன
கெட்ட எண்ணங்கள்; கேடர் அவற்றையே
ஒட்டி ஒட்டி உலகத்தை நீசத்தின்
பட்டி யாகப் பழுதுகள் செய்துளார். (4)

596. மெய்யை விட்டனர் மேன்மையை அட்டனர்
பொய்யைத் தொட்டனர் புன்மையை நட்டனர்
வையம் வைய வசைகள் வளரவே
ஐய கோஇவர் வாழ்வ தவலமே! (5)

597. ஈனத் தீயர் எழுபது கோடியாய்ப்
பானத் தோடு படர்ந்து வளரினும்
ஞானத் தூயன் ஒருவனை நாடியே
மானப் பூமி மகிழ்ந்துள தாகுமே. (6)

598. காலம் என்னும் கருதரும் தெய்வத்தின்
மூலம் உன்னி முடிவை நினைந்துமே
ஞாலம் இன்புற நாடி நடந்தவர்
மேலை இன்பத்தை மேவுவர் மெய்யிதே. (7)

599. கள்ளம் தீமை கனவிலும் காண்கிலாது
உள்ளம் தூய்மை யுறின்நலம் யாவுமே
பள்ளம் பாயும் புனலெனப் பாய்ந்தின்ப
வெள்ளம் மேவி விரைந்து விரியுமே. (8)

600. நீச எண்ணங்கள் நீசன் எனச்செய்து
நாசம் ஆக்கி நரகத்தில் தள்ளுமே;
ஈசன் நேசம் இறையளவெய்தினும்
தேசும் இன்பமும் சேர்ந்து திகழுமே. (9)

601. கண்ணில் மாசு படிந்திடில் காண்பொருள்
நண்ணி முன்எதிர் நிற்பினும் நாடிடார்;
எண்ணில் மாசு புகுந்திடின் ஈனமாய்
மண்ணில் மாய்ந்து மடிந்து கழிவரே. (10)

602. புன்மைத் தீமைகள் பொங்கி எழுந்துள;
நன்மை மேன்மைகள் நாசம் அடைந்துள;
தன்மை நீர்மை தளர்ந்து மடிந்துள;
வெம்மை எங்கும் விரிந்து பரந்துள. (11)

603. பொய்யும் சூதும் புலையும் களவுமே
வையம் எங்கும் வளர்ந்துள மானிடர்
வெய்ய தீய வெறிகளில் ஓடியே
ஐய கோஅவ மாயழி கின்றனர். (12)

604. செத்தொ ழிந்தபின் சேர்வது யாதென
உய்த்து ணர்ந்திலர்; ஊன வழிகளில்
பித்தம் ஏறிப் பிழைகளில் மீறியே
மத்த ராகி மருண்டுழல் கின்றனர். (13)

605. நாட்டி யக்கலை நாட்டில் எழுந்தள,
பாட்டி யற்கலை பாடுற வந்தள,
தேட்டி யற்கை செழித்தள என்றுமே
கோட்டி கொண்டு குலாவுகின் றூர்பலர். (14)

606. ஊன மான வழிகளில் ஓடியே
ஈன மாகி இழிந்துழல் கின்றனர்;
மான வீரர்போல் வாய்மொழி கின்றனர்
ஞான சூனியர் நாட்டிற் கவலமே. (15)

607. காதல் காட்சியைக் கண்டு களித்துளம்
ஊதல் ஆகி உழந்துழல் கின்றனர்
ஓதல் ஆதி ஒழிந்து கழிந்தனர்
சாதல் காணத் தவித்தயர் கின்றனர். (16)

608. தீய எண்ணம் திணையள வாயினும்
நேய நெஞ்சில் நினைவுற நேரினே
மாய வன்துயர் மாமலை யாய்வரும்
ஆய தீமை அணுகா தகலுக. (17)

609. உள்ளம் தூய்மை யுறினது பேரின்ப
வெள்ளம் ஆகி விரிந்து விளங்குமே;
கள்ளம் தீமை கடுகள வாயினும்
அள்ள லான அடுநர காகுமே. (18)

610. தோன்றி வந்து தொடர்ந்த பிறவியை
ஆன்ற சீருடன் ஆக்கி அறந்தனை
ஊன்றி நின்றுநல் உய்தியைக் காணுக
என்ற தின்றெனில் என்றும் துயரமே. (19)

611. நெஞ்சைப் பேணி நெறியுடன் வாழ்பவன்
அஞ்சை வென்ற அருந்தவன் ஆகுவான்;
மிஞ்சி நின்ற வியன்பயன் காணுவான்;
பஞ்ச மின்றிப் பரனிலை பூணுவான். (20)

612. நின்று நின்று நெளிந்து மடிந்துபின்
ஒன்றும் இன்றி ஒளிந்தொழி கின்றதே
என்றும் இந்த உலகியல் என்பதை
நன்று கண்டும் நலம்ஒன்றும் காண்கிலார். (21)

613. மாய வாழ்க்கையில் மையல் மயக்கங்கள்
நேய மாக நெடிது நிமிர்ந்துள;
தீய காமிக ளாகத் திரிகின்ற
பேயர் மாந்தர் எனப்பெயர் பெற்றுளார். (22)

614. எண்ணம் நன்மை எனின்அவன் இன்பமே
வண்ணம் ஆகி வளர்ந்து மகிழ்கின்றான்;
எண்ணம் தீமை எனின்அவன் துன்பமே
வண்ண மாகி வருநர காழ்கின்றான். (23)

615. உண்மை யீதை உணர்ந்துன துள்ளத்தைத்
தண்மை ஆகத் தகவுடன் பேணுக;
எண்மை ஆக இரங்கி இதம்செய்க
அண்மை ஆகும் அரும்பெறல் இன்பமே. (24)

616. பிறந்து வந்து பெருகி இருந்தனை
இறந்து போகுமுன் என்பயன் எய்தினை?
திறந் தெரிந்துபின் சேர்வதை நாடுக
அறந் தெரிந்துனை ஆளுக நாளுமே. (25)

617. மாய வாழ்வை மறந்தும் மதித்திடேல்
தூய வாழ்வைத் தொடர்ந்து நடத்துக
தீய சூழல்கள் தீங்குகள் செய்திடும்
ஆய பாழ்கள் அணுகா தகலுக. (26)

618. உள்ள ஆசை ஒழியின் உயரின்பம்
வெள்ளம் ஆக விரிந்து விளங்குமே
கள்ள ஆசை படியின் கடுந்துயர்
எள்ளல் ஈனங்கள் எங்கணும் ஏறுமே. (27)

619. சித்த சாந்தி சிறந்த பெருந்திரு
முத்தி இன்பம் முடிந்துள தன்னதில்
ஒத்த பேரின்பம் உள்ளத்தைச் சுத்தமா
வைத்தி ருப்பதே வாய்மையீ தென்றுமே. (28)

620. உன்னை உள்ள படிநீ உணர்ந்தையேல்
பின்னை ஏது பிறவி? பிறந்துள
இன்னல் யாவும் இரவி எதிர்இருள்
அன்ன தாக அழியும் அறிந்துகொள். (29)

621. பாச பந்தங்கள் பற்றப் பலதுயர்
நீச மாக நிமிர்ந்தன நின்னையும்
தேச ழித்துச் சிறுமைகள் செய்தன
ஈச னாக இருந்ததை எண்ணிலை. (30)

622\. நெஞ்சம் தீமைகள் எண்ணினால் நீசனாய்
நஞ்சை உண்டல்போல் நாசமே காணுவாய்
நெஞ்சம் நன்மைகள் நேடி நிலவுமேல்
செஞ்ச டைப்பரன் தேசுகள் சேருமே. (31)

623\. வந்து தோன்றினை மானிட னாகிநீ
இந்த மாநிலத் திங்கண் இருந்துளாய்!
முந்தை எங்கண் இருந்தனை? மூண்டுநீ
சிந்தை செய்து தெளிக தெரிந்துமே. (32)

624\. பெற்ற இந்தப் பிறவிக் குறுபயன்
உற்ற உன்னைநீ உண்மையா ஓர்தலே
மற்ற யாவையும் மையல் மயக்கமே
முற்றும் ஓர்க முடிவினை முந்தியே. (33)

625\. செல்வம் பெற்றுச் செருக்குகள் செய்கின்றார்;
கல்வி கற்றுக் களிப்புகள் காண்கின்றார்;
பல்வி தத்திலும் பாழ்களே பார்க்கின்றார்;
நல்வி தத்தினை நாடுவார் இல்லையே! (34)

626\. இறந்து போகுமுன் எற்ற பிறவியைச்
சிறந்த தாளவன் செய்தனன் அன்னவன்
பிறந்து இறந்து பெருகி வரும்சுழல்
துறந்து செல்கின்ற தூயவன் ஆவனே. (35)

627\. ஈசன் எங்கும் எழில் ஒளியாகவே
வாசம் ஆகி வளர்ந்து பரந்துளான்
நேசம் எவ்வுயிர் பாலும் நிறையினோ
பூசை அன்னது புண்ணிய மாகுமே. (36)

628. தேகம் இன்னது தேகத்தின் உள்ளுறை
தேகி இன்னவன் என்று தெளிந்தவர்
மோகம் நீங்குவர் முத்தியும் காண்குவர்
சோகம் நீங்கியே சோதியும் ஆகுவர். (37)

629. அன்னையும் தந்தையும் அரிய தெய்வமாய்
முன்னைநீ வழிபட முதலில் நின்றனர்
சொன்னஇவ் இருவரைத் தொழுது வாழினோ
உன்னைமூ வுலகமும் உவந்து போற்றுமே. (38)

630. சாதியும் மதங்களும் சடங்கும் சார்புமாய்
மோதிமுன் மூண்டுள முழுதும் நீங்கியே
ஆதியும் அந்தமும் யாதும் இல்லதோர்
சோதியைத் தோய்ந்துநீ தூய னாகுக. (39)

631. பொருளையே நாடிநீ புலையில் ஓடினால்
மருளையே நாடிய மடையன் ஆகுவாய்!
அருளைமுன் நாடினோ அறமும் இன்பமும்
தெருளுமுன் எதிர்வரும் தெளிக தேர்ந்துமே. (40)

632. பணம்பணம் என்றுநீ பரிந்து சாகின்றாய்!
குணம்பெற நின்றுளம் கோது நீங்கியே
மணம்பெற வாழ்ந்துமுன் மறைந்த மாதவர்
கணம்பெற நாளுமே கருதி வாழுக. (41)

633. பொய்மொழி புகலினோ புலைய னாகியே
வெய்யவெந் தீமைகள் நலிய வீழ்குவாய்!
மெய்யைநீ மேவினோ மேன்மை யாவுமே
கையகம் காணுவாய்; கதியும் பூணுவாய். (42)

634. ஆன்ம நோக்கம் அதிசய ஆக்கமாய்
மேன்மை எய்தி விரிந்து விளங்குமே
பான்மை யுள்ளம் பதியப் பரனருள்
நோன்மை மாதவம் நோன்புக ளாகுமே. (43)

635. புனித எண்ணங்கள் புண்ணியன் ஆக்கியே
மனிதன் தன்னை மகான்எனச் செய்யுமால்;
இனிய நீர்மைகள் இன்னமு தாம்அவை
கனிய நின்று கதிநலம் காணுக. (44)

636. மணத்தினல் மலரினம் மகிமை யாம்உயர்
குணத்தினல் மனிதனும் குலாவி ஓங்குவான்;
பணத்தினல் பெருமைகள் படரு மாயினும்
குணத்தினல் உறுவதே கோடி கோடியே. (45)

637. ஒழிவிலா ஆசைகள் ஒழிந்த போதுதான்
அழிவிலா ஆனந்தம் அடைய நேருமால்;
இழிவுகள் பலசெய்யும் ஈன இச்சையைக்
கழிவுசெய் அளவுதான் கதிமுன் காணுமால். (46)

638. சிவனிட மிருந்துதான் சீவன் வந்துளான்
அவனிடம் அடையவே அவாவி நின்றுளான்
தவம்அருள் தூய்மைகள் தழுவி வாழிலே
பவமறும் பரனருள் பரவி ஓங்குமே. (47)

639. உடலுயிர் மருவியே உலகில் வந்துளாய்
கடல்மலை நிலைகளைக் கண்ணில் காண்கின்றாய்
அடலுறு பிறவியின் அமைதி நோக்கியே
திடமுடன் உய்தியைத் தெளிக தேர்ந்துமே. (48)

640. மண்ணுலகு ஆளினும் மருவி மேலுள
விண்ணுலகு ஆளினும் விளிந்தொ ழிந்துமே
எண்ணரு துயரங்கள் எய்த நேருமால்
அண்ணிய பிறவிபோய் அறுதல் இன்பமே. (49)

641. மாசுகள் மனத்திடை மருவு றுமலே
தேசுகள் வளர்த்துநீ தெளிந்து மேல்வரின்
ஈசனின் அருள்வரும் இன்பம் யாவுமே
பேசரும் படிவந்து பெருகி நிற்குமே. (50)

642. உலகக் காட்சிகள் உன்னுயிர்க் கென்றுமே
கலகக் காட்சிகள் ஆகும் கருதிநீ
புலமைக் காட்சியில் போதம் பொருந்திடின்
தலைமைக் காட்சி தழைத்தினி தோங்குமே. (51)

643. சாக வந்திங்குச் சார்ந்துள தன்மையை
யூக மாக உணர்ந்துயிர்க் கூதியம்
வேக மாக விழைந்தெவன் பெற்றனன்
யோக வானவன்; ஊனர் ஒழிந்தவர். (52)

644. உள்ளம் பண்பாய் உயர்ந்து வருந்தொறும்
கள்ளம் தும்பாய்க் கழிந்து படும்இன்ப
வெள்ளம் முன்பாய் விரிந்து விரைந்துமே
பள்ளம் தோயும் புனலெனப் பாயுமே. (53)

645. சோதி யாய்ஒளிர் தூய பரமனை
ஆதி யாய அமலனை ஆர்வமாய்
நீதி யான நெறியுடன் நேரினே
பேதி யாது பிறவி பிறழ்ந்துமே. (54)

646. சேர்ந்து வந்து பிறந்தவர் யாவரும்
சார்ந்த வண்ணமே சாருவர் ஆதலால்
ஓர்ந்து தாயர் உறவை உரிமையாத்
தேர்ந்து கொள்ளுக தேசுகள் சேருமே. (55)

647. துக்கம் இன்றிச் சுகமுடன் வாழவே
மக்கள் எங்கும் மருவி விழைந்துளார்
ஒக்க இன்பம் உறுவ துளத்துளே
தக்க நீர்மை தழையத் தழையுமே. (56)

648. பிறந்து வந்து பெருகி வளர்ந்தனை
மறந்து நின்னை மறுகி மயங்கினை
இறந்து போகுமுன் எய்த வுரியதைச்
சிறந்து நின்று தெளிவுடன் சேருக. (57)

649. புனித எண்ணம் பொருந்தி வளரினோ
இனிய னாகி இதம்பல எய்துவாய்
மனித னாகிநீ வந்துள வாய்மையைக்
கனியும் அன்பொடு கண்டு தெளிகவே. (58)

650. வெளிமுகம் நோக்கிநீ விரிந்து பார்க்கினோ
ஒளிமுகம் இழந்தனை; உன்னை நோக்கினோ
தெளிவொடு தேசுகள் செறிந்தெ ழுந்துமே
களிமகிழ் வுடையனாய்க் கதிமுன் காணுவாய்! (59)

651. கையும் கால்களும் கண்களும் நீயல;
மெய்யுள் ஓர்ஒளி மேவி யுளதது
தெய்வ நீர்மையும் சீர்மையும் சேர்ந்தது
உய்யும் நீஅதன் உண்மை யுருவமே. (60)

652. எங்கும் உள்ள பரம்பொருள் உன்னுளே
தங்கி நிற்கும் தகவை அறிந்தையேல்
அங்கும் இங்கும் அலைந்தயல் ஓடியே
மங்கி நிற்கும் மயல்கள் ஒழியுமே. (61)

653. எல்லவன் எல்லையை எண்ணி நோக்கியே
ஒல்லையில் ஒன்பது கோடி என்கின்றாய்
மெல்லவுன் நிலைமையை மேவி நோக்கினால்
அல்லல்கள் ஒழியுமே அறிதி யாவுமே. (62)

654. இன்பமே வேண்டுமென்று எண்ணி ஏங்குவார்
துன்பமே தருகின்ற தொடர்பைத் தோய்ந்துமே
அன்புடன் ஆற்றுவார் அறிவு கேடர்கள்
பின்பிவர் அழுவது பேதைப் பேய்மையே. (63)

655. அல்லல்இல் லாமலே அரிய மேன்மையாய்
நல்லபல் வளனுடன் வாழ நாடினே
பல்லுயிர் தம்மையும் பரிந்து பேணுக
புல்லிய அருளையே பொருந்தி வாழுக. (64)

656. ஆடென மாடென அயல் இழிந்தவெம்
பாடுறு பிறவியில் படிந்தி டாமலே
நீடுறு மனிதனாய் நேர்ந்து வந்துளாய்
கூடுக இதனுயர் குறிப்பைக் கூர்ந்துமே. (65)

657. எடுத்தஇப் பிறவியே இறுதி யாயுற
அடுத்தஎப் பிறவியும் அணுகி டாமலே
தடுத்தவன் எவனவன் தனிய னாகுவான்
உடுத்தபா ருலகெலாம் ஒளிசெய் தோங்குவான். (66)

658. அமைதிநிம் மதியென அமைந்த நீர்மைகள்
உமையொரு பாகனின் உரிமை யாமவை
சமைவுறத் தன்னிடம் சார நேரினே
இமையவர் உலகமும் எதிர்வந் தேத்துமே. (67)

659. புனிதநன் னீர்மைகள் புகுந்த போதுதான்
மனிதனும் மகான்என மகிமை காணுவான்
தனிஒரு பரனருள் சார நேருவான்
இனியபே ரின்பங்கள் யாவும் எய்துவான். (68)

660. உன்னுளம் தூய்மையா யுயரின் ஓங்கிய
மன்னுயிர் யாவுமே மதித்து வாழ்த்துமே
நின்னுளே உயர்வுகள் நிலைத்து நின்றுள
பின்னுளல் பிழையுனைப் பேணி வாழுக. (69)

661. தனிமையில் இனிமையைச் சார்ந்து காணுக;
துனிமையல் ஒழிந்துளம் தூய னாகுக;
மனுமுறை நெறியினில் மருவி வாழுக;
தனிமுதல் அருளைனைத் தழுவிச் சூழுமே. (70)

662. அதிசய ஆனந்தம் ஆன்ம போகமாய்
மதியுயர் அமிர்தென மலிந்து பொங்குமால்
விதிமுறை ஒழுகிய விழுமி யோர்களும்
துதிசெய்து தொழுவது தோய்க என்றுமே. (71)

663. சத்தியம் கருணைமெய்த் தருமம் சார்ந்துநீ
நித்திய நியமமா நெறியில் வாழுக
கித்தியும் செல்வமும் சிறந்த சீர்த்தியும்
முத்தியும் வந்தெதிர் முந்தி நிற்குமே. (72)

# 27. புண்ணிய வாழ்வு.

664. உலகப் படைப்பில் உயிர்கள் உயர்ந்தன;
உயிரினங்களுள் மனிதன் உயர்ந்தவன்;
புல்லிய பிறவிகள் எல்லாம் கடந்து
நல்லியல் படைந்து நயனுற வந்துளான்;
5. பேசும் இயல்பினன்; பேணி எதையும்
நேசமா நினைந்து நிலைகளை அறிபவன்;
அரியன ஆற்றி உரியன போற்றிச்
சீரும் சிறப்புமா வாழ வல்லவன்;
உயிர்நிலை ஓர்ந்து பரநிலை தேர்ந்து
10. செயிரறு நிலையைச் சேர வுரியவன்;
எடுத்த பிறவிக்கு இனிய பெரும்பயன்
அடுத்த பிறவி அடையாது அமைதல்
என்னும் உண்மையை உன்னி உணர்பவன்;
கல்வியும் செல்வமும் கண்கள் ஆக
15 நீதியும் தருமமும் செவிகள் ஆக
நாடி உணர்திறம் நாசி ஆக
உறுதியும ஊக்கமும் கைகள் ஆக
ஆண்மையும் மேன்மையும் கால்கள் ஆக
வாய்மை வாயாத் தூய்மை நெஞ்சா
20. என்றும் எங்கும் செவ்வியன் ஆகிக்
கருணை தோய்ந்து கதிநிலை ஆய்ந்து
கால நிலைகளைக் கருதி உணர்ந்து
பருவங்கள் தவருமல் கருமங்கள் புரிந்து
சீலம் பேணிச் சீர்மை நிறைந்து

25. ஞாலம் பேண நலம்பல நாடி
இருமையும் இன்புறும் இயல்பு தெரிந்து
நித்திய அநித்திய நிலைமை தெளிந்து
துன்பப் புலைகள் தொடரா தொதுங்கி
இன்பத் திரள்கள் எங்கும் பெருக
30. அன்பும் அடக்கமும் அமைதியும் அமைந்து
பண்பு நலங்கள் பலவும் படிந்து
தன்னுயிர் என்ன மன்னுயிர் ஓம்பிப்
புல்லும் செடியும் புதலும் கொடியும்
கல்லும் மரமும் கடலும் மலையும்
35. கண்டன யாவும் கடவுள் உருவமா
எண்ணி எவ்வழியும் தண்ணளி சுரந்து
அண்ணிய புலன்வழி அலையா தடங்கித்
திண்ணிய நிலையில் செறிந்து சிறந்து
மருளியல் நீங்கி அருளியல் ஓங்கி
40. இருளுறு கருள்கள் எவையும் கடந்து
தனிமையில் இனிமை சால்புடன் நுகர்ந்து
துனிமயல் ஒருவிச் சுகநிலை தழுவி
மனம்மொழி மெய்கள் புனிதமா ஒழுகின்
புண்ணிய வாழ்வாய்ப் பொலிந்து விளங்கி
45. எண்ணிய யாவும் இனிதின் எய்தி
விண்ணும் மண்ணும் வியந்து மகிழ
மன்னிய கதியை மருவித்
துன்னிய இன்பம் தோயு மன்றே.

